**Moliya Valikal**

**(A new Novel from Norway)**

**First Edition**

**August 2018**

**ISBN:** 978-0-244-40626-4

**Publication Editor**

**R.Thiagalingam**

**Vetlandsveien 117**

**0686 Oslo**

**Norway**

**Pages: 229**

**Printed & Published by**

**Lulu.com**

# என்னுரை

ஈழத்தமிழர்கள் விரட்டப்பட்டதால் கூடு கலைந்த குருவிகளாய் தற்போது உலகத்தின் ஆதி அந்தம் எங்கும் பரந்து வாழ்கிறார்கள். இயற்கைக்குச் சவால்விட்டு, புவனத்தில் எங்கும் வாழும் இடத்தை வரித்துக் கொள்ளும் ஓர்மம் அவர்களின் தனிப்பண்பாகியது. கருமை வழியும் காகங்களை முன்னோர்களாகப் பார்த்து உபசரித்த பண்பாடு எங்களுடையது. காகத்திற்கு உணவு படைத்து விரதம் முடிக்கும் எங்கள் தாற்பரியம் இங்கு இல்லை என்றாலும் அங்கு எமது பிதிர்கள் உண்ட பின்பு நாங்கள் உண்பது தர்மமாகியது. மத்திய கோட்டு வெப்ப வலையக் காகங்களைத் துருவத்தோடு இணைப்பது நியாயமா? காகங்கள் துருவத்தில் இருக்கும் என்று நாங்கள் கனவுகூடக் கண்டதில்லை. துருவத் தேசம் வந்து, அந்த வெளிறிய காகங்களைக் கண்ட போது அந்தப் பறவையின் வல்லமை விளங்கியது. காகம் பறக்காத ஊருமில்லை காரைதீவான் செல்லாத இடமும் இல்லை என்கின்ற செல்ல வசை மொழி எங்கள் உருக்கு உண்டு. மண்ணைப் பிடுங்க முடியாதவன் மனிதனைப் பிடுங்க வேண்டியது இயற்கையின் தவிர்க்க முடியாத நியதி. வியாபாரம் என்பதை அவர்கள் தேடிப் போக வேண்டியது அவர்கள் யதார்த்தம். சிங்கள தேசத்தில் வியாபாரம் செய்தவர்கள் வாங்கிய அடி தீவுகளில் மிகவும் ஆரம்பத்திலேயே தேசியத்தைச் செழிக்க வைத்தது. அது பின்பு புலப்பெயர்வைச் சர்வதேச அளவில் விஸ்தரித்தது.

சரி அலாஸ்காவிற்கு அண்மிய தேசத்திற்கு மீண்டும் வருவோம். நோர்வேயில் காகங்கள் வாழ்கின்றன. காகத்தின் இசைவாக்கம் என்னை எப்போதும் இங்கே பிரமிக்க வைக்கிறது. அவையும் ஆரம்பக் காலத்தில் எங்களைப் போல் வந்தேறு குடிகளாகத் துன்பங்களை அனுபவித்து இருக்கும். தமிழர்களும் ஓயாது ஒளியாது உழைத்து, உறவுகளை அழைத்துப் பெருக்கி, ஒரு காலத்தில் காகம் செய்யும் வேலைகளைச் செய்து, இன்று வந்தேறுகுடிகள் இப்படி இருக்க வேண்டும் என்கின்ற உதாரணமாய் உயர்ந்ததிற்குக் காரணம் தமிழர்களின் விடாப்பிடியான ஊக்கம்.

வெளித் தோற்றம் இப்படி இருந்தாலும் வலிகள், இரணங்கள், குமுறல்கள், சாம்பல் புனைந்த தணல்களாக,

வேதனைத் தணியாத பேசாப் பொருளாக, பல மனங்களில் இன்னும்... இன்றும்... என்றும்...

வாழ வந்த இந்தத் துருவ தேசத்தில் இன்றைய உதாரண நிலைக்கு வருவதற்கு ஒவ்வொரு தமிழனும் தாங்கிய வேதனைகள் ஓங்கிய மலைகளைவிட உயர்ந்து நிற்கும். உதாரண புருசர்களாக எம்மவர்கள் இன்று இங்கே காட்டப்படுவதற்கு அவர்கள் இழந்தவை நிறையவே. இழப்புக்களின் யாகத்தில் வெற்றிகள் விளைவது இந்த உலக நியதி ஆகிவிட்டது. தமிழர்களின் இழப்புக்களில் அவர்களின் இன்றைய வெற்றி பனி தேசத்திலும் துளிர் விட்டு, வேர் ஊன்றி, குளிர் வென்று, இங்கே பரிணமித்து நிற்கிறது என்பது மிகைப்படுத்தல் அல்ல. அவர்கள் தமது ஒவ்வொரு அடியையும் எவ்வளவு வேதனையோடு, ஓர்மத்தோடு, எடுத்து வைத்து இருப்பார்கள்? அந்த ஓர்மத்தை அவர்களோடு மட்டுமே ஒப்பிடலாம். காகம் கரைந்து இருக்கும். நாங்கள் வாய் திறவாது கழுத்தை இறுக்கிய எங்கள் சூழ்நிலைகள்.

அதை எல்லாம் வென்று இன்றைய காலத்திற்கும், வருங்காலச் சந்ததிக்கும் நாம் கடந்து வந்த பாதையில் சிலவற்றைப் பார்ப்பதற்கு ஒரு காலதர் தேவைப்படுகிறது. பேசா அந்தப் பொருளை, அழியா அந்த இரணத்தை, மொழியா அந்த வலிகளை நான் இங்கு மீண்டும் மொழிய முனைகிறேன். அதற்கான காலதரை முழுமையாகத் திறக்க முடியாவிட்டாலும் ஒரு சிறிதளவேனும் திறக்க வேண்டும் என்கின்ற என் முயற்சி இது. எதிர்ப்புக்குத் தலை பணியாத உண்மைகள் அதனூடே தெரிய வேண்டும் என்கின்ற என் அவா. இலக்கியம் படைப்பது விருதுக்காக அல்ல மனதில் விளைந்து கிடக்கும் வேதனையை, உண்மையைப் பகிர்ந்து கொள்ளப் பதிந்து கொள்ள என நம்புபவன் நான்.

என் இலக்கியப் பயணத்திற்கு உலகம் எங்கிருந்தும் ஆதரவு தரும் வாசகர்களாகிய உங்களுக்கு மீண்டும் எனது மனமார்ந்த நன்றிகள்.

அன்புடன்
இ.தியாகலிங்கம்

http://www.karainagaran.com

ratnamt67@gmail.com

# பாகம் 1

## 1 மற்றாஸ் விமான நிலையம்

மற்றாஸ் விமான நிலையம் நவீன திரையரங்கு போல உள்ளே குளிராக இருந்தும் "TS" என்கின்ற தவசீலனுக்கு உள்ளங்கை தொடக்கம் உச்சிவரை ஒவ்வொரு கலங்களிலும் அணுகுண்டு வெடித்ததாக வியர்த்தது. வாசலில் முறுக்கு மீசையோடு காவல் பூதங்கள் போல் காக்கி உடையுடன் நின்று, சந்தேகக் கதிர்களைக் கண்களால் வீசும் கட்டத்தைத் தாண்டியது ஒரு கடலைத் தாண்டிய மாதிரியான மன நிம்மதி தந்தது. இந்தப் பயணம் ஏழு கடலைத் தாண்டுவதான ஒரு பயணம். இன்னும் ஆறு கடல்கள் ஆர்ப்பரிக்கும் அலைகளோடு அவருக்குச் சவால்விடக் காத்து இருக்கின்றன. அந்த நினைவு அடிவியிற்றைப் பினைவதைத் தாங்க முடியாத "TS"சின் தவிப்புத் தொடர்ந்தது.

போன முறை கனவுகளோடு புறப்பட்டுக் கவலைகளோடு திரும்பியது இன்றும் அடிமனதில் அழியாது சுருண்டு கிடக்கும் சோகமாகும். அண்ணாநகர் அடுக்குமாடிக் கட்டடத்தில் நின்று மீனம்பாக்கத்திற்கு இறங்கிச் செல்லும் விமானத்தைப் பார்த்து, அதில் எப்போது ஐரோப்பா நோக்கிப் பயணிப்பது என்கின்ற ஏக்கத்தில் "TS" துடித்தது உண்டு.

போன முறை யாருடைய ஆள் என்று கேட்டவர்கள் அவருக்குப் பழக்கமான உத்தியோகஸ்தர் அன்று வேலைக்கு வரவில்லை என்று திரும்பிப் போகுமாறு கூறிவிட்டார்கள். அத்தோடு அவர்களில் ஒருவரே விமான நிலையத்திற்கு வெளியே "TS"ஐக் கொண்டு வந்தும் விட்டார். முகவரின் அந்த ஏற்பாடு இல்லாவிட்டால் அன்று காவலர்களிடம் மாட்டி இன்றும் கம்பம் கழி சாப்பிட்டு இருக்க வேண்டும்.

தமிழ்நாட்டில் ‘விடுதலைப்புலியுங்களா?’ என்று கேட்டுச் சிவப்புக் கம்பளம் விரித்த காலம் மலை ஏறிவிட்டது. ‘நீங்க சிறீலங்காவா?’ என்கிற சந்தேகத் தலை ஆட்டலுடனான நக்கலான இழுப்பில் நாங்கள் அனைவரும் தமிழர்கள் என்கின்ற பொதுமை அழிந்து, அது சிறுமைப்பட்டு, அவமானத்தால், அடிக்குடலில் இருந்து புரட்டிக் கொண்டு வந்து விடுமோ என்கின்ற பயம்

வருகிறது. காலம் மாற்ற முடியாது சில நிகழ்வுகளைத் தந்துவிட்டுப் போய்விட்டது. கடவுளும் அவுனர் ஆகலாம். அவுனரும் ஆண்டவன் ஆகலாம். இடம், காலம், சந்தர்ப்பம், சூழ்நிலை என்பன ஒருவனின் பிம்பத்தையே பல வடிவில் காட்டுகிறது. மாற்றுகிறது. சிறீலங்காவா என்கின்ற இந்த இழுப்பில் இருந்து தப்பித்துப் போவதே ஒருவித விடுதலையோ என்பதாக இப்போது "TS"சிற்குத் தோன்றுகிறது. வழிகள் நிரந்தரமாக மாறிய பின்பு இறுதியில் இருக்கும் வாழ்க்கையை ஆவது பற்றிக் கொள்வோம் என்கின்ற ஏக்கத்தில் இன்று தமிழர்கள். அதில் ஒருவனாக "TS"சும். விடுதலை தமிழுக்கா அல்லது தமிழருக்கா? தமிழகத்தில் தமிழுக்கும், தமிழருக்கும் அர்த்தம் இருக்கிறதா? இந்தியத் தேசியத்திடம் தன்னை அடவு வைத்துக் கொண்ட தமிழின் தலை குனிந்த தாய்நாடு. இலங்கையில் சிங்களத் தேசியத்தால் திட்டமிட்டு அழிக்கப்படும் ஈழத் தமிழ்த் தேசம்.

"TS" விடுதலை என்கின்ற சூழலில் அகப்பட்டு விடலைகள் போல இயக்கத்திற்கு அள்ளுப்பட்டுப் போகவில்லை. அந்த அளவு முட்டாள் தனமாய் சிந்திக்கும் வயதை அவர் கடந்து இருந்தார். அறிவு முற்றாத விடலைகள் இயக்கங்களுக்கு அள்ளுப்பட்டுப் போவதைப் பார்க்க அவருக்குப் பரிதாபமாய் இருக்கும். அப்படி இந்த விடலைகள் அள்ளுப்பட்டுப் போகாவிட்டால் விடுதலைக் கிடைக்காது என்பதும் அவருக்குப் விளங்கும். சில விடயங்களில் சுயநலமாக இருந்து கொள்ள வேண்டும் என்பது "TS"சின் அவிப்பிராயம். விடுதலைக்கான இந்த யாகத்தில் தன்னால் இயன்ற உதவி பணம் மட்டுமே என்று "TS" எப்பொழுதோ முடிவு செய்துவிட்டார்.

மத்தியகிழக்கில் இந்தியனை அரேபியன் நவீன அடிமைகளாகப் பார்க்கிறான். தனது எண்ணெய் செல்வத்தால் எதையும் விலைக்கு வாங்கலாம் என்று அவன் நினைக்கிறான். இந்த அடிமைகளைச் சங்கிலி போட்டுக் கட்டுவதற்குப் பதிலாக றியால்களாலும், தினார்களாலும் கட்டுகிறான். அள்ளித் தருவதாகச் சொல்லிவிட்டுக் கிள்ளி எறிந்து, எச்சில் எலும்பைத் தேடும் நாய்களைப் போல நடத்த எண்ணுகிறான். அவனுக்கு இந்தியன், இலங்கையன் என்று வித்தியாசம் இருப்பதில்லை. எசமான் தொழிலாளி என்கின்ற ஈனநிலையில் இருந்து விடுதலைப் பெற வேண்டும் என்பது "TS"சின் நீண்டநாட் கனவு. சொந்தமாகத் தொழில் செய்ய

வேண்டும் என்பது அவருடைய அடுத்த கனவு. தனக்குத் தானே முதலாளியாக வேண்டும் என்கின்ற வைராக்கியத்தோடு அவர் ஐரோப்பா செல்லத் திட்டமிட்டார்.

கடலை எண்ணெய்க்கு ஒரு பிரத்தியேக மணம் உண்டு. தேங்காய் எண்ணெய் எங்களுக்கு வாசம். மணமும், நாற்றமும் அவரவர் பரிட்சயத்தையும், மூக்கையும், அதை மொழி பெயர்க்கும் மூளையையும் பொறுத்தது. அன்றாடம் பாவிப்பவர்களுக்கு அந்த எண்ணெய்யின் மணம் உறைப்பதில்லை. உள்ளே வந்த "TS"சின் நாசியை அந்த மணம் வலோக்காரமாக அடைத்துக் கொண்டது. மற்நாசில் சில காலம் தங்கியாகிற்று. பல சாப்பாட்டுக் கடைகள் பார்த்தாகிற்று. இருந்தும் பச்சை அரிசியும் கடலை எண்ணெய்யும் "TS"சிற்கு இன்னும் அன்னியமே. அடிக்கடி வயிற்றை உளைவதான, பிசைவதான அவஸ்தை தொடர்கிறது. சாப்பிட்டால் குத்தரிசியோடு சாப்பிட வேண்டும். அல்லது சாப்பிடாமலே இருந்துவிட வேண்டும் என்று "TS" நினைப்பது உண்டு. ஆனால் வயிறு குலைப்பதில் அது தோற்கும். நாசியில் ஏறிய கடலை எண்ணெய் மணத்தைப் புறக்கணித்தவராய் "TS" உள்ளே சென்றார்.

அங்கே சில இருக்கைகளில் ஐரோப்பியர்கள் அமர்ந்து இருந்தார்கள். அவர்கள் ஏதோ ஒரு ஐரோப்பிய மொழி பேசினார்கள். "TS"சிற்கு ஐரோப்பிய மொழிகள் பற்றிய பரிட்சயம் இருக்கவில்லை. அதனால் அது என்ன மொழியாக இருக்கும் என்பது அவருக்கு விளங்கவில்லை.

தங்கக் கம்பிகளாய் மினுமினுக்கும் பொன்னிறக் கேசத்தோடும், மேலே உள்ளாடை தெரியும் மெல்லிய வெள்ளாடை உடனும், கீழே கட்டைக் காற்சட்டையும் அணிந்த வண்ணம் அந்த இரு ஐரோப்பியப் பெண்கள் நின்றார்கள். அவர்கள் அந்தக் குளிரிலும் வியர்வைக் கொப்பளிக்கும் அவஸ்தையில் கையில் வைத்து இருந்த விசிறியால் தங்களை நோக்கி விசிறினர். அவர்களது நீலப் பேழை போன்ற கண்களை அருகே சென்று பார்க்க வேண்டும் என்கின்ற ஆசை "TS"சிற்கு எழுந்தது. அவர் தனது ஆசையை அவசரமாகக் கட்டுப்படுத்திக் கொண்டார். அவர்களுக்கு மொத்தமான பனங்கிழங்கின் அடிப்பாகம் போன்ற மூக்கு. இரத்தச் சிவப்பாகப் பழுத்த மிளகாய் பழம் போன்ற சாயம் பூசப்பட்ட மெல்லிய இதழ்கள். வெள்ளை வாழைத் தண்டு போன்ற கைகளும்,

கால்களும். எடுப்பான முறைக்கும் மார்புகள். மொத்தத்தில் பார்க்கும் ஆண்களை உருபில்லாதவன் தயவு இன்றி பரிதவிக்க வைக்கும் தோற்றம்.

பிரமன் ஐரோப்பியர்களுக்கு ஒரு அச்சும் எங்களுக்கு ஒரு அச்சும் வைத்து இருக்க வேண்டும் என்கின்ற தண்டிக்கப்பட்ட எண்ணம் "TS"சிடம் எழுந்தது. பிரமன் அப்படி ஓரவஞ்சனை செய்கிறானா? அவர்களைப் பார்த்ததில் "TS"சின் நடை பிசினில் நடப்பதாகத் தடைப்பட்டது. அவரைக் கட்டுப்படுத்த முடியாமலே அவர் இதழ்கள் குவிந்து அந்த இறுக்கத்தையும் மறந்து சீட்டி வந்தது. பின்பு, தன்னைச் சுதாகரித்த வண்ணம் இப்படியான அற்பத்தில் தனது கவனம் சிதறக் கூடாது என்று தன்னைக் கடிந்து கொண்டார். என்றாலும் அவர் கண்கள் ஆர்வத்தோடு அவர்களை நோக்கியது.

அந்த இரு ஐரோப்பிய மங்கைகளுக்கு அருகில் இரு ஐரோப்பிய ஆண்கள் நின்ற வண்ணம் அவர்களோடு கதைப்பதும் தங்களுக்குள் கதைப்பதுமாக கலகலப்பாகக் காலத்தைப் போக்கினர். அவர்களும் பெண்களைப் போல மெல்லிய வெண்ணிற மேலாடையும், கட்டையான அரைக் காற்சட்டையும் அணிந்து, ஆண் அழகைக் காட்டினர். மொத்த வாழைத் தண்டுகளான கைகள். குருத்து வாழைத் தண்டு நிறத்தில் உரல்களான தொடைகள். ஒருவனது கண் பூனைக் கண்ணாக மின்னியது. மற்றவன் உடையது நீலப் பேழைகளாக உருண்டன. இருவரும் மீசை வழித்துச் சவரம் செய்து இருந்தனர். மிகவும் நெட்டையாக இருந்தவனுக்குத் தங்கமாக வழியும் பொன்னிறக் கேசம். சற்றுக் குள்ளமாக இருந்தவனுக்கு எங்களைப் போன்று கறுத்தக் கேசம். இத்தாலி அல்லது கிறிஸ் நாட்டவராய் இருக்கலாம் என்கின்ற எண்ணம் "TS"சிடம் வந்தது. இப்படியானவர்களை மத்திய கிழக்கில் "TS" கண்டு இருக்கிறார். பெண்களைக் குறும்பாகப் பார்க்கும் அந்த ஐரோப்பியர்களின் பார்வை. முதுகில் குந்தியிருக்கும் கனமான அவர்களின் பைகள். அதன் பட்டிகள் அவர்கள் இடுப்பைச் சுற்றி இறுக்கப்பட்டு இருந்தது.

அவர்கள் எந்த விமானத்தில் எங்கே போவதற்குக் காத்து இருக்கிறார்கள் என்று "TS"சிற்குத் தெரியவில்லை. பல இளைஞர்கள் தனக்குப் பின்னால் வருவதை "TS"ஆல் அவதானிக்க முடிந்தது. அவர்களுக்கும் இது முதல் விமானப் பயணமாக இருக்க வேண்டும் என்று "TS"ற்குப்

பார்த்த உடனேயே விளங்கிவிட்டது. பல குடும்பங்கள் அங்கும் இங்குமாகத் தமது விமானத்திற்குக் காத்து இருந்தார்கள். சிற்றுண்டிக் கடையில் சிலர் கோப்பி வாங்கி அருந்தினார்கள். அந்தக் கடையைச் சுற்றி ஒரு சிறிய கூட்டம். அவர்களுக்கு இடையில் ஏதோ சம்பாசனை. விமானநிலையப் பணியாளர்கள் தொலைத் தொடர்புச் சாதனத்தோடு அங்குமிங்கும் அலைந்தார்கள். அவர்கள் அப்படித் தொலைத் தொடர்புச் சாதனத்தில் கதைத்த வண்ணம் "TS" நின்ற திசையை நோக்கி வந்தமை அவருக்கு அச்சத்தை உண்டு பண்ணியது. எந்தப் பிரச்சனையும் இல்லாது பயணித்துவிட வேண்டும் என்று "TS" துர்கை அம்மனை வேண்டிக் கொண்டார். விபரப் பலகைகள் மஞ்சளில் ஒளிர்ந்தன. ஆங்கிலேயன் தந்துவிட்டுப் போன மஞ்சள் கறுப்பில் அபாரமாக ஒட்டிக் கொண்ட பெருமை இன்றும் எங்களுக்கு. என்றும் நவீனமாகாத பழமையின் தொடர்.

"TS" சிறிது தடுமாற்றத்தோடு நின்றார். இரண்டு பயணிகளை உடனடியாக குறித்த வாசலுக்கு வருமாறு ஒலிபெருக்கியில் அவசரமாக அழைப்பு விடுக்கப்பட்டது. அதை அடுத்துத் தள்ளு வண்டிலில் இரு வயது போனவர்களை வேகமாகத் தள்ளிக் கொண்டு இருவர் சென்றனர். இதைக் கவனிக்காது நின்ற "TS" சற்றுத் தடுமாற்றத்தோடு விறைப்பாக நின்றார். பயணம் அமைதியாகப் போக வேண்டும். யாருடைய அவதானத்தையும் தேவை இல்லாது பெற்றுவிடக் கூடாது என்பது அவருக்கு முகவரால் கொடுக்கப்பட்ட அறிவுறுத்தல் ஆகும். அதைக் கடைப்பிடிக்கும் கெட்டித்தனத்திலேயே ஏழுகடல் தாண்டும் பயணத்தின் முடிவு. இவரது திடீர்த் தடுமாற்றத்தைப் பார்த்துக் கொண்டு இருந்த அழகான வடவிந்தியப் பெண் ஒருத்தி முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள். பின்பு "TS" அவளைப் பார்ப்பதை கண்டவள் தனது தாயின் முகத்தைப் பார்த்து இமைகளை நெளித்துக் காட்டினாள். "TS"சிற்கு அது சாதுவான பதட்டத்தையும் வெட்கத்தையும் தந்தது. அவரது அதரங்களால் பாலைவனத்து நிலம் போலச் சூடு பறந்தது. அவர் அந்த இடத்தை விட்டு மேற்கொண்டு நிதானமாக நடக்கத் தொடங்கினார்.

துப்பரவு செய்யும் பணியாளர்கள் துடைப்பத்தோடு வலப் பக்கமாக இருந்த பெண்களின் மலசலக் கூடத்தை நோக்கிச் சென்றார்கள். "TS" ஆண்களின் மலசலக்

கூடத்தின் வாசலைப் பார்த்தார். ஆண்கள் உள்ளே போவதும் வருவதுமாக நடமாடினர். அங்கு ஒரு முறை போக வேண்டும் என்று அவருக்குத் தோன்றினாலும் "Suitcase" பெட்டியோடு அங்கே போவது பிடிக்கவில்லை. "Check in" பண்ணிய பின்பு "Suitcase" பெட்டியைப் போட்டுவிட்டுப் போகலாம் என்று நினைத்த "TS" "Air india" விமானத்தின் எண்ணைச் சரிபார்த்துவிட்டு அதன் கருமபீடத்தை நோக்கி நடந்தார்.

"Air india" விமானத்தின் பணிப் பெண்கள் சிவப்பும் கருப்பமான சீருடையில் சாயம் பூசிய இரத்தச் சிவப்பான அழகிய கௌவை இதழ்களோடும், கருப்புப் பாதித் தேங்காய் போன்ற கொண்டைகளைத் தரித்தும், அழகிய கருவண்டுகளின் அடங்காத துள்ளலோடு, அலங்காரப் பொம்மைகளாட்டம் கருமபீடத்தில் இருந்து பயணச்சீட்டைப் பரிசோதித்து, பொதிகளை வாங்குவதற்குத் தயார் ஆனார்கள். அதைப் பார்த்த பயணிகள் அவசர அவசரமாக வரிசையாகினர். "TS"சிற்கு இனியும் தாமதிக்கத் தேவை இல்லை என்று தோன்றியது. அவர் போய் தானும் அந்த அணியான பயணிகளோடு சேர்ந்தார்.

## 2 அவர்கள்

மற்றாஸ் விமான நிலையத்தில் "TS"சிற்குப் பின்னே சில இளைஞர்கள் தயங்கித் தயங்கி வந்து நின்றார்கள். அவர்கள் இலங்கைத் தமிழர்கள் என்பதில் "TS"சிற்குச் சந்தேகம் இல்லை. அவர்கள் சட்டையை, காற்சட்டைக்கு உள்ளே விட்டுக் கையை மடித்திருந்தது எங்கள் அழகாகும் என்பது அவருக்கு விளங்கியது. "TS" ஒரு முறை தன்னைப் பார்த்தார். தானும் அவர்களைப் போலச் சட்டையை உள்ளே விட்டுக் கையைச் சாதுவாக மடித்து இருப்பது விளங்கியது. "TS"சிற்கு மிகவும் அருகாக அந்த இளைஞர்களில் கறுப்பாகவும், மெல்லியவனாகவும், சாதுவாக எண்ணை வழியும் சுருட்டை முடியை உடையவனுமான இளைஞன் வந்தான். அவன் "TS"சைப் பார்த்து நட்பாகச் சிரித்தான். "TS"சும் அவனைப் பார்த்து நட்பாகச் சிரித்தார். அதன் பின்பு அந்த இளைஞன் "TS"சைப் பார்த்துத் தயக்கத்தோடு கதைக்கத் தொடங்கினான்.

"உங்களுக்கு என்ன பெயருங்கோ அண்ணை?" என்றான்.

"தவசீலன். உமக்கு என்ன பெயர்?" என்றார் "TS".

"சிவலிங்கம். சிவா எண்டுவினமுங்கோ. "

"நீங்கள் யாழ்ப்பாணத்தில எந்த ஊர் அண்ணை?"

"அளவெட்டி. நீங்கள்?"

"நான் வல்வெட்டித்துறை. ஊருக்குப் போய் வாழ முடியாது. இங்க இருந்தும் விடிவு வராது. எங்கையாவது போய் சேர்ந்தால் சரி எண்டு வெளிக்கிட்டாச்சுது."

"அது உண்மை."

"அண்ணை... அண்ணை எண்டு கூப்பிடலாமோ?"

"ஓம்... ஓம்... அதில என்ன இருக்குது? கூப்பிடுங்கோ."

‘எனக்கு இது முதல் பயணம். உங்களைப் பார்த்தா ஏற்கனவே போய் வந்து இருப்பியள் போல இருக்குது. என்னோடை வாறவைக்கு போம் பில் பண்ண உதவி தேவைப்படும். பிரச்சனை இல்லைத் தானே அண்ணை?’

"சீ... சீ... பிரச்சனை இல்லை. தாராளமாய் செய்து தரலாம்."

இப்பிடியான தயவு காட்டும் சந்தர்ப்பங்கள் சில வேளைப் போகும் பயணத்தையே நோண்டி ஆக்கிவிடும் என்பது "TS"சிற்குத் தெரியும். தெரிந்தாலும் உதவி என்கின்ற போது மறுப்பதற்கு மனம் அவருக்கு ஏகுவது இல்லை. அதுவும் தமிழனுக்குத் தமிழனே உதவி செய்யாது விட்டால் வேறு யார் உதவி செய்வார்கள் என்று "TS" நினைத்தார்.

"இதில பெரிசா ஒண்டும் பார்க்க மாட்டாங்கள். ரிக்கெற்றைப் பார்த்திட்டு, லக்கேஜ்சையும் போட்டு, வோடிங் பாஸ்சும் தருவாங்கள். இமிக்கிறேசனுக்கு முன்னால போம் எடுத்துப் பில்பண்ண வேணும்." என்றார் "TS".

"அப்பிடியே அண்ணை? எங்களுக்கு இது கொஞ்சம் புதுசான விஷயம் எல்லோ... நீங்கள் கொஞ்சம் உதவி செய்யுங்கோ." என்றான் சிவா. சிவா அப்போது அதிகமாகத் தன்னடக்கத்தைக் கடைப்பிடித்தான்.

"சிலோன்லை இருந்து எந்தப் பிளைற்றில வந்தியள்?" என்றார் "TS".

"உங்களுக்கு ஏன் பொய் சொல்ல வேணும்? நாங்கள் வோட்டில ஒரு வைராக்கியத்தோடை இங்க வந்தம். இனி எங்கடை வாழ்க்கையைப் பார்ப்பம் எண்டு இப்ப நான் முடிவு செய்திட்டன். அது சரியண்ணை... நீங்கள் பரிசில இருந்து எங்க போகப் போகிறியள்? எங்களை நோர்வேக்குப் போய் இறங்கச் சொல்லி இருக்குது."

"நானும் அங்கதான் வாறன்."

"உண்மையாவா அண்ணை? உதைக் கேட்டதால எனக்கு இப்ப நல்ல நிம்மதியாய் இருக்குது. அப்ப உங்களுக்கும் கே.ரீ-யரே?"

"ஓம்... அவற்றை ஆட்களே நீங்களும்?"

"ம்..."

"சரி அலமலக்கப்படாமல் றிலக்சா நில்லுங்கோ. கே.ரீ-யற்றை ஆட்கள் இமிக்கிறேசனில இருப்பினம். பிரச்சனை வராது எண்டு நினைக்கிறன். யாரும் வராமல் விட்டாங்கள் எண்டால் சில்லெடுப்பாய் போயிடும்." என்றார் "TS".

"அண்ணை என்ரை பெயர் சொரூபன்." என்று கூறிய வண்ணம் கைகளைக் கொடுத்து அவன் தன்னை அறிமுகம் செய்தான்.

அவன் அழகாக வெட்டப்பட்ட கரும்புக் கணையானின் கற்பனைக்கும் எட்டாத அரும்பு மீசையோடும், தகதகக்கும் மாம்பழ நிறத்தில் மின்னும் பொன் மேனியோடும், பார்வையில் பெண்களுக்குக் காந்தம் வைத்த கண்களைக் கொண்டவனாயும், புன்னகை மாறாத அவன் சிவந்த உதடுகளுடனும், அத்து மீறிய வசீகரத்தோடும் காட்சி தருவது, பெண்களுக்குப் பரமாத்மாவைக் காணும் பரவசம் ஆகும் என்பது "TS"சிற்கு தெளிவாக விளங்கியது. கறுப்பு "Jeans"ம் வெள்ளைச் சட்டையும் அவன் அணிந்து இருந்தான். கையில் "Casio" கறுப்பு நிற மணிக்கூடு அலங்கரித்தது. தவசீலன் தனது பெயரை முதன் முறை அவர்களுக்கு "TS" என்று ஒரு வித பெருமை இருந்தாலும், அதை வெளிக்காட்டாத தன்னடக்கத்தோடு கூறினார். அத்தால் அவர் பெயர் "TS" என்று அங்கு பரவத் தொடங்கியது.

சொரூபனுக்குப் பின்னால் பரமேஸ் வந்தான். அவன் சூரியக் கவர்ச்சியில் மெலிந்த நெடுவலாகத் தோன்றினான். சுருள் முடி. மீசை இல்லாத பாகவதரான முகம். கட்டம் போட்ட சேட்டும் கோப்பி நிற "Jeans"ம் அணிந்து இருந்தான். சாதுவான கூச்ச சுபாவம் உள்ளவன் போல் அவன் நடத்தை. கையின் தொய்மையான பிடிப்பை "TS" கை கொடுக்கும் போது உணர்ந்து கொண்டார். முன்பு வேலை செய்த இடங்களில் கை குலுக்கும் போது இறுக்கிப் பற்றிக் குலுக்க வேண்டும் என்கின்ற அறிவுரையை அவர் பல முறை கேட்டு இருக்கிறார். "சிறிய வயதுதானே பழகி விடுவார்கள்." என்று "TS"சிற்குத் தோன்றியது.

அடுத்துக் குலேஸ் என்ற வண்ணம் கட்டுமஸ்தான துரியோதனன் உருக்கி வார்த்த வீமனின் இரும்புச் சிலை போன்ற வைரம் பாய்ந்த நிமிர்ந்த உடம்போடும், அரும்பு மீசையோடும், கட்டப் பொம்மன் உயரத்தில் வந்து "TS"சின் கையை இறுகப் பற்றினான். அவன் பிடி கரடு முரடான தோலின் ஸ்பரிசத்தை "TS"சிற்குத் தந்தது. அது கஸ்ரப்பட்டு வேலை செய்யும் கை என்பதை அவருக்கு

விளக்கியது. குலேஸ் வெள்ளையும் பச்சையும் கட்டம் போட்ட மேற்சட்டையும் "Jeans"சும் அணிந்து இருந்தான்.

அருள் அடுத்து வந்து "TS" உடன் கை குலுக்கினான். அவனிடம் ஒருவித விறைத்த பார்வை. பொது நிறம். செல்வச் செழிப்பில் விளைந்த தோற்றத்தின் நவீனம். நானே எனக்கு அரசன் என்கின்ற விட்டுக் கொடுப்பு இல்லாத திமிர்ப்பு.

அருளின் அறிமுகம் போதும் என்பது போல,

"என்ரை பெயர் சண்முகம், அவன் நிமலன், அடுத்தவன் சுபத்திரன், குள்ளன் றூபன், இவர் திருநாவுக்கரசு…" என்றான் சண்முகன்.

"நாங்கள் பிளைற்றில விரிவா அதைப் பற்றி எல்லாம் கதைப்பம். அது வரைக்கும் கவனமாக் கடக்க வேணும்." என்றார் "TS".

"உங்களுக்கு நல்ல அனுபவம் இருக்குது போல...?" என்றான் குலம்.

"அப்பிடி இல்லை. கொஞ்சம் கொஞ்சம் இருக்குது." என்றார் "TS".

"நான் கொழும்பில இருந்து மற்றாஸ் வந்து இருக்கிறன். அதைவிட வேற ஒரு அனுபவமும் இல்லை." என்றான் குலம்.

"சரி லையின்ல நிற்ப்பம்... என்ன?"

"ஓ அதுதான் நல்லது. "

அதை அடுத்து ஒருவித நடுக்கமான அமைதி அனைவரிலும். ஏழுகடல் தாண்டல் என்றால் இது இரண்டாவது பெரிய கடல். குடிவரவு குடியகல்வு மூன்றாவது பெரிய கடல். அதையும் கடந்தால் பாரிஸ் பெரியதொரு சமுத்திரம். எல்லாம் வெற்றியாகக் கடந்தால் ஒஸ்லோவில் நிம்மதியாகக் கரையேற முடியும். அதன் பின்பு அற்புதமான புது வாழ்க்கை காத்திருக்கிறது என்கின்ற கற்பனை "TS"சிடம் ஓடியது.

"TS" முதலாவதாக நிரையில் நின்றார். அவர் முறை வந்தது. கருமபீடத்தில் இருந்த பெண் ஒரு முறை "TS"சைப் பார்த்தாள். நம்பிக்கை வந்தவளாக "Check in" செய்து மிளகாய் பழம் போன்ற மெல்லிய இதழிகளில்

சிரிப்பை வரவழைத்துக் கொண்டு "Boarding pass" கொடுத்தாள். அவள் பரிசில் இருந்து ஒஸ்லோவிற்குப் போவதற்கான "Boarding pass"சையும் தந்தது "TS"சிற்குப் பெரும் ஆறுதலைத் தந்தது. பரிசில் போய் "Boarding pass"சிற்கு அலைய வேண்டியது இல்லை என்பது அதிக நம்பிக்கையை உண்டு பண்ணியது.

"TS" தனது அலுவல்களை முடித்துக் கொண்டு குடிவரவு குடியகல்வுப் பகுதிக்குச் செல்ல எத்தனித்த போது அருளை இரு விமான நிலையப் பணியாளர்கள் சூழ்ந்து விட்டார்கள். "TS"சிற்குத் திக்கென்றது. ஒருவர் மாட்டினாலும் அனைவருக்கும் பிரச்சனையாக மாறலாம். யாரும் அகப்படாது செல்ல வேண்டும். இது என்ன பிரச்சனை என்று "TS" மனதிற்குள் சலித்தார். அவருக்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை. தானும் போய் மாட்டிக் கொள்வது புத்தியாகத் தோன்றவில்லை. அருளை அப்படியே விட்டுச் செல்லவும் மனம் ஏகவில்லை.

அருளை அவர்கள் கிழக்கு நோக்கி அழைத்துச் சென்றார்கள். "TS" அவர்களுக்குப் பின்னால் சென்றார். ஒரு மூலைக்குள் வைத்து அருளோடு அவர்கள் ஏதோ கதைத்தார்கள். பின்பு அருள் கொடுப்பதை வாங்கினார்கள். மீண்டும் அதே இடத்திற்குக் கூட்டி வந்தார்கள். "TS" நின்று பார்த்தார். அருளுக்காக "Boarding pass" எடுத்துக் கொடுத்துவிட்டு அவர்கள் சென்றார்கள். அருளும், மற்றவர்களும் வரட்டும் என்று "TS" அதே இடத்தில் காத்து நின்றார்.

அருள் சந்தோஷமாக வந்தான். அவன் "TS"சிற்கு அருகாக வந்ததும், தானாகவே கதைத்தான். அவனுக்கு தன்மீது ஒரு மதிப்பு வந்து விட்டதை "TS" விளங்கிக் கொண்டார்.

"அவங்கள் காசுக்கு அண்ணை... என்னிட்டக் கிடந்த நூறு டொலரையும் வாங்கிப் போட்டாங்கள்."

"சரி விடும். போய் சேர்ந்தால் இப்பிடி எத்தினை நூறு டொலரைப் பார்க்கலாம். இப்ப போய் போமை நிரப்பிக் குடுப்பம்... வாங்க."

எல்லோரும் படிவத்தை நிரப்பிக் கொண்டு கூட்டமாகச் சென்றால் குடிவரவு குடியகல்வில் என்ன செய்வார்களோ என்கின்ற ஒருவித நடுக்கம் "TS"சிடம். அவர் அதை மற்றவர்களுக்குக் காட்டிக் கொள்ளவில்லை. கள்ளனைப்

போன்று தப்பி ஓடும் நிலை மனதில் அருவருப்பைத் தந்தது. மான அவமானம் பார்த்தால் அந்த மானத்தையே இழந்து மற்றாசில் பிச்சை எடுக்க வேண்டும் என்பது "TS"சிற்கு விளங்கியது.

"TS" படிவத்தை எடுத்துத் தனக்கு முதலில் நிரப்பி முடித்தார். பின்பு உதவி தேவைப்பட்டவர்களுக்கு உதவி செய்தார். எல்லோருக்கும் படிவம் நிரப்பி முடிந்த போது "TS"சிற்கு அந்தக் குளிரிலும் மீண்டும் வியர்த்தது.

"TS"சிற்கு மத்திய கிழக்கில் வேலை செய்ததால் ஐரோப்பா பற்றி அபாரக் கற்பனை எதுவும் கிடையாது. மத்திய கிழக்கைவிட ஐரோப்பா பல விடயங்களில் மேலும் முன்னேற்றமாக இருக்கும். மத சுதந்திரம், ஜனநாயக மதிப்பு ஆகிய பல விடயங்கள் மத்தியகிழக்கைவிட மேன்மையாக இருக்கும் என்று அவர் எண்ணினார்.

குடிவரவு குடியகல்வு மஞ்சளும் கறுப்புமாய் பயமுறுத்தியது. இதில் எத்தினைப் பேருக்கு கைகால் உதறப் போகிறது என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. என்றாலும் துணிவை வரவழைத்துச் சுபாஷ்சந்திரபோஸ் ஆக மாறிவிட்டதான நினைப்போடு அவர் முன்னே நடந்து சென்றார். ஏழுகடல் கடக்க வேண்டும். அம்மனே நீதான் எங்களைக் காக்க வேண்டும் என்று அவர் தனது குலதெய்வமான துர்கை அம்மனை மீண்டும் மனதிற்குள் நினைத்துக் கொண்டார். அவருக்குத் தெரிந்த காலத்தில் இருந்து அப்பாக்குட்டித் தங்கம்மாவையும் அன்னை துர்கை அம்மனையும் மறக்க முடிவதில்லை. ஒன்று கடவுள். இரண்டாவது மகத்தான மனிதம் என்பது அவர் நினைப்பு.

"TS"சிற்கு முன்பு நின்றவர் இந்தியக் கடவுச்சீட்டு வைத்திருந்தார். அவரைப் பரிசோதித்து உள்ளே விட்டார்கள். அடுத்ததாக "TS"சின் முறை வந்தது. துணிவு காலால் வடிந்து போனதான நடுக்கம் "TS"சிற்கு. வெளியே அதைக் காட்டிக் கொள்ளாதவாறு தன்னைச் சமாளித்த வண்ணம் தொலைந்து போன சிரிப்பை அல்லாடி வரவழைத்துக் கொண்டு கடவுச்சீட்டை நீட்டிய வண்ணம் சென்றார்.

இப்படிப் பயணிக்க முயலும் போது பிடிபட்டுப் பலர் சிறைச்சாலைகளில் இருக்க வேண்டி வந்தது பற்றியும் "TS" கேள்விப்பட்டு இருந்தார். அப்படி ஒரு அல்லல் வராமல் அம்மனின் துணையோடு இதைக் கடந்துவிட வேண்டும்

என்று அவர் மனதில் மீண்டும் துர்கை அம்மனை வேண்டிக் கொண்டார்.

நடக்க முடியா கனத்தில் கால்கள் கல் உரல்களாய் மாறியதாய் அதை இழுக்க முடியாத பலத்தில் நிலம் காந்தமாக இழுப்பதான ஒருவித அவஸ்தை "TS"சை அல்லாட வைத்தது. அதை மீறி ஒருவித வைராக்கியத்தோடு "TS" கருமபீடத்தை நெருங்கினார். "TS" தனது கடவுச்சீட்டோடு மூன்றாம் எண் கருமபீடத்தை அடைந்தார். அந்தக் கருமபீடத்தில் சுருட்டை முடியும், வாள் போன்ற மீசையும், வேல் போன்ற கண்களும் உடைய ஒரு கருந் தமிழன் சந்தேகத்தோடு "TS"சை உன்னிப்பாகப் பார்த்தார். அவரின் நான்கு விரல்களிலும் பெரிய தங்க மோதிரங்கள். எண்ணெய் வைத்து வார்ந்த தலைமுடி. வெண்மையைக் கூசவைக்கும் விறைப்பான சீருடை. அவர் பார்வை இதயம் வரை போய் வருவதான அவஸ்தையில் நெளிந்தார் "TS".

கடவுச்சீட்டை வாங்கிய அந்த அதிகாரி செவ்வாயில் இருந்து விழுந்த ஒரு நூதனமான பொருளைப் பார்ப்பது போல அதைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார். அது நீல நிறத்திலான நோர்வேக்கான தற்காலிகக் கடவுச்சீட்டு. சென்னையில் சில இரகசிய அறைகளில் கைதேர்ந்த கலைஞர்களால் தயாரிக்கப்பட்டது. என்றாலும் கையின் வியர்வைப் பட்டாலே அதன் நீல நிறம் கையோடு ஒட்டிக் கொள்ளும் தரத்திலானது. "TS"சின் புகைப்படம். ராமச்சந்திரன் சிவநாதன் என்கின்ற புதிய பொய் பெயர். அந்தப் பெயரில் கையெழுத்து வைத்துப் பழகுவதற்கு "TS"சிற்கு இரண்டு நாட்கள் தேவைப்பட்டன.

அந்த அதிகாரி "TS"சைப் பார்த்து,

"எங்க போறா?" என்று ஒற்றையில் கேட்டார்.

"நார்வேக்கு சார்."

"எப்பிடி? நீ என்ன பிஸ்நெஸ் மானா... இல்லாட்டி வீஜபியா?"

"..."

"உன் பெயர் என்ன?"

"தவ... ராமச்சந்திரன் சிவநாதன்."

"நல்லாய் பாடமாக்கி இருக்கிறாய். நான் உன்னட சொந்தப் பெயரைக் கேட்டன். சரி, இது யார் செய்து தந்தது? எவ்வளவு பணம் தந்தாய் அவங்களுக்கு?"

"TS"சிற்கு எல்லாம் பாழ்பட்டுப் போனது போல இருந்தது. அதற்கு மேல் என்ன பதில் சொல்வது என்று விளங்கவில்லை. "TS" எதுவும் பேசாமல் நின்றார். அந்த அதிகாரி விடவில்லை.

"ம்... யார் செய்தது? அவங்களுக்கு எவ்வளவு தந்தாய்?"

"TS" பேசவில்லை.

"என்ன நான் பேசுறது கேட்குதா?" அந்த அதிகாரி உரத்தே கேட்டார்.

பின்னால் நின்ற இளைஞர்கள் எல்லோரும் மெதுவாக நழுவி விண்ணப்பம் நிரப்பும் சுவரோரம் போய் விட்டார்கள். அவர்கள் வெளியே ஓடுவதற்குத் தயாராகுவது போல இருந்தது. கடைசியாக முந்திரிக்கொட்டை போல தான் மட்டும் மாட்டிக் கொண்டது "TS"சிற்கு விளங்கியது. இந்தியச் சிறைச்சாலையை எண்ண வயிற்றைக் கலக்கியது. இப்படியா முடிய வேண்டும் என்கின்ற சோர்வு மேலிட்டது. காசை வாங்கினால் ஒழுங்காகச் செய்ய வேண்டும். கள்ளக் கடவுச்சீட்டுத் தந்தால் மட்டும் போதாது. உள்ளே இருப்பவர்களுக்கும் ஏதாவது அடித்திருக்க வேண்டும். அடித்தார்களா? ஆள் மாறிவிட்டதா? மூன்றாவது கருமபீடத்திற்கும் போகலாம் என்றுதானே சொன்னார்கள்? என்று அவர் குழம்பினார்.

"TS"சிற்குத் தலை சுற்றியது. அவசரமாக ஒரு அதிகாரி "TS" நின்ற கருமபீடத்திற்கு ஓடி வந்தார். கருமபீடத்தில் இருந்த அதிகாரியின் காதுக்குள் ஏதோ சொன்னார். அதைக் கேட்ட அதிகாரி "TS"சை நிமிர்ந்து பார்த்தார்.

"நீங்க கே.ரீ-யற்ற ஆளுங்களா?"

"ஆமாம் சார்."

"வேற யார் உன்னோடை வந்தது?"

"பயந்துபோய் அங்க நிக்கிறாங்க சார்."

"அவங்களைப் போய் அழைச்சுக் கொண்டு வா."

"சரி சார்."

"TS"சிற்குப் புது நம்பிக்கையும் தென்பும் மொட்டு விரிவதாய் மனதை நிறைத்தது. பயம் பறந்து போய்விட அளவுக்கு அதிக துணிவோடு சுதந்திரமான உணர்வு அவரிடம் வந்தது. சுறுசுறுப்பாகப் போய் எல்லோரையும் அழைத்து வந்தார். அவர்களுக்கு அதிர்ஷ்டம் இப்படியும் வேலை செய்யுமா என்கின்ற திகைப்பு. அது அதிர்ஷ்டம் அல்ல முகவருக்குக் கொடுத்ததில் ஒரு பங்குதான் வேலை செய்கிறது என்பது "TS"சிற்கு அப்போது விளங்கியது.

"TS" திரும்பி வந்ததும் அவர் கையில் கடவுச்சீட்டுத் திருப்பித் தரப்பட்டது. "TS"சைப் புதிதாக வந்த அதிகாரி உள்ளே அழைத்துச் சென்றார்.

"நீங்க ஈரோப் போயிடுவீங்க. எங்களையும் கவனிச்சிட்டுப் போங்க சார்." என்றார்.

"என்னிட்டைப் பெரிசா ஒண்டும் இல்லை."

"பாருவாய் இல்லை. இருக்கிறத தாங்க சார்."

"TS" தன்னிடம் இருந்த நூறு டொலரில் ஐம்பதைக் கொடுத்தார். ஏதாவது செலவிற்கு ஐம்பதாவது வேண்டும் என்பது அவர் நினைப்பு. ஐம்பது டொலரை வாங்கிய அந்த அதிகாரி.

"சரி சார். பதட்டப்படாமல் நோர்மலா இருங்க. மற்றப் பசங்களையும் அப்பிடியே பாத்துக்குங்க." என்றார்.

"தாங்ஸ்." என்றார் "TS".

"வாறன் சார்." என்று அவர் விடை பெற்றார்.

'வாங்க.' என்றார் "TS"

அந்த அதிகாரி தொலைத் தொடர்பு சாதனத்தின் மூலம் யாருடனோ கதைத்த வண்ணம் சென்றார். "TS"சிற்குப் பெரும் கடலொன்றைத் தாண்டிய அமைதி மனதில் குடிபுகுந்தது.

# 3 தொடர்ந்த பயணம்

"TS" விமானத்திற்காய் காத்திருக்கும் பகுதிக்குள் சென்றார். விமானத்திற்குள் ஏறுவதும் ஒரு கடலைத் தாண்டுவது போலவே. அந்தக் கடல் தாண்டி விட்டால் பரீஸ்சில் பிடிபட்டால் பிரான்ஸ் எதிர்காலத்தில் தனது வசிப்பிடம் ஆகும். அல்லது நோர்வே தனது வாழ்விடம் ஆகும். மற்றாசை விட்டு வேறு ஒரு ஐரோப்பிய நாட்டில் வாழ்வதே மகிழ்ச்சி ஆனது என்கின்ற எண்ணம் அவரிடம். அது பிரான்சாய் இருந்தாலோ நோர்வேயாக இருந்தாலோ பெரிதாக வித்தியாசம் இருக்கப் போவது இல்லை என்பதாக "TS" எண்ணினார். அவருடைய ஐரோப்பா பற்றிய அறிவு சொற்பமே. பிரான்ஸ்சிற்கும் நோர்வேக்கும் இடையில் மொழி, கலாச்சாரம், பொருளாதாரம் ஈறாக எத்தனையோ வித்தியாசங்கள் உண்டு என்பது அவருக்கு அப்போது தெரியாது.

பெடியள் ஒவ்வொருவராகப் புன்னகை அப்பிய முகத்தோடு சந்தோஷமாய் வந்தார்கள். "கே.ரீ-யற்ற ஆளோ எண்டு கேட்டுக் கேட்டுக் குத்தி விட்டாங்கள்." என்றார்கள். அவர்களுக்கு இப்போது பயம் சூடு விட்டுப் போனதை "TS" கண்டு கொண்டார். அதீத ஆனந்தமும் சில வேளை ஆபத்தானது. அமைதி இந்தப் பயணத்திற்கு உகந்தது என்பது "TS"சின் கருத்தாக இருந்தாலும் பையன்களிடம் அதைப் பற்றி எப்படிச் சொல்வது என்று அவருக்கு விளங்கவில்லை. விமானம் கிளம்பிய பின்பு என்ன ஆட்டம் என்றாலும் அவர்கள் ஆடலாம். கிளம்பிய விமானத்தைத் திருப்ப இறக்குவது வழமை அல்ல. அதற்குள் குடிவரவு குடியகல்வு அதிகாரிகள் பொதுவாகப் பயணிக்க மாட்டார்கள். விமானத்தில் ஏறும் வரையும் கடல் தாண்டும் பயணமே என்பதாக "TS" எண்ணினார்.

சிவலிங்கம் சிரித்த வண்ணம் வந்து பக்கத்தில் இருந்தான். சிவலிங்கத்திற்கு விசர் சிவா என்று ஒரு பட்டப் பெயர் உண்டு என்பது அப்போது "TS"சிற்குத் தெரியாது. சிவலிங்கத்திற்கு அடிக்கடி கை நெட்டி முறித்துக் கொள்ளும் பழக்கம் உண்டு. இடைக்கிடேயே பெரிதாகக் கொட்டாவியும் விடுவான். விசர் சிவாவிற்கு உண்மையில் விசர் கிடையாது. அவன் மன ஆரோக்கியத்துடன் வாழ்ந்தாலும் உண்மைக்காகப் பிடிவாதம் பிடிப்பதால்

விசர் சிவா என்கிறார்கள். உண்மை பேசுபவர்களை உலகம் அப்படித்தான் பார்க்கும். பார்க்கிறது. இளங்கன்று பயமறியாது என்பது போல ஐதார்த்தத்தை உணர்ந்து, விட்டுக் கொடுக்காது, தான் நினைத்ததே சரி என்று வாதாடுவதால் வந்த வினை இது. நாளையளவில் சமுதாய விசர் பல்கலைக்கழகம் அவனுக்கு விசர் சிவா என்றே பட்டம் கொடுத்து விட்டது. விசர் சிவா அந்தப் பட்டத்தைப் பற்றிக் கவலைப்படுவது இல்லை. அநியாயம் என்றால் யாருக்கும் பயப்படக் கூடாது என்பது அவன் எண்ணம். பாரதிகளைப் பைத்தியம் ஆக்கும் பாரெல்லவா இது? இவனை மட்டும் விட்டு விடுமா?

"நாங்கள் எங்கயோ போய் சேருகிறதால இவைக்கு என்ன நட்டம்? எல்லாரும் பிடுங்கோணும் எண்டத்துக்கு ஏற்ற மாதிரி ஏஜென்சி, எயர்ப்போட் அதிகாரிகள் எண்டு ஏகப்பட்ட மறியல். ஆமியிட்ட இருந்து தப்பினாலும் இவையிட்ட இருந்து தப்பேலாது போல இருக்குது? எல்லாரும் கவனமாப் பிடுங்கிறதில மட்டும் குறியா இருக்கிறாங்கள்."

"சூ... நாங்கள் இன்னொரு நேரம் ஆறுதலா இதைப் பற்றிக் கதைப்பம். இன்னும் சில கடல் தாண்ட வேணும். தமிழ்நாட்டில நாங்கள் நிக்கிறம் எண்டதை ஞாபகம் வைச்சிருக்க வேணும்." என்றார் "TS" அவனைப் பார்த்து.

"அதுக்காகப் பிழையைக் கதைக்காமல் இருக்க வேணும் எண்டுறியளா? நான் அப்பிடியான ஆள் இல்லை."

"அது பற்றி எனக்கு எப்பிடித் தெரியும் தம்பி? பிழையானது பற்றிக் கதைக்கிறதுக்கும் நேரம், இடம், சந்தர்ப்பம் ஒத்து வர வேணும். இப்ப அமைதியா இருக்கிறது உத்தமம்."

"ஓ... ஓ... வேற ஏதாவது கதைப்பம்." என்று சொரூபன் இடையில் புகுந்தான். சொரூபனின் துடைகள் அவதியாக ஆடிய வண்ணம் இருந்தன. அவனால் அதை நிறுத்த முடிவதில்லை. அது அப்படி ஆடுகிறது என்பதால் ஈர்க்கப்பட்டு வேறு யாராவது அவனை வில்லங்கமாகப் பார்த்தால் மட்டும் அவன் அதை விளங்கிக் கொள்வான். ஆடுவதே தெரியாத போது அதை நிறுத்துவது எப்படி? அவன் அப்படித் தொடைகளை ஆட்டுவது யாருக்கும் தொந்தரவு தருவதில்லை. தொடைகளை அப்படி ஆட்டுவது பயத்தில் என்கின்ற ஒரு கருத்து இருக்கிறது. தற்போது தொலைத் தொடர்பு கருவியுடன் சுற்றிக்

கொண்டு திரிபவர்கள் இந்த ஆட்டத்தைக் கண்டுவிட்டு வந்தால் என்கின்ற பயம் "TS"சிடம். அதை அவனிடம் எப்படிக் கூறுவது என்று அவருக்குத் தெரியவில்லை.

சொரூபன் தமிழீழ மக்கள் விடுதலைக் கழகத்தில் இருந்த காலத்தில் ஒரே வீட்டில் பலர் தங்குவார்கள். நான்கு ஆட்கள் இருக்கும் வீட்டில் பத்துக்கும் அதிகமானவர்கள் தங்கி வசித்து வந்தார்கள். மலம் அதிகமாகவும் அதைக் காவிச் செல்லும் சலம் தட்டுப்பாடாகவும், அதன் பாதைகள் தடைப்பட்டதாகவும் போன காலம். நொதித்த மலத்தில் இருந்து தெறித்த கிருமிகளால் ஆண் உறுப்பில் பலருக்கும் சொறி வந்து விட்டது. அதற்கு ஒரு மருந்து போட்டு உருட்டுவது அவர்கள் வழக்கம். மற்றவர்கள் அதை இரண்டு தரம் செய்தால் சொரூபன் அதை அடிக்கடி செய்வானாம். அதில் இருந்து அவனுக்குச் சொறியன் என்பதோடு அவனது இயக்கப் பெயரான சத்தியன் என்பதும் சேர்த்து சொறிச் சத்தியன் என்று கூப்பிடுவது வழக்கம் ஆகியது. இயக்கத்தை விட்டு விலகிய பின்பு சத்தியன் மறைந்து சொரூபன் வந்தாலும் சொறியன் மறையாது அவனுடன் நிரந்தரமாக ஒட்டிக் கொண்டு விட்டது. அங்கு இருந்த அருளனைத் தவிர அவனது பட்டப் பெயர் அப்போது யாருக்கும் தெரியாது.

"பயந்து பயந்து ஓட வேண்டியதாய் போச்சுது எங்கடை வாழ்க்கை." சிவா மீண்டும் தொடங்கினான்.

"பிளைற் பறக்கத் தொடங்கினாச் சுதந்திரம் வந்த மாதிரியே." என்றார் "TS".

"நீங்கள் சொல்லுறகிதில நியாயம் இருக்கோ இல்லையோ பிழைக்கிற தந்திரம் இருக்குது." என்றான் சிவா.

"TS"சிற்குப் பதில் சொல்லத் தோன்றவில்லை. சிவாவைப் பார்த்துத் தெரிந்தும் தெரியாததுமான மென்னகை புரிந்தார். சிவாவும் பதிலுக்கு வஞ்சகம் இல்லாது சிரித்துவிட்டு அங்குமிங்கும் பராக்குப் பார்த்தான்.

"TS" சொரூபனுக்குப் பக்கத்தில் இருந்த பரமேசைப் பார்த்தார். பரமேசும் "TS"சைப் பார்க்க "TS" சொரூபனின் தொடையைக் கண்களால் காட்டினார். பரமேஸ் விளங்கிக் கொண்டவனாக அவனது தொடையில் தனது கையை உரமாக வைத்தான். சொரூபனின் தொடையாட்டம் காற்று இழந்த பட்டம் ஆகிற்று.

"TS" வெளியே சாந்த ரூபம் காட்டினாலும் மனதிற்கு உள்ளே மாபெரும் அவதியில் அவஸ்தைப்பட்டார். காத்து இருப்பது என்பது பல வேளை வேதனையான கழுத்தறுப்புக்களாய் மாறி விடுவது உண்டு. அதுவும் தப்பியோடும் போது காத்திருக்க வேண்டும் என்பது அதைவிடக் கொடுமை ஆனது. உடனேயே விமானத்தில் ஏறி அமர்ந்து விட்டால் நிம்மதியாக இருந்து இருக்கும். அதற்குப் பதிலாக காத்திருக்க வைத்துத் தொலைத் தொடர்புச் சாதனத்துடனும், சந்தேக கண்களுடனும் விமான நிலைய அதிகாரிகள் நடமாடுவது அவருக்கு அடிவயிற்றைக் குடையும் அவஸ்தையை இடைவிடாது தருகிறது. அவர்களுக்கு அது வேலை. "TS"சைப் பொறுத்தமட்டில் அது வாழ்வுக்கும் வீழ்வுக்குமான சோதனையான கணங்கள். கடக்க வேண்டிய கண்டங்கள். ஒற்றையாய் வந்து இருந்தால் சந்தேகத்திற்கும், பிடிபடுவதற்கும் சந்தர்ப்பம் குறைவு. ஆட்கள் கூடக்கூட அதன் சாத்தியமும் அதிகரிக்கிறது. அதற்காக இவர்களைக் குற்றம் சொல்ல முடியாது. அரும்பு மீசை கொண்ட தமிழ் இளைஞர்கள், இல்லை தமிழ் ஆண்களே இலங்கை இராணுவத்தின் முன்பு போக முடியாது. தமிழன் என்றால் புலி, புலி என்றால் தமிழன் என்பது அவர்கள் எண்ணம். பிள்ளைகளைப் பெற்று வளர்த்து வெறி கொண்ட இலங்கை இராணுவத்திடம் அல்லது மற்றைய பலி எடுக்கும் வழிகளில் காவு கொடுப்பதற்கு எந்தத் தாய் தந்தைக்கும் மனது இருப்பது இல்லை. அதனால் உள்ளதை விற்றுப் பிள்ளைகளை கண்காணாத் தேசத்திற்கு அனுப்பி இருக்கிறார்கள். இல்லாதவர்கள் ஏக்கத்தோடு பலியை நிறுத்த முடியாது பரிதவிக்கிறார்கள். கண் காணாத தேசம் தேடி ஓடும் வழியில் அதைப் பாவித்து, மனிதத்தை வியாபாரம் ஆக்கியவர்கள் அவர்களிடம் இருந்து பிடுங்குவதைப் பிடுங்குகிறார்கள். இதில் இருந்து தப்பித்து, அதிர்ஷ்டம் உள்ளவர்கள் இலக்கைப் போய் சேருகிறார்கள். எங்கள் அதிர்ஷ்டம் எப்படி இருக்கும் என்பது இன்னும் ஒரு மணித்தியாலத்தில் விளங்கி விடும் என்று "TS" எண்ணிக் கொண்டார்.

"TS"சோடு வந்த அனைத்துத் தமிழ் இளைஞர்களும் குடிவரவு குடியகல்வு பரிசோதனை முடித்து உள்ளே வந்து சேர்ந்து விட்டார்கள். அவர்கள் முகத்தில் இப்போதே ஐரோப்பாவில் இறங்கி விட்டதான சந்தோஷம் களைகட்டி விட்டது. அதில் அவர்கள் பயத்தை மறந்து கலகலப்பாகி விட்டார்கள். அவர்கள் அப்படி இருப்பது

"TS"சிற்கு ஒருவகையில் நல்லதாகவே பட்டது. அதிக கலகலப்பும் யாராவது அதிகாரிகளின் கண்ணைக் குத்திவிடலாம் என்கின்ற புதிய பயம் ஒன்று அவரிடம் எழுந்தது. அப்படி எதுவும் நடக்கக் கூடாது என்கின்ற பிரார்த்தனையில் துர்க்கை அம்மனின் நினைவு மீண்டும் வந்தது. கடவுள் இக்கட்டில் மட்டுமே ஞாபகத்திற்கு வருவாரா?

"TS"சிற்கு வயிற்றைப் புரட்டுவது போல இருந்தது. அதை அவர் எதிர்பார்க்கவில்லை. கலகலப்பாகக் கதைத்த இளைஞர்களின் கதை காவலர்களைக் கண்ட கள்ளனைப் போல காணாமற் போனது. அனைவரது கண்களிலும் தொடர் மின்னலாகப் பயம் மின்னியது. எதை வெறுக்கிறார்களோ அதுவே நேராக வந்து கை குலுக்குவதான அந்தரம் அங்கே பரவியது. மயான அமைதி ஆழ்கடலில் பரிணமித்த சுனாமியாக வந்திற்று. பல அதிகாரிகளை அது அங்கு விதியாக இழுத்துக் கொண்டுவர அவர்கள் ஓடி வந்தார்கள். அவர்களின் மறுகையில் வைத்திருந்த தொலைத் தொடர்புச் சாதனத்தில் யாருடனோ கதைத்தார்கள்.

யாரைத் தேடி அவர்களின் இந்த வேட்டை? எதைப் பிடிக்க இந்த அவசரம் என்பது "TS"சிற்குச் சாதுவாக விளங்கியது. மோப்ப நாய்களும் அதன் இரைகளும் என்று மனதில் எண்ணிக் கொண்டார். இது விமான நிலையங்களில் அடிக்கடி இடம்பெறும் நிகழ்வு. என்றாலும் இருக்கும் அவதியை மேலாக்கும் ஆபத்தாக அது வந்தது அவருக்கு அவஸ்தைத் தந்தது. நாய்கள் வேகமாக அதிகாரிகளை இழுத்த வண்ணம் அங்கும் இங்கும் மோப்பம் பிடித்தன.

நாய்களினதும் அதிகாரிகளினதும் வரவால் அங்கே ஒரே அமளிதுமளியாகப் போகிற்று. அமைதி; ஆடை இழந்த யுவதியாக அங்கு காணாமற் போயிற்று. மோப்ப நாய்கள் தங்கள் பக்கத்தில் நின்றால் வில்லங்கம் உருவாகும் என்பது "TS"சிற்குத் தெரியும். அப்படி எதுவும் நடந்துவிடக் கூடாது என்பதே அவரின் பிரார்த்தனை. பிரார்த்தனைகள் சில வேளைகளில் கடவுள்களால் அங்கீகரிக்கப் படுவதும் உண்டு.

மோப்ப நாய்கள் முகர்ந்து, முகர்ந்து வேகமாக "TS"யை நோக்கி முன்னேறி வந்தன. "TS"சிற்கு அவை எப்போது தம்மைக் கடக்கும் என்கின்ற அவஸ்தை தொடர்ந்தது.

மற்றைய இளைஞர்கள் சுவாசிக்க மறந்தவர்களாய் பயத்தோடு நாய்களைப் பார்த்த வண்ணம் இருந்தார்கள். நாய்கள் அவர்களிடம் மோப்பம் பிடிப்பதற்கு எதுவும் இல்லை. ஏதாவது தப்பாக நின்று அதைத் தொடர்ந்து கடவுச்சீட்டைப் பரிசோதித்தால் என்கின்ற எண்ணம் அவர்கள் உயிர் மூச்சை வாங்கியது. நாய்கள் நெருங்கின. முகர்ந்து, முகர்ந்து அவர்களைப் பின் தள்ளி முன்னேறின. இரண்டு கைகளையும் மேலே துக்கி, கோவிந்தா, கோவிந்தா என்று கோவிந்தனைத் திரௌபதி தன் மானம் காக்க, உட்ச்சோதியில் புகுந்து பிராத்தித்தது போலத் தனது பிரார்த்தனை இன்று துர்க்கை அம்மன் காதில் விழுந்ததாக "TS" எண்ணினார். பரந்தாமனைவிட அம்மாள் மென்மையான உள்ளம் கொண்டவளாய் அவருக்குத் தோன்றினாள்.

நாய்களும், அவர்களோடு பேய்கள் போல் வந்த அதிகாரிகளும் மறைய, உறைந்து சிலையாகிப் போன இளைஞர்கள் உயிர் பெற்றார்கள். அவர்கள் வதனங்களில் பதிந்து கிடந்த பயமும், அதிர்ச்சியும் நீங்கிப் புன்னகை முகிழ் உடைத்த மலராகப் பூத்தது. அப்பாடா என்கின்ற நிம்மதியில் ஆனந்தம் அங்கே பெருகிற்று.

"அவங்கள்ளேயும் பிழையில்லை. துாள் அவ்வளவு மோசமாய் கடத்துகிறாங்கள். ஈசியாப் பணம் சம்பாதிக்கோணும் எண்ட ஆசையில நிறையப்பேர் இதைச் செய்யினம். தர்மத்தைக் காக்கப் புறப்பட்ட எங்கடை தர்ம புத்திரர்களும் அதைச் செய்யினம்." என்றான் சொரூபன்.

"அது எப்பிடி உனக்குத் தெரியும்?" என்றான் குலேஸ்வரன் என்கின்ற குலம்.

"அது எப்பிடியோ தெரியும்." என்று தட்டிக் கழித்தான் சொரூபன்.

"அவர் இருந்த இடம் அப்பிடி." என்றான் சிவா.

"அப்ப... நீங்கள் இருந்த இடங்கள் சுத்தமே? எல்லாம் கொல்லாமை பேசிப் பேசிக் கொன்று சாப்பிட நினைச்ச வீர புருசர்கள்." என்றான் செரூபன்.

"நான் அவங்கள் சுத்தம் எண்டு சொன்னனா?" என்றான் சிவா.

"அது உண்மை. ஸ்பெயின் அண்ணாக்களும், பிரான்ஸ் அண்ணாக்களும் சுளை சுளையாச் செலவு செய்வினம்.

சில வேளை எங்களுக்கும் தாராளமாய் வாங்கித் தருவினம். அந்த அண்ணாக்கள் வந்தால் எங்கடைபாடு படு கொண்டாட்டம். எங்களை ஒரு அண்ணா வந்து நிற்கேக்க பாரீஸ் கோணருக்குக் கூட்டிக் கொண்டுபோய் லெசியும் வாங்கித் தந்து புரைசவாக்கமும் கூட்டிக் கொண்டு போவார். நாங்கள் சின்னப் பெடியள். அபிராமிக்குப் படம் பார்க்கப் போவம். அவர் தன்ரை அலுவலுக்குப் போவார்." என்றான் செரூபன்.

"என்ன "TS" அண்ணை மௌனம் ஆகீட்டியள்?"

"இல்லை... கதைக்கிறதை யார் வேணும் எண்டாலும் கதைக்கலாம். செய்து காட்டுகிறது சும்மா நடக்கிற காரியமே? அரசாங்கத்துக்கு மற்ற அரசாங்கங்கள் அள்ளிக் குடுக்கும். எங்களுக்கு யாரும் தருவானே? அப்பிடி ஏதும் தந்தாலும் எலும்புத் துண்டு போடுகிற மாதிரி குழப்பிறத்துக்குக் கூலி கொடுப்பாங்கள். போராட வழி விடுவாங்களோ? விடமாட்டாங்கள். பொருள் இல்லார்க்கு இவ்வுலகு இல்லை. பொருளாதாரம் இல்லாதவர்களுக்குப் போராட்டமும் இல்லை. யார் எண்டாலும் அப்பிடிச் செய்யிறது சரி எண்டு சொல்ல வரேல்லை. அவங்களுக்கு வேற வழியில்லை." என்று முடித்தார் "TS".

"உங்கடை விளக்கம் ஓக்கே. ஆனா; ஒரு இனத்திற்கு விடுதலைபெற எண்டு வெளிக்கிட்ட நாங்கள் மனிதம் மறக்கலாமோ? மறந்தா அது மக்கள் போராட்டமோ? உலகத்தை அழிச்சு நாங்கள் வாழ வேணும் எண்டுகிறது என்ன நியாயம்? என்ன போராட்டம் அது?" என்றான் அருளேஸ்.

"அது சரியில்லை… எண்டது எல்லாருக்கும் தெரியும். அவங்களுக்கு வேற வழி இல்லை எண்டது எத்தினை பேருக்குத் தெரியும்? பிச்சைக்காரனுக்குத் தானே வயித்தை எரிக்கும் பசியின்ரை கொடுமை தெரியும்? இவ்வளவு பெரிய வேலையள் செய்யிறதுக்கு ஆள் இருந்தா மட்டும் போதாது. அதைவிட எத்தனையோ தேவைகள் இருக்குது. எல்லாத்துக்கும் பணம் வேணும். தத்துவம் பேசினாப் பணம் வருமோ? பணம் இல்லாட்டி… பெடியள் இல்லாட்டி… எங்களுக்கு எண்டு எதுவும் வராது. ஒரு விடிவு வந்த பிறகேன் அவங்கள் உதெல்லாம் செய்யப் போகிறாங்கள்?" என்றார் "TS".

"அண்ணை உதைக் கதைக்க வெளிக்கிட்டா நாங்கள் பிளைற்றை மறந்தாலும் மறந்து போயிடுவம். கதை கண்ட இடம் எங்களுக்குக் கயிலாசம். அதுவும் நம்மட வீரப் பிரதாபங்கள் கதைக்க வெளிக்கிட்டா இங்கயே கட்சி உருவாகீடும். பிறகு அவளைத் தொடுவான் ஏன் கவலைப்படுவான் ஏன் எண்டு நினைக்க வேண்டி வரும்." என்றான் குலம். அவனது உடம்பு கருங்காலி போன்று வைரம் பாய்ந்தது. ஒரே இடத்தில் இருந்து அலுத்ததில் அதை வளைத்து அலுப்பு முறித்தான்.

"நீ சொல்லுகிறதிலையும் ஒரு நியாயம் இருக்குது." என்று கூறி மென்மையாகச் சிரித்தார் "TS".

"ஒரு பிளேன் ரீ அடிச்சா நல்லா இருக்கும். இதுக்க ஒண்டும் கிடையாது போல கிடக்குது?" என்றான் குலம்.

"இதுக்க ரொயிலற்றே இல்லை... இவருக்கு ரீ தேவைப் படுகுது." என்றான் அருளேஸ் இளக்காரமாக.

"என்ரை ஆசையைக் கூடச் சொல்லக் கூடாதே?" என்றான் குலம்.

"எனக்கும் நிறைய ஆசை இருக்குது... சொல்லட்டுமே?" என்றான் அருளேஸ்.

"ஐயோ... ஆளை விடுங்க." என்றான் குலம்.

"அண்ணை உதில ஏறிட்டா மிச்சம் பாப்பியள் தானே? இந்தப் பட்டாளத்தைக் கூட்டிக் கொண்டேச் சேர்த்திட்டா நீங்கள் கடவுள் மாதிரி. இதுக்க தட்டிவானில மட்டும் ஏறினாப் பிறகு கள்ளத் தோணியில ஏறின சனங்கள் நிறைய. ஏஜென்சியும் வம்பே, கல்கத்தா எண்டு கூட்டிக் கொண்டு போக இல்லை. மற்றாசில இருந்து ஏத்துகிறது அவற்றை பழக்கம்." என்றான் அருளேஸ்.

"ஏதோ ஏணியில ஏறுகிற மாதிரிக் கதைக்கிறியள்... பதட்டப் படாமல் இருந்தியள் எண்டா எல்லாம் வெல்லலாம். எவ்வளவுக்குப் பதட்டம் இல்லாமல் இருக்கிறியளோ அவ்வளவுக்கு வெற்றிதான்." என்றார் "TS".

திடீரெனப் பரபரப்பு ஏற்பட்டது. சீருடையுடன் வந்த விமான அதிகாரிகள் "Boarding pass" பரிசோதிக்க ஆயுத்தம் செய்தார்கள். ஒலிபெருக்கியில் எதுவும் சொல்ல முதலே பயணிகள் அவசரமாக எழுந்து வரிசை அமைத்தார்கள்.

"TS"சிற்குத் தொடர்ந்தும் ஆசனத்தில் இருப்பதே விருப்பமாகிற்று. அப்படி இருந்துவிட்டு கடைசியாகச் சென்றாலும் சில வேளைகளில் அவதானிப்புக்கு உள்ளாகலாம். முன்னுக்கு நின்றாலும் அப்படித்தான். ஒரு இடை நடுவில் செல்ல வேண்டும் என்பதற்கு அமைய அவரும் எழுந்தார்.

பயணிகளின் அவசரத்தைப் பற்றி அதிகாரிகள் கவலைப்படவில்லை. அவர்கள் தங்கள் வேகத்தில் இயங்கினார்கள். சிறிது நேரம் அமைதியாக நின்றவர்கள் நேரம் செல்லச் செல்ல சலித்துக் கொண்டார்கள். சிலர் மீண்டும் வந்து தங்கள் ஆசனத்தில் அமர்ந்தார்கள். "TS" உடன் எழுந்து நின்றவர்களில் சிவாவும், பரமேசும், அருளும் போய் ஆசனத்தில் அமர்ந்தார்கள்.

நிமலனுக்கு அடிக்கடி சலம் கழிக்க வேண்டும். அதுவும் இப்படியான இக்கட்டான நேரங்களில் அருவியாகச் சிறுநீரகத்தில் இருந்து அது கொட்டிச் சிறுநீர் பையை நிறைத்துவிடும். அவன் அதற்குக் கால்களால் அணை போட்டுக் கட்டுப்படுத்தி வைத்து இருந்தான். இனி அது முடியாது என்பது போல அவன் அவஸ்தை மேலிட்டது. அவன் நெளிந்த வண்ணம் நின்றுவிட்டுப் பொறுக்க முடியாது ஆசனத்தில் அமர்ந்தான்.

நிமலன் இருக்கவும் மீண்டும் சலசலப்புக் கேட்டது. விமான அதிகாரிகள் "Boarding pass" கடவுச்சீட்டு ஆகியவற்றைப் பரிசோதிக்கத் தொடங்கினார்கள். "TS"சிற்குக் கடைசி ஆபத்தான கடலைத் தாண்டுவதற்குத் தயாராக வேண்டியது விளங்கியது. அவர் அரங்கத் தொடங்கிய வரிசையில் தனது கைப்பையை நகர்த்தி தானும் நகர்ந்தார். வரிசையின் நகர்வை அவதானித்த சிவா, பரமேஸ், அருள், நிமலன் ஆகியோரும் எழுந்து கொண்டார்கள்.

"TS" நினைத்தது சரியாக இருந்தது. முதலிற் சென்ற இரு இந்திய ஆண்களை விமான அதிகாரிகள் நிறுத்தி வைத்துக் கேள்வி கேட்டார்கள். அத்தால் மீண்டும் வரிசையின் இயக்கம் இரையை விழுங்கிய மலைப் பாம்பாக ஸ்தம்பித்தது. சிறிது நேரத்தில் இன்னும் சில அதிகாரிகள் அங்கு வர மீண்டும் வரிசை நகரத் தொடங்கியது. பெடியளும், "TS"சும் ஆளையாள் பார்த்துக் கொண்டார்கள். இந்தக் கடலைத் தாண்டுவது எளிதா என்கின்ற தயக்கம் அவர்களிடம். கடவுச்சீட்டில் முத்திரை

குத்திய அதிகாரி இங்கே வரமுடியாது. அந்த அதிகாரி இங்கு வரை பணம் பகிர்ந்து இருப்பார் என்றும் இல்லை. இதில் வைத்துக் கிண்டினாலும் தங்கள் பாடு அதோ கதிதான் என்பது "TS"சிற்குப் விளங்கியது. அதுவும் கூட்டமாக போகும் போது அதற்கான சந்தர்ப்பம் அதிகமாகவே இருக்கிறது என்பது அவர் அவிப்பிராயம்.

நிரை அரங்கியரங்கிக் குளத்து அலைகள் கரை தட்டுவது போல "Boarding pass" கருமபீடத்தை அடைந்து, அங்கிருந்து மனிதர்கள் கலைந்து மறைந்தனர். அதற்கு அப்பால் விமானத்திற்கு ஏற்றிச் செல்லும் பேருந்து வெளியே தயாராக நின்றது. அது வருபவர்களை தன்னுள் மலைப்பாம்பின் வகிறாய் உள்வாங்கியது.

"TS"சின் முறை வந்த போது விமானம் புறப்படுவதற்கான நேரம் நெருங்கியதால் "Boarding pass"யைப் பரிசோதித்தவர்கள் அவசரம் காட்டினார்கள். அவர்கள் அவசரம் தங்கள் வசதியாகும் என்பதில் "TS"சிற்கு மகிழ்வு. அதை அவதானித்த நிமலன்,

"கெதியாப் போகட்டும், என்னால இனி அடக்க முடியாது. ஊரில அடிக்கிற மாதிரி அடிக்க வேண்டி வந்திடும்." என்றான். அதைக் கேட்ட சண்முகன்,

"நீர் ஒரு வாளியையும் கொண்டு வந்திருக்கலாம். மறந்திட்டீர் போல இருக்குது. அந்த தூணுக்குப் பின்னால குந்தி இருந்திட்டு வாரும். இடையில ஆரும் பிடிச்சுத் தரும அடி அடிக்கத் தொடங்கினா ஒரு ரிக்கெற் மிச்சம்."

"ஓ உமக்கு நக்கல். தனக்கு வந்தால்தான் தெரியும் தலையிடியும் காய்ச்சலும் எண்டுவினம்." என்றான் நிமலன்.

"பழமொழி தெரிஞ்ச அளவுக்கு விட்டுக் கட்டாமல் வந்திருந்தால் இடுக்கிக் கொண்டு நெளிய வேண்டியது இல்லையே?" என்று தொடர்ந்தான் சண்முகன்.

"கொஞ்சம் குடிச்சன். அது ஏசிக்குள்ள இருக்கப் பிழிஞ்சு எடுத்து இப்ப முனையப் பிரிக்குது."

"அண்ணை... பிளைற்றுக்கு உள்ள ஏறினதும் ஆத்திரத்தை அடக்கினாலும் அதை அடக்கத் தேவை இல்லைத் தானே?"

"இல்லை." என்றார் "TS".

"சரி அப்ப அது வரைக்கும் அவரை ஒருத்தரும் சிரிக்க வைக்காதேங்கோ." என்றான் சண்முகன். அதைக்கேட்டு அவர்கள் எல்லோரும் சிரித்தார்கள். அவர்களுக்குப் பின்னால் இரண்டு மலேசியத் தமிழ் பெண்கள் நின்றார்கள். அவர்கள் முகத்திற்குச் சினிமா நடிகைகள் போல ஒப்பனைச் செய்து இருந்தார்கள். அவர்களுக்கும் இவர்கள் தமிழ் விளங்கிவிட்டது. திரும்பி நின்று வாயைப் பொத்திய வண்ணம் சிரித்தார்கள்.

"TS" தனக்கு வந்த சிரிப்பை அடக்கிப் பெரிய மனிதனாய் நடிக்க முயன்றார். நிமலன் வெட்கத்தில் குனிந்து கொண்டான். குனிந்தபடியே,

"ஆனைக்கு ஒரு காலம் வந்தாப் பூனைக்கும் ஒரு காலம் வரும் தானே?" என்றான்.

"இல்ல நீ மாத்திச் சொல்லுகிறா." என்றான் சண்முகன்.

"இல்ல நான் சரியாத் தானே சொல்லுகிறன்?" என்றான் நிமலன் விளங்காது.

"பூனைக்கு ஒரு காலம் வந்தா ஆனைக்கும் ஒரு காலம் வரும் எண்டு சொல்லும். அதுக்குப் பிளைற்றுக்கு உள்ள வசதி இருக்குது."

"அட சீக்." என்றான் நிமலன்.

எல்லோரும் மீண்டும் சிரித்தார்கள்.

"TS" தனது "Boarding pass"ஐ விமானப் பணியாளர்களின் பரிசோதனைக்குக் கொடுத்தார். அது ஒரு பெண் அதிகாரி. சிவப்பும் கறுப்புமாக ஒப்பனையில் இரண்டாம் அவதாரமாக. இருந்தும் இங்கும் அவள் மன்மதனின் இரதியாக மயக்கம் தந்தாள். அவள் "Boarding pass"சை வாங்கிப் பரிசோதித்தாள். இடையில் "TS"சைப் பார்த்து மோகனப் புன்னகை வீசினாள். தான் விசுவாமித்திரர் இல்லை என்பதை விளங்கிக் கொண்ட "TS" அவள் புன்னகைக்கு ஒரு மென்னகையைப் பதில் ஆக்கினார்.

"உங்கள் பயணம் நன்றாக அமையட்டும்." என்று அவள் ஆங்கிலத்தில் கூறிய வண்ணம் கிழித்த "Boarding pass"சின் அடிக்கட்டைடையை "TS"சிடம் கொடுத்தாள். "TS" அதை வாங்கிக் கொண்டார். பின்பு திரும்பிப்

பையன்களைப் பார்த்துக் கண்ணைக் காட்டிவிட்டுப் பேருந்தை நோக்கி நடந்தார்.

## 4 உலகம் விரிந்தது

அதிர்ஷ்டம் சில வேளைகளில் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொட்டுவது உண்டு. இளைஞர்கள் விஷயத்தில் அப்படியே இருந்ததாக "TS" எண்ணிக் கொண்டார். முகவர் இதுவரைக்கும் பணம் பாய்ச்சி இருப்பார் என்று அவரால் நினைக்க முடியவில்லை.

இளைஞர்களுக்கு இது முதல் முறை. விமானத்தில் சீற்றுப் பிடிப்பதில் ஏகப்பட்ட அமளி. விமானப் பணிப் பெண்கள் அடிக்கட்டையைப் பார்த்து எந்த ஆசனத்தில் இருக்க வேண்டும் என்று ஆங்கிலத்தில் கூறினார்கள். அது புரிந்தவன் கொழும்பு வழியாகவே ஐரோப்பா சென்று இருப்பான் என்கின்ற எண்ணம் "TS"சிற்கு வந்தது. அப்படி என்றால் தனக்குக் கொஞ்சம் தெரிந்திருந்தும் மற்றாஸ் வந்ததற்குக் காரணம் என்ன என்கின்ற கேள்வி எழுந்தது. கொஞ்சம் கொஞ்சம் என்பதில் அந்தச் சிக்கல் என்பது அவருக்கு விளங்கியது.

நிமலன் கொண்டு வந்த கைப்பையை ஆசனத்தில் வைத்துவிட்டு மலசல கூடத்தை நோக்கி ஓடினான். எல்லோரிடமும் ஒருவிதமான நமட்டுச் சிரிப்பு. மலசல கூடத்தை விமானம் தரையில் நிற்கும் போதும் பாவிப்பதற்கு அனுமதித்த காலம் அது.

"TS"சிற்கு முன் ஆசனத்தில் சுபத்திரன் அமர்ந்து இருந்தான். ஆசனப் பட்டிகளை எடுத்துக் கரை ஓரங்களில் விடாது அதன் மீது அமர்ந்து அவன் அவஸ்தைப் பட்டான். சிறிது நேரத்தில் ஒருவாறு அதை வெளியே எடுக்க வேண்டும் என்பது விளங்கி அதை வெளியே எடுத்தான். பின்பு அதை குறுக்குக் கட்டாகக் கட்டுவதற்கு முயன்றான்.

அதற்குமேல் அவனை மற்றவர்கள் முன்பு அவமானப்பட விடுவதற்கு "TS"சிற்கு விருப்பம் இருக்கவில்லை. அவனது ஆசனத்தின் மேலால் அவன் தலையில் தட்டி எப்படிக் கொளுவுவது என்று காட்டினார். அவன் அதைக் கொளுவிவிட்டு "TS"சைப் பார்த்துச் சிரித்தான்.

விமானப் பணிப் பெண்கள் நீரில் மிதக்கும் அன்னப் பேடுகளாய் அங்கும் இங்கும் அலைந்தார்கள். கொள்ள முடியாத பெட்டிகளைக் கொள்ளிடத்தில் புதைக்க முடியாது பலர் அவஸ்தைப்பட்டார்கள். இளைஞர்கள் பஞ்சத்தில் அடிபட்டு வருவதால் அவர்களிடம் அப்படி எதுவும் இருக்கவில்லை. தங்களது பொதிகளை ஏற்கனவே அனுப்பிவிட்டார்கள். அதைவிடச் சிலரிடம் மட்டும் சிறிய கைப்பைகள் இருந்தன.

நிமலன் திரும்பி வந்தான். "அப்பா இப்பதான் நிம்மதி." என்ற வண்ணம் ஆசனத்தில் அமர்ந்தான்.

"ஓ... ஒரு மாதிரி நாறடிச்சிட்டு வந்திட்டீர் போல?" என்றான் சண்முகன்.

"சும்மா இரும்... ஏதோ நாங்கள் ஆப்பிரிக்காவில இருந்து வந்த மாதிரியும் உங்களுக்கு வெள்ளைக்காரன் குண்டி துடைச்ச மாதிரியும் கதைக்கிறீர். எல்லாரும் ஒரு குட்டையில ஊறின மட்டையள்." என்றான் நிமலன்.

"நீர் என்ன மடக்கிறீர் ஆக்கும்?" என்றான் சண்முகம்.

"அதுதானே உண்மை?" என்றான் நிமலன்.

சில பாதுகாப்பு அதிகாரிகள் திடீரென விமானத்திற்குள் புகுந்தார்கள். கடைசி நேரத்தில் என்ன கோதாரி என்பதாக "TS" விழித்தார். பையன்கள் இந்தத் திடீர் வரவை எதிர்பார்க்கவில்லை. கண்களில் பயம் தெறிக்கக் கற்சிலைகள் ஆனதாய் அமைதியாகி விட்டனர்.

வந்த அதிகாரிகளில் ஒருவர் தொலைத் தொடர்புச் சாதனத்தோடு விமானியின் கூடாரத்துக்குச் சென்றார். மற்றவர் விமானப் பணிப் பெண்களுடன் ஏதோ உரையாடினார். ஒருவர் மட்டும் அவசரமாக விமானத்தின் பின்பகுதிக்குச் சென்றார். பயணிகள் என்ன நடக்கிறது என்கின்ற வினாவோடும், விடுப்போடும் அல்லாடினர். கடவுச்சீட்டு மீண்டும் பரிசோதிக்கப்படுமா என்கின்ற கேள்வி பலரின் சுவாசத்தை கடனாக வாங்கியது. சுவாசத்தை இழந்த அவர்கள் சிலையாக உறைந்தனர். பின்னுக்கும் முன்னுக்குமான சிலரது பார்வையில் பிரேதக்களை காட்டிற்று. வாழ்வைத் தடம்புரள வைக்க ஒரு கணம் போதும் என்பது பலருக்கு விளங்கியது. கணங்கள் யுகங்களாகப் பத்து நிமிடங்கள் பதறவைத்துக் கரைந்தன. வந்த அதிகாரிகள் எதையோ பரிசோதித்து விட்டுப் புறப்பட்டார்கள். அனைத்துப் பயணிகள் கண்களிலும்

நிம்மதி வந்தது. நேரத்தோடு போக வேண்டிய இடத்திற்குப் போய் சேர்ந்து விடலாம் என்கின்ற ஆறுதல் பிறந்தது. பயணித்த தமிழ் இளைஞர்கள் கண்களில் ஆனந்தக் களிநடனம். ஆயிரம் மின்னல் அடிக்கும் சந்தோஷப் பார்வைகள். மனதில் ஐரோப்பிய வாழ்வு காட்சிகளான களையான ஓட்டம். இனி அதை எவராலும் தட்டிப் பறிக்க முடியாது என்கிற இறுமாப்பும், நம்பிக்கையும்.

ஒருவாறு விமானக் கதவு மூடப்பட்டது. விமானப் பணிப் பெண்கள் பாதுகாப்பிற்கான அறிவுறுத்தலுக்கு நடனமாடத் தொடங்கினர். சண்முகனும், நிமலனும் அமைதியாகினர். பெருங் கடல்களைத் தாண்டிவிட்ட நிம்மதி "TS"சிற்கு ஏற்பட்டது.

பாதுகாப்புப் பற்றிக் கூறிமுடித்ததும் கை துடைப்பதற்கு "Sprit" கை துடைக்கும் காகிதமும், சாப்பிடுவதற்கு மிட்டாய்களும் கொடுக்கப்பட்டன. திருநாவுக்கரசும், ரூபனும் "Sprit" பொதியை வாயால் கிழித்துக் கை துடைத்தார்கள். மற்றவர்களில் நிமலனும் சுபத்திரனும் "TS"சிடம் உதவி கேட்டார்கள். மற்றவர்கள் ஒருவாறு கோடு கண்டுபிடித்து கிழித்துத் துடைத்தார்கள்.

பரமேசுக்கும் குலத்திற்கும் அருகருகாக இருக்கைகள். குலம் வெளிநாட்டுச் சரக்கு பற்றி ஏற்கனவே அறிந்தது உண்டு. விமானத்தில் அது இலவசமாகக் கொடுப்பார்கள் என்று வெளிநாட்டில் இருந்து வந்த அண்ணாக்கள் கூறக் கேட்டு இருக்கிறான். தெங்குச் சாராயத்தையும், கள்ளையும் தவிர அவன் வேறு எதையும் அருந்தியது கிடையாது. அவை குடித்துக் குடித்துப் புளித்துப் போய்விட்டன. புதிதாக ஏதாவது குடிக்க வேண்டும் என்கின்ற ஆசை அவன் மனதில். வெளிநாட்டில் இருந்து வருபவர்கள் கொண்டு வரும் பொன்னிறச் சோம, ஞான, மோக பாணத்தைப் பார்க்கும் போது கொள்ளை ஆசை அவனுக்கு வருவது உண்டு. போதைக்காக மானத்தை விட்டுக் கொடுக்க முடியாத ஏக்கத்தோடு தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வான். இன்று இலவசமாகத் தருகிறார்களா? அல்லது கொள்ளை கொடுத்த பணத்தில் தருகிறார்களா என்று எண்ணிப் பார்த்தான். ஆக வெட்கப்படாமற் கேட்டு வாங்கிக் குடிக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. எப்படியாவது ஒரு கட்டுக் கட்டினால் நன்றாய் இருக்கும் என்பது அவன் எண்ணம்.

"TS" ஒரு குவளை வயின் மாத்திரம் விமானத்தில் பருகுவார். அதற்கு மேல் அவர் விமானத்தில் குடித்தது கிடையாது. எப்போதாவது நண்பர்களுடன் குடிப்பது உண்டு. குடித்தால் அதை அனுபவிப்பது போலக் குடிக்க வேண்டும் என்பது அவர் அவிப்பிராயம். குடித்துவிட்டு அவஸ்தைப் படுவது, சத்தி எடுப்பது, தலைசுற்றிப் பிரண்டு கிடப்பது எல்லாம் அவருக்கு அறவே பிடிக்காத விடயங்கள். அத்தால் அவர் தகுதி இல்லாதவர்களோடு சேர்ந்து குடிப்பதும் இல்லை. இந்தப் பையன்களோடு சேர்ந்து குடிக்கும் எண்ணம் அவருக்கு தற்போது இருக்கவில்லை. ஒரு குவளை வயின் மாத்திரம் மருந்து போல் எடுப்பதாய் முடிவு செய்து இருந்தார்.

எல்லோரும் அலைந்து களைத்த அலுப்பில் அடித்துப் போட்டதாய் சுருண்டு போயினர். விமானம் பேரிரைச்சலோடு மற்றாஸ் மாநகரைக் கீழே வீசி உந்தி மேலே வானத்தில் பறந்தது. பலர் வாயை மூடித் திறந்து மீன்குஞ்சுகள் போல் சுவாசம் பிடிக்கப் பழகினர். சில குழந்தைகள் காது நோவில் வீரிட்டு அழுதன.

முன் இருக்கையில் இருந்த மலேசியப் பெண் திரும்பி அருளைப் பார்த்து,

"பரீஸிற்கா போறீங்க?" என்று கேட்டாள். அருள் அதை எதிர்பார்க்கவில்லை. முதலில் நன்கு வழிந்தான். பின்பு,

"பரீசுக்குப் போய் பிறகு நோர்வே போகிறம்." என்று மற்றவரைப் பதைபதைக்க வைக்குமாறு விளக்கம் கொடுக்கத் தொடங்கினான்.

"சிலோன்ல இப்ப நிலைமை எப்பிடி இருக்குதுங்க?"

"அங்க வாழேலாது. எப்ப சாவம் எண்டு தெரியாமல் ஓட வேண்டி இருக்குது."

"நாங்களும் விடுதலைப் புலிக்கு சப்போட் பண்ணுவமுங்க."

அருளனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அவர்களை எப்படிப் பேசமுடியும்? யார் விடுதலைப் புலிகள் என்றாலும் அவர்கள் ஆதரவு கொடுத்து இருப்பார்கள். இப்போது யாருக்குத் தாங்கள் ஆதரவு கொடுக்கிறோம் என்பதை விபரமாக அறியாது, ஒரு தமிழ் பற்றில் செய்கிறார்கள். அவர்கள் மீது கோபம் கொண்டால் அவர்கள் வைத்திருக்கும் தமிழ் பற்றின் மீதும் கோபம் கொண்டதாய்

போய்விடும். அதைவிடத் தான் யார் அவர்கள் மீது கோபம் கொள்ள? என்கின்ற கேள்வியும் எழுந்தது. அருளுக்கு இதயம் வலித்தது. அவனால் பேச முடியவில்லை.

"என்ன அமைதி ஆகீட்டியள்?"

"நீங்கள் பரீஸில யாரிட்டைப் போகிறியள்?"

"நமக்கு றீலேசன்ஸ் அங்க இருக்கினம். ஒரு கிழமை போய் அங்க தங்கி ஊர் சுத்தீட்டு, மலேசியா போவம். நீங்க நோர்வேக்கு றிவூச்சியா போறீங்களா?"

"ம். உங்களுக்கு நிறைய விசயம் தெரிஞ்சு இருக்குது."

"எங்களுக்கு நிறையச் சிலோன்காரரோடை பழக்கம் இருகுதுங்க. நீங்க பத்திரமாய் போய் சேருங்க. ஒரு நாளைக்குத் தமிழருக்கு எண்டு ஒரு நாடு கிடைச்சா அங்க வந்து சந்திப்பம்."

"ம்." என்கின்ற வேதனையான முனகல் அருளனிடம் இருந்து வந்தது. அதில் உயிர் இருக்கவில்லை. அந்தப் பெண்களோடு வாதம் புரியும் தயிரியமும் அவனிடம் அப்போது இருக்கவில்லை.

சாப்பாட்டு மணம் விமானத்தில் பரவத் தொடங்கியது. அலைந்து களைத்ததில் பலருக்கும் பசி வயிற்றில் பற்றிய வேள்வித் தீயாகியது.

அருளனும் மலேசியப் பெண்களும் கதைத்ததை திருநாவுக்கரசு அவதானமாகக் கேட்டுக் கொண்டு இருந்தான். அருளனின் பதில்கள் உசாராக, உரமாக இல்லாதது அவனுக்கு மனக் கொதிப்பை உண்டு பண்ணியது. ஆண்ட பரம்பரை... அது இன்று அடிமைப்பட்டுக் கிடக்கும் நாளில், தமிழர்கள் மீட்சி பெறுவதற்கான ஒரே ஒரு வழியாக இருப்பதை ஏன் மதிக்கிறார்கள் இல்லை என்பது அவனுக்கு விளங்கவில்லை. இவன் கொஞ்சம் போராட்டத்தைப் பற்றி உயர்வாக அந்தப் பெண்களிடம் கதைத்து இருக்கலாம் என்கின்ற அங்கலாயிப்பு அவனிடம். அமைதியாக இருக்க அவனால் முடியவில்லை. அவன் அருளனைப் பார்த்து,

"என்ன...? விட்டுக் கொடுக்காமல் கதைக்க வேண்டியதுக்கு எல்லாம் பின்னடிக்கிறியள். நாங்கள் இப்ப இலங்கையில

இல்லைத் தானே? இனிச் சுதந்திரமாக் கதைக்கலாம் தானே?" என்றான் திருநா.

"உண்மையாவா? வெளிநாட்டிலும் சுதந்திரமாக் கதைக்க ஏலாது எண்டு வெளிநாட்டில இருந்து வந்தவர் சொன்னார். நீர் இப்பிடிச் சொல்லுறீர். எது உண்மையோ?" என்றான் அருளன் நளினமாக. திருநா முறைத்தான்.

"தெரியாது... அவர் அப்பிடித்தான் சொன்னார். சில வேளை அங்கையும் இலங்கை மாதிரிப் போல." அருளன் தனக்கு ஒன்றும் விளங்கவில்லை என்பது போல மேலும் கூறினான். அருளன் தன்னை மட்டம் தட்டிக் கதைக்கிறானா என்று திருநா குழம்பினான். அவனுக்கு அருளன் மீது கோபம் வந்தது.

அருளன் சிறிது அமைதி காத்த பின்பு கலகலப்பாக இருக்க வேண்டும் என்று எண்ணித் திருநாவைப் பார்த்து,

"மற்றாஸ் பிடிச்சிருக்கா?" என்றான்.

"பொழுது போக்கிற்கு நல்ல இடம். பின்நேரத்தில மரீனாபீச், படம், அண்ணாநகர் கொத்து ரொட்டி, எண்டு இரவு நீண்டு செல்லக் கூடாதோ எண்டுகிற ஏக்கம். காசு நிறைய வேணும். இன்னும் கொஞ்ச நாள் இழுத்து இருந்தா நாட்டுக்குத் திரும்பிப் போக வேண்டிய நிலை வந்து இருக்கும். அங்கை தமிழராத் தொழில் செய்ய ஏலாது. மனுசராத் தமிழரை வாழ விடுகிறாங்களும் இல்லை. எங்கடை பக்கத்தில குழந்தைப் பிள்ளை கடல்ல குண்டி கழுவ இறங்கினாலும் நேவி பயங்கரவாதி எண்டு சொல்லிச் சுட்டுப்போட்டு ஆயுதக் கடத்தலை முறியடிச்சாச்சு எண்டு வேற றேடியோ சிலோனுக்குச் செய்தி குடுக்கிறான். குண்டியில இருந்து வாற கிருமியே ஆயுதம்? அதுவும் கடல் தண்ணிக்குச் செத்துப் போயிடும். நேவி எப்பிடிக் குடுக்கிறானோ அப்பிடியே இலங்கை வானொலியில வாசிக்கிறான்கள். அரசாங்கம் எண்டா இவ்வளவு பவர் இருக்கும் எண்டது இப்ப விளங்குது. ஆணைப் பெண்ணாக்கிறதுகூட இப்ப அவங்களுக்குப் பிரச்சனையா இல்லை. தமிழனா அந்த நாட்டில வாழேலாது. இல்லை வாழ வேணும் எண்டா இயக்கத்துக்குப் போக வேணும். நல்ல காலம் இந்தப் பயணம் சரி வந்திட்டுது." என்றான் திருநா.

"இயக்கத்துக்குப் போகிறது வாழ்கிறதுக்கு இல்லை. நாட்டுக்காகச் சாகிறதுக்கு. எல்லாருக்கும் இதே பிரச்சனை.

அது சரி படம் பாப்பீர் எண்டீர்... யாற்றை படம் விரும்பிப் பார்ப்பீர்?" என்றான் அருளன்.

"அது என்னவோ வாத்தியாற்ற படம் எண்டா எனக்குப் பயித்தியம். உங்களுக்கு?"

"எனக்கு சிவாஜின்ர படங்கள் பிடிக்கும். எதிராகத்தான் பிரயாணிப்பமோ என்னவோ?"

"நீங்கள் ஏன் அப்பிடி நினைக்கிறியள்? இது சும்மா சின்ன விஷயம் தானே?" சமாளித்தான் திருநா.

"உண்மை. பெரிய விஷயம் எண்டாலும் கதைக்கக்கூடிய மாதிரி பொறுமையும் நிதானமும் இருக்க வேணும்."

"ம்."

"கட்டிவைச்சுச் சித்திரவதை செய்கிறவன், தான் நினைச்சதையே மட்டும் சொல்ல வேணும் எண்டு நினைக்கிறவன், எங்கடை பாதையை மாற்ற நினைக்கிறவன், அன்னியக் கலாச்சாரக்காரன், ஆக்கிரமிப்புப் படையா வந்து எங்களை அடக்கி அட்டூழியம் செய்தா யாரால பொறுத்துக் கொள்ள முடியும்?"

"சிங்கள இராணுவம் என்ன, ஆர் செய்தாலும் அநியாயம் அநியாயமே. அரசன் அன்று அறுப்பான் ஆண்டவன் நின்று அறுப்பான் எண்டுவினம். இருந்து பார்ப்பம்."

"நீங்கள் என்ன சொல்ல வாறியள்?"

"ஒண்டும் இல்லை என்னுடைய வயித்து எரிச்சல்."

"விளங்க இல்லை?"

"அதை விடுங்க... குடிவகை கொண்டு வருகினம். நீங்கள் றீங்ஸ் பண்ணுவியளா?"

"கள்ளு அடிச்சாத் தானே மத்தியானச் சாப்பாடே இறங்கும்."

"சாராயம்?"

"அதை நான் தொடுகிறது இல்லை."

"அப்ப நீங்க பியர் அடியிங்க."

"நல்ல அனுபவம் போல இருக்குது?"

"எல்லாம் கேள்வி ஞானம். விஸ்கி எடுத்துப் பாக்க வேணும் எண்டு ஒரு சின்ன ஆசை."

"அப்ப இரண்டு பேரும் விஸ்கி எடுப்பம்."

விமானப் பணிப் பெண்கள் பல மதுபானங்கள் வைத்து இருந்த வண்டிலுடன் ஊர்வலம் வந்தார்கள். அருளன், திருநா ஆகியோரின் முறை வந்தது. பின்னால் பாம்பனும் அதற்குப் பின்னால் "TS"சும் இருந்தார்கள். விமானம் ஒரு முறை உறுமியது. டிங் டாங் என்று சமிக்கைச் சத்தங்கள் கேட்டன. பட்டிகளை அணிந்து கொள்ளுமாறு விமானி ஒலிபெருக்கியில் பணித்தார். ஒரு சில நிமிடங்களில் மீண்டும் விமானம் சீராகப் பறக்கத் தொடங்கியது.

அழகிய மனிதப் பறவைகளாக விமானப் பணிப் பெண்கள் விமானத்தின் ஆட்டத்திற்குச் சிறிது அமைதி காத்துவிட்டு தமது ஆட்டத்தைத் தொடர்ந்தனர். அருளனதும், திருநாவினதும் முறை இம்முறை நிஜமானது. பசி வயிற்றை அமிலமிட்டு எரித்த நேரம் அது.

வண்டியை இவர்கள் இருவருக்கும் பின்னால் நிறுத்தி விட்டு அந்த அழகிய தாரகையான விமானப் பணிப் பெண் தனது செவ்விதழ்களை விரித்து "உங்களுக்குக் குடிப்பதற்கு என்ன வேண்டும்?" என்று அருளனிடத்தில் ஆங்கிலத்தில் கேட்டாள். அருளன் அதற்கு விஸ்கி வேண்டும் என்று ஆங்கிலத்தில் பதில் சொன்னான். திருநாவை அந்தக் கேள்வி கேட்கப்பட்ட போது அவன் அருளனைப் பார்த்தான். அருளன் அவருக்கும் இதே வேண்டும் என்று கூறினான்.

இருவருக்கும் ஆலங்கட்டி இட்டு விஸ்கியும், சாப்பிடுவதற்குப் பொதி செய்யப்பட்ட நிலக்கடலையும் வழங்கப் பட்டது. அத்தோடு ஒரு குவளையில் குடிப்பதற்கு நீரும் வைத்து விட்டு அவர்கள் பரமேசின் இருக்கையை நோக்கி வண்டியை நகர்த்தினார்கள். அருளனும், திருநாவும் படங்களில் பார்த்த அனுபவத்தை வைத்துக் கொண்டு சியேஸ் சொல்லி மது அருந்தத் தொடங்கினார்கள். பின்னால் பரமேஸ் விஸ்கி கேட்டு வாங்கும் உரையாடல் கேட்டது. அதன் பின்பு வண்டி "TS"சை அடைய அவர் சாப்பாட்டிற்கு ஏற்ப சிவப்பு வயின் கேட்டு வாங்கிக் கொண்டார்.

எதிர்பார்த்ததைவிட மதுவின் வேகம் அதிகமாக இருப்பது அருளனுக்கு விளங்கியது. பசி இருந்ததோடு நடந்து களைத்து விட்டது அதற்குக் காரணமாய் இருக்கும் என்பதை அவன் ஊகித்துக் கொண்டான். திருநா ஒரு மிடரில் அதைக் குடித்துவிட்டு,

"இதென்ன ஆனைக்குச் சோழம் பொரி போல." என்றான்.

"திரும்பி வரேக்க கேட்டுப் பார்ப்பம்."

"அது இன்னும் எத்தினை தரம் தருவாள்? ஆளுக்கு ஐஞ்சு, ஐஞ்சு டொலர் போட்டு ஒரு போத்தில் வாங்கினால் என்ன?" என்று பொதுவாகக் கேட்டான்.

"ஒண்டு காணாது... இரண்டு ஆவது குறைஞ்சது வேணும். எல்லாரும் காசு போட்டா வரும் தானே?" என்றான் சிவா.

"TS"சிற்கு இதைப் பார்க்கப் பெருங்கடல் தாண்டி விட்டாலும் சிறு கடலில் மாட்டி விடுவோமோ என்கின்ற பயம் வந்தது. இவர்கள் குடித்தால் நிதானம் காப்பார்களா என்பதில் எள்ளளவும் நம்பிக்கை இல்லாது "TS" எதுவும் செய்ய முடியாது நெளிந்தார்.

சிவா பக்கத்தில் இருந்தவர்களிடம் காசு கேட்டான். குலம், சண்முகன், அருள், சிவா ஆகியவர்களிடம் மட்டமே பணம் இருந்தது. பரமேஸ் தன்னிடம் இப்போது பணம் இல்லை என்றும் பின்பு தரலாம் எனவும் வாக்குறுதி அளித்தான்.

"TS"ஐக் கேட்ட போது தான் விமானத்தில் குடிப்பது குறைவு என்று மறுத்து விட்டார். "TS"சிடம் பணம் இருந்தாலும் அதைக் கொடுத்து அவஸ்தையை ஏற்றுக் கொள்ள அவர் விரும்பவில்லை. இப்போது அவருக்கு அமைதி தேவைப்பட்டது. எடுத்த காரியத்தை வெற்றியாக முடிக்க வேண்டும் என்பதே அவரது ஒரே குறிக்கோளாக இருந்தது. 'வயதும், அனுபவமும் போதாத பெடியள். சந்தர்ப்பம் கிடைத்ததும் ஆடப் பார்க்கிறார்கள்.' என்பதில் அவரின் அடிவயிறு கலங்கியது.

இருந்த பணத்தைச் சேர்த்து எடுத்து ஒரு போத்தல் "Red label" வாங்குவதாய் முடிவு செய்தார்கள்.

இதற்கிடையில் வண்டிலைத் தள்ளிக் கொண்டு விமானப் பணிப் பெண் திரும்பி வந்த போது முதலில் சிவாவும், பரமேசும் மறித்துத் தங்களுக்கு ஒவ்வொரு அளவு விஸ்கி வாங்கிக் கொண்டனர். "TS" தனது விரதத்தைத்

தொடர்ந்தும் கடைப்பிடித்தார். றூபன், நிமலன், சுபத்திரன், சொரூபன் ஆகியோர் மது அருந்துவது இல்லை. அவர்கள் தங்களுக்குத் தரப்பட்ட பழரசத்தை ருசித்து அருந்தினர். இவர்களது மதுவின் மயக்கத்தால் ஏற்பட்ட விடுப்பை ஆவலோடு பார்த்தார்கள்.

விமானப் பணிப் பெண்கள் வண்டிலோடு அருளிற்கு அருகாக வந்த போது தனக்கும் திருநாவுக்கும் மீண்டும் ஒரு அளவு கேட்டு வாங்கினார்கள். பின்பு அருள் அவளிடம் தனக்கு ஒரு "Red label" வேண்டும் என்று கேட்டான். அவள் ஒருவிதமான சந்தேகத்தோடு அருளைப் பார்த்துவிட்டு பின்பு சிரித்தாள். தாங்கள் முதலில் சாப்பாடு வழங்க வேண்டும் என்றும், அதன் பின்பு அதை எடுத்து வருவதாகவும் கூறிவிட்டு, வண்டிலைத் தள்ளிக் கொண்டு, புன்னகை மாறாது மேற்கொண்டு சென்றாள். இன்று இவர்களின் கூத்தில் விழுந்து, விழுந்து தாங்கள் வாந்தி துடைக்க வேண்டி வருமா என்பது அவளுக்குப் பயமாக இருந்தது.

அவள் அங்கிருந்து நகர்ந்ததும் அவள் சொன்னதை திருநா, சிவா, பரமேஸ், குலம், சண்முகம் ஆகியோரிடம் அருள் ஒப்புவித்தான். "சாப்பிட்ட பிறகு எப்பிடிக் குடிக்கிறது?" என்று சிவா தொடங்கப் பரமேசும் சேர்ந்து அங்கலாயித்துக் கொண்டான். பரமேசுக்கு அவள் ஏற்கனவே இரு முறை தந்த விஸ்கி நன்கு பிடித்துக் கொண்டது. சாப்பிட்ட பின்பு குடித்தால் என்ன என்பதை இன்று பார்த்துவிட வேண்டும் என்று அவன் எண்ணினான்.

"சாப்பிட்டுக் கொண்டே ஆவ்ஆவ் எண்டு குடிக்காமல், சாப்பிட்ட பிறகு கொஞ்ச நேரம் கழிச்சுத் தொடங்கினா நல்லாச் சமாளிக்கலாம்." என்றான் அருள்.

"சாப்பிட்ட பிறகு குடிச்சா என்ன? அது ஒண்டும் செய்யாது." என்றான் சண்முகம்.

"சிலருக்கு ஒண்டும் செய்யாது. ஏதாவது செய்யும் எண்டு நினைக்கிறவை ஒண்டில் குடிக்காமல் விடுங்கோ... இல்லாட்டி அடக்கி வாசியுங்கோ. உங்கடை அளவு உங்களுக்கு மட்டும் தெரியும் எண்டு நினைக்கிறன் நான்." என்றான்.

# 5 பாரிஸ் விமானநிலையம்

விமானம் "Paris Charles De Gaulle" சர்வதேச விமான நிலையத்தை வந்து அடைந்தது. அது அந்திபடும் நேரம். இருந்தும் அன்று ஆகாயம் வெளித்துப் போய் கிடந்ததில் அந்த நகரின் அழகு அம்மணமாய் தெரிந்தது. பாரிஸ் விமான நிலையம் பாரிய விமான நிலையமாக இருக்கும் என்பது "TS"சிற்குத் தெரியும். இவ்வளவு பாரிய விமான நிலையமாக இருக்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. மற்றாஸ் விமான நிலையம் ஒரு மாட்டுக் கொட்டகை என்றால் இது ஒரு அரண்மனை போல இருக்கும் என்பதை ஆகாயத்தில் இருந்து பார்க்கும் போதே "TS" விளங்கிக் கொண்டார். ஏதோ ஒரு வலுவான பொருளாதார, தொழில்நுட்ப வளம் இருக்க வேண்டும். அப்பொழுதே பாரிய அமைப்புக்களை அரசுகளால் கட்டி எழுப்ப முடியும். ஐரோப்பாவின் பொருளாதாரத்தின் அச்சாணியாக விளங்கும் நாடுகளில் பிரான்சிற்குப் பெரும் பங்கு உண்டு. தொழில்மயத்திலும், விவசாயத்திலும் அது தனது தொழில்நுட்பம் கசிந்துவிடாது வலுவாக காத்துக் கொண்ட நாடு என்று சொல்லலாம். அவர்களுக்கு இப்படியான பாரிய விமான நிலையங்களையோ அல்லது கட்டடங்களையோ அமைப்பது பெரும் சவாலாக இருப்பது இல்லை.

ஐரோப்பியர்களின் அழகு உணர்ச்சி, பொறியியல் ஆகியவை பற்றிய உயர்வான மதிப்பை, அதன் உருவம் "TS"சிற்கு கொடுத்தது. விமான நிலையம் வட்டமாக, சாம்பல் நிற இராட்சத மலர் ஒன்று பூமியில் கிடப்பதாகவும், அதைச் சுற்றி வண்டுகள் போல விமானங்கள் நிறுத்தப்பட்டு இருப்பதாகவும் ஒரு தனி அழகைக் கொடுத்தது. மலரின் இதழ்களாக அதன் மையத்தை நோக்கி நீண்டு செல்லும் பாதைகள் என்பதாக அதன் தோற்றம் பிரமிப்புத் தந்தது. எங்கோ ஒரு இடத்தில் விமானத்தை நிறுத்திவிட்டுப் பேருந்துகளில் ஏற்றி இறக்கும் செப்படி வித்தை இதற்குத் தேவைப்படாது என்பதாக "TS" எண்ணினார்.

இந்த அளவிற்கு வாகனங்கள் நெருப்புப் பெட்டி போல் அடுக்கி நிற்பதையோ பாரிய சாலைகளையோ, அதில் ஓடும் வாகனங்களையோ "TS" விமானத்தில் இருந்து இதுவரை இப்படிப் பார்த்தது கிடையாது.

மத்தியகிழக்கிற்குப் போய் வந்த நேரங்களில் அதற்கு வாய்ப்பு அமையவில்லை. அவருக்கு அதைப் பார்க்கப் பார்க்கப் பிரமிப்பாய் இருந்தது. பட்டிக்காட்டுப் பையன்கள் வாயைப் பிளந்தார்கள். அவர்கள் இப்படியான பாரிய அமைப்பைப் பார்க்கும் போது வாயைப் பிளப்பார்கள் என்பதும் "TS"சிற்கு வியப்பைத் தரவில்லை. விமான நிலையத்தின் வலப்பக்கமாக இரண்டு பெரிய தூபிகள் எழுந்து நின்றன. அதன் முன் பகுதியில் பாரிய கட்டடங்களும், வாகனம் தரித்து நிற்கும் பிரமாண்டமான தரிப்பிடமும் விரிந்து கிடந்தன. இடது பக்கத்தில் பாரிய வட்டமான கட்டடத் தொகுதி. அதில் நான்கு கோபுரங்கள். இரண்டில் இருந்து தொழிற்சாலைகள் போன்று புகை இடைவிடாது வந்தது. அதைவிடப் பல பாரிய கட்டடங்கள் அங்கும் இங்குமாகப் பரந்து கிடந்தன. விமான நிலையத்தின் எல்லையாகப் பாரிய நெடுஞ்சாலைகள் ஊடறுத்து நின்றன. விமான நிலையத்தைச் சுற்றிப் பச்சையும் சிவப்புமாக வளம் கொழிக்கும் பூமி பரந்து விரிந்து கிடந்தது.

விமானம் தரை இறங்கப் போகிறது என்ற உடன் விமானத்தில் சலசலப்பு ஏற்பட்டது. பையன்களை "TS" பார்த்தார். பலர் சோர்வோடு விழித்தனர். பரமேஸ் விழிக்காது தொடர்ந்தும் தூங்கினான். அவனை எழுப்பாது விட்டால் விமானம் இறங்கிய பின்பும் தூங்குவான் என்பதில் சந்தேகம் இல்லை.

இரவு "TS" பயந்தது சரியாகப் போய்விட்டது. புதிய மதுவில் இருந்த மோகத்திலும், தமக்குக் கிடைத்த சுதந்திரத்திலும் இரவு இரவாகக் குடித்தார்கள். வெறி ஏற ஏற அவர்களின் குரல் ஆரோகணத்தில் சென்றது. அதுவும் வெறியில் நாட்டு அரசியல் கதைத்தது சகிக்க முடியாது இருந்தது. விமானப் பணிப் பெண்கள் வந்து, தூங்குபவர்களைக் குழப்ப வேண்டாம் என்று இரண்டு முறை அதட்டிவிட்டுச் சென்றார்கள். பையன்கள் அதைக் காதிற் போட்டுக் கொண்டதாய் "TS"சிற்குத் தெரியவில்லை. "கொஞ்சம் மெதுவாக் கதையுங்க தம்பிமாரே." என்று "TS" பல முறை சொல்ல வேண்டி வந்தது. அப்படிச் சொன்ன போது ஐந்து நிமிடம் அமைதியாகக் கதைப்பார்கள். பின்பு பழைய குருடி கதவைத் திறவடி என்பதாக உரத்து அரசியல் கதைத்தார்கள். ஈழத்தமிழர் வாழ்வில் அரசியல் கதைக்காது ஒரு சம்பாசனை நடக்க முடியாது என்பதாய் காலம் மாறிவிட்டது. அப்படித்தான் பெடியளும்

விமானத்தில் துள்ளினர். குடித்துவிட்டு நிதானம் இல்லாத நேரத்தில் உணர்ச்சியைத் தூண்டும் விடயங்களைக் கதைக்கக் கூடாது என்பது "TS"சின் எண்ணம். அதை அவர் அடிக்கடி அவர்களிடம் சொன்னார்.

"அரசியல் கதைக்காமல் நாங்கள் வேற என்ன அண்ணை கதைக்கிறது?" என்றுவிட்டு அவர்கள் மீண்டும் அதையே கதைக்கத் தொடங்கி விடுவார்கள். "TS"சிற்குச் சில மணித்தியாலங்களுக்கு முன்பு அறிமுகம் ஆனவர்கள். வயது மூத்தவன் என்கின்ற மதிப்பு. அதைவிடத் தனக்கு எந்த அதிகாரமும் கிடையாது என்பது அவருக்கு நன்கு விளங்கியது.

சிவா, சொரூபன், அருள் ஆகியோரின் மனதில் என்ன இருக்கிறது என்பதும் "TS"சிற்கு விளங்கவில்லை. இப்படிக் கடும் போக்காக எதிர்ப்பதற்கு என்ன காரணம் என்றும் அவருக்குத் தெரியவில்லை. போராட்டம் என்றால் ஆயிரம் அமைப்புகள், ஆயிரம் கருத்துக்கள் எழும். அவற்றில் வலுவில்லாதது நலிந்து வலுவானது வென்று, அதுவே தலைமை தாங்குவது தானே உலக இயல்பு? அப்படியே ஈழத்திலும் நடக்கிறது. போராடப் புறப்பட்டவர்களில் அனேகர் சிறுவயதினர். அந்த வயதில் ஆழமாகச் சிந்திக்க முடியாதவர்கள். போராட்டத்தில் தவறுகள் நடப்பது வழமை. எல்லோரும் தவறு விடுகிறார்கள். அதையே தூக்கிப் பிடித்துக் கொண்டு ஒட்டுமொத்த இனத்திற்கும் விடிவு வேண்டாம் என்று கதைக்கக் கூடாது.

இந்த மூன்று பேரும் கதைப்பதைப் பார்த்தால் அப்படித்தான் "TS"சிற்குத் தோன்றியது. அவர்கள் மனதில் உள்ள வெறுப்பு எப்படி விளைந்தது என்று "TS"சிற்கு விளங்கவில்லை. நாட்டில் நடந்ததை "TS" கேள்விப்பட்டு இருக்கிறார். அவை தவிர்க்க முடியாதவை. மறக்கப்பட வேண்டியவை என்பது அவர் எண்ணம். தான் மறக்கலாம். மன்னிக்கலாம். அவர்களை மறந்து போகும்படி சொல்ல முடியாது. அவர்கள் மறந்து போவார்கள் என்று தான் எதிர்பார்க்க முடியாது என்பதும் அவருக்குப் விளங்கியது.

பரமேஸ் அவசர அவசரமாகக் குடிப்பதைப் பார்த்து விட்டு "கொஞ்சம் ஆறுதலா வாசி தம்பி. இல்லாட்டிப் போறது எல்லாம் வெளியால வந்திடும்." என்று ஒரு முறை "TS" சொல்லிப் பார்த்தார். மது சமத்துவத்திற்கும் மேலான உரிமை தந்து விடுகிறது. "விளங்குது அண்ணை. நான்

எப்பவும் ஸ்ரெடி." என ஒரு நக்கல் தழும்பும் மென்சிரிப்போடு பதில் அளித்து விட்டு, மீண்டும் தொடர்ந்தான்.

இதற்கு மேல் எதுவும் சொல்வதற்கு இல்லை என்று அவர் அமைதி ஆகினார். போத்தல் முடியும் தறுவாயில் பரமேஸ் அவசர அவசரமாய் குடித்தான். திடீரென ஓங்காளித்தான். "TS" ஒரு ஐமிச்சத்தில் சத்தி எடுக்கும் 'பை' ஒன்றைக் கையில் அவசரமாய் திணித்தார். அவன் அரைவாசி உள்ளும் அரைவாசி வெளியிலுமாகச் சத்தி எடுத்தான். அவனது "Jeans"இன் வலது கால் பகுதியில் வாந்தி பட்டிருந்தது. அந்தப் பகுதியில் அவனது வாந்தியின் மணம் ஒருவித அசௌகரியத்தை உண்டு பண்ணியது.

"அவசரப்பட்டிட்டீர்." என்றார் "TS".

"அதெல்லாம் முடிஞ்சுது. இப்ப கப்பல் கரை தட்டுகிற மாதிரி… சுத்துகிறது கொஞ்ச நேரத்தில நிண்டா எல்லாம் முறிஞ்சிடும்." என்றான்.

பரமேஸ் ஓங்காளித்துச் சத்தி எடுத்ததை அவதானித்த விமானப் பணிப் பெண் ஒருத்தி அங்கு வந்தாள். அவளே அந்த மதுப் போத்தலை இவர்களுக்கு விற்றவள். அவள் வதனத்தில் அதை விற்கும் போது இருந்த புன்னகை இப்போது மறைந்து ஒருவிதமான கடுப்பு வெடித்தது.

அவள் ஒரு பையை எடுத்து வந்து பரமேசின் கையில் இருந்த அசிங்கத்தை அதற்கு உள்ளே திணித்து விடுமாறு சைகை காட்டினாள். நான்கு "Sprit" காகிதப் பொதிகள் கொடுத்து சத்தி பட்ட இடங்களைத் துடைத்துக் கொள்ளுமாறு கூறினாள். அந்தக் கழிவைப் போடுவதற்கு புதிதாக ஒரு பையைக் கொடுத்தாள். பரமேஸ் வெறியோடு அரைகுறையாக அந்தப் பணியைச் செய்தான்.

விமானப் பணிப் பெண் திரும்பி வந்த போது அவன் நித்திரையாகிப் போய் விட்டான். அவள் அவன் கீழே வைத்து இருந்த பையை எடுத்துக் கொண்டு அவனைப் போர்த்தி விட்டுச் சென்றாள். இன்னும் அவன் நித்திரையால் விழிக்கவில்லை. அவனை எழுப்பி அழைத்துச் செல்ல வேண்டும். இந்தக் கடலையும் தாண்டினாலே ஒஸ்லோ என்கின்ற கரை ஒதுங்கலாம் என்பதாக "TS" எண்ணினார்.

விமானம் சிறிய அதிர்வோடு பரீஸ் விமான நிலையத்தின் ஓடு தளத்தை முட்டி முத்தம் இட்டு அமைதி ஆகியது. அந்த அதிர்வில் பரமேஸ் துடித்துப் பதைத்து எழுந்தான். குண்டு விழுந்து விட்டது போன்ற பதைபதைப்பு அவனிடம். பின்பு எந்த உலகில் இருக்கிறேன் என்பது போல அரக்கப் பரக்க மற்றவர்களைப் பார்த்து விழித்தான். நினைவுகளை நிதானமாகக் கோர்க்க முயன்றான். எல்லோரது பார்வையும் அவன் மேல் விழுந்தது. அவன் என்ன என்பது போல் அவர்களைப் பார்த்தான். சமாளித்துக் கொண்டு வழிந்தான்.

"பரீஸ் வந்திட்டுது. இனி நீர் நித்திரையால எழும்பலாம்." என்றான் சண்முகன் ஒருவித நளினத்தோடு.

"உதுதானே கூடாது எண்டுகிறது. ஆனைக்கும் அடி சறுக்கும். கணக்கு இல்லாமல் விட்டுக் கட்டுகிறவன் நான். இராத்திரிச் சறுக்கிப் போட்டுது. உடம்பு அடிச்சுப் போட்ட மாதிரி அலுப்பா இருந்ததால இசகுபிசகா பத்தீட்டுது." என்றான் பரமேஸ்.

விமானம் தரைதட்டியது. விடுதலை கிடைத்ததாய் பயணிகள் இயங்காது நின்ற உலகை இயக்க வெகுவாக அவசரப்பட்டனர். அவர்களோடு அள்ளுப்பட்டு எல்லோரும் வெளியே வந்தார்கள். பளிங்கு மண்டபமான விமான நிலையம். "TS"சின் மாட்டுக் கொட்டகைக்கும் அரண்மனைக்குமான கற்பனை சரியாகவே இருந்தது. இந்த ஏற்றத் தாழ்வுகள் ஒரு நாள் மாறலாம். அப்போது தான் உயிரோடு இருக்கமாட்டேன் என்று "TS" எண்ணினார்.

விமானத்தை விட்டு வெளியே வந்த பின்பு எங்கே, எப்படிப் போவது? என்கின்ற திகைப்பும் கேள்வியும் எழுந்தது. எல்லோரும் "TS"சிற்குப் பின்னே பதுங்கினார்கள். வெளியே சூரிய இருப்பு நீங்கி இருண்டு கொண்டு வந்தது. இவ்வளவு கெதியாக இருள்வது எல்லோருக்கும் வியப்பைத் தந்தது. காக்கிச் சட்டைக் காவலர்களைக் காணவில்லை. கருநீலச் சீருடையுடன் சில நவீனமான காவலர்களைக் காண முடிந்தது. கருநீலமும் கறுப்புமாக உடையணிந்த பல வெள்ளைக்கார அதிகாரிகளும் ஒரு சில கறுப்பு அதிகாரிகளும் கடைமையில் ஈடுபட்டு இருந்தார்கள். அவர்களைப் பார்க்கும் போது "TS"சிற்கே ஒருவித நடுக்கம் ஏற்பட்டது. இந்தக் கடலையும் தாண்ட வேண்டும் என்று மனது சொல்லிக் கொண்டது.

"இனி எங்கை அண்ணை போகிறது?" என்றான் சண்முகன்.

"இப்பிடியே றாண்சிற் பிடிச்சுக் கொண்டு போவம். பிறகு அங்கினை கவுண்டரில கேட்டிட்டு மேற் கொண்டு போவம். அடுத்த பிளைற் எஸ்.ஏ.எஸ். அதுகின்ரை கேற் நம்பர் வோடிங்பாசில இருக்குது. இப்ப நடப்பம்." என்றார் "TS".

வெளியே ஓடு பாதைக்கும் விமான நிலையத்திற்கும் இடையே உள்ள பகுதியால் வெள்ளை நிறத்தில் நீலச் சிலுவை போடப்பட்ட அம்புலன்ஸ் ஒன்று அவசரமாகச் சென்றது. அதன் ஓசை உள்ளேயும் மெதுவாகக் கேட்டது. எல்லோரது கவனமும் ஒரு கணம் அதைப் பார்க்கத் திரும்பினாலும் மறுகணமே தங்கள் குறிக்கோளை நோக்கித் திரும்பியது. மீண்டும் அவர்கள் நடை வேகமாகியது.

எங்கும் நவீனம் பொங்குவது ஐரோப்பாவா என்கின்ற மலைப்பைப் பெடியள் பெற்று இருப்பார்கள் என்பது "TS"சின் எண்ணம். சில விடயங்கள் "TS"சிற்கும் நவீனமாகவே இருந்தது. கட்டடங்களின் விஸ்தீரணமும் அதன் அமைப்பில் இருந்த அழகும், தரமும், துப்பரவும் "TS"சை வியக்க வைத்தன. மற்றவர்களை சொல்லத் தேவை இல்லை. திறந்த வாயை மூடுவதை அவர்கள் மறந்து போனார்கள். பாரதக் கதையில் துரியோதனன் மாய மாளிகைக்குள் பிரவேசித்த போது இருந்த வியப்பு அவர்களிடம். துரியோதனனிடம் இருந்த பொறாமை அவர்களிடம் துளியும் இருக்கவில்லை.

நல்ல காலமாகத் தண்ணீர்த் தடாகம் இங்கே நடைபாதையில் இருக்கவில்லை. ஒருவாறு சுற்றிச் சுற்றி சக்கர வியூகத்தை உடைத்த வீரர்கள் போலத் தாங்கள் போக வேண்டிய பாதையைக் கண்டு பிடித்தார்கள். தங்களது "Gate"இற்குப் போவதற்கு முதல் அங்கு இருந்த கருமபீடத்தில் "Boarding pass"ஐக் காட்டி வழி சரிதானா என்று உறுதிப்படுத்த எண்ணினார்கள். அந்தப் பெண் அதிகாரிகள் பால் வெள்ளையாகவும், நீலக் கண்களோடும், பொன்னிறக் கேசத்தோடும், மெல்லிய உதட்டுச் சாயத்தோடும் அழகு வழிய ஆண்களைக் கவரும் தோற்றத்தோடு காட்சி தந்தார்கள். சில கணங்கள் அவர்களையே பார்த்த வண்ணம் நிற்கலாம் என்று சண்முகனுக்குத் தோன்றியது. பாவற் தோட்டத்தில் கையைப் பிடித்து இழுக்க இப்படியொரு பாவை கிடைத்து இருந்தால் என்கின்ற ஊர்க் கற்பனை அவனிடம் எழுந்தது.

பாவற் தோட்டத்தில் ஸ்பரிசித்த அவள் நினைவு மீண்டும் அவனுக்கு வந்து போனது. கவலையாக இருந்தது.

மற்றாசில் பார்த்தது போல இங்கே மொக்குக் கணினிகளாக இல்லாது சிறிய, நவீனமான கணினிகளுக்கு முன்பு அவர்கள் மாறாத புன்னகை தவழ, அழகுப் பொம்மைகளாக இருந்தார்கள். அவர்களின் மெல்லிய வளையும் விரல்கள் அதன் விசைப்பலகையில் நடன நாயகராய் நர்த்தனம் புரிந்தன. அழகிய அவர்களது ஆழ்கடலின் நீலத்தை அப்பிய கண்கள் உங்களுக்கு என்ன வேண்டும் என்பது போல வினாவியது. ஐரோப்பா இந்திரலோகமா என்கின்ற கேள்வி சண்முகனிடம் எழுந்தது.

அந்தக் கருமபீடங்களில் இருந்த இரண்டு பெண் அதிகாரிகளும் இவர்களைப் பார்த்துவிட்டு "உங்களுக்கு ஏதாவது உதவி வேண்டுமா? " என்று கேட்டார்கள். "TS" தனது "Boarding pass"ஐக் கொடுத்துத் தாங்கள் எந்த வாசலிற்குச் செல்ல வேண்டும் என்று கேட்டார். அவர்களில் ஒருத்தி அதை வாங்கிப் பார்த்துவிட்டு எல்லோரது "Boarding pass"ஐயும் தருமாறு கேட்டாள். பின்பு ஒவ்வொன்றாகப் பரிசோதித்தார்கள்.

"TS"சிற்கு வில்லங்கம் என்னும் நெருப்பில் விழுந்ததான தவிப்பு. ஏன் இப்படி நோண்டி நோண்டிப் பார்க்கிறார்கள் என்பது விளங்காத திகைப்பு. பார்ப்பதும் தருவதுமாகத் தந்து விடுவார்கள் என்று "TS" முதலில் நினைத்து இருந்தார். அது கனவாகச் சோதனை தொடர்ந்தது. அவர்கள் அவற்றைப் பார்த்துப் பார்த்து தங்களுக்குள் ஏதோ கதைத்தார்கள். பின்பு தொலைத் தொடர்பு சாதனத்திலும் ஏதோ கதைத்தார்கள். நிலைமை மோசம் ஆகுவதாய் "TS"சிற்குத் தோன்றியது. இளைஞர்கள் முகங்கள் எல்லாம் பேய் அறைந்த மாதிரி மாறிப் போயிற்று. அவர்கள் கதைக்கும் பிரஞ்சு மொழி யாருக்கும் விளங்கவில்லை. இப்படியாக அலசு அலசு என்று அவர்கள் அலசிவிட்டு,

"உங்கள் விமானம் மாறி இருக்கிறது. ஆனால் அந்த நேரத்திற்குப் புறப்படும். அதில் ஒரு சிக்கல் இருக்கிறது. நீங்கள் முதலிற் சென்று உங்கள் பொதிகளை எடுத்து ஒஸ்லோவிற்கு மாற்றிவிட்டுப் போக வேண்டும். அத்தோடு கேற்றும் மாறி இருக்கிறது." என்ற வண்ணம் புதிய

எண்ணை அதில் எழுதினாள். "TS" யோசனையோடு "சரி செய்கிறோம் என்றார்." அவர்கள் எல்லோரிடமும் கடவுச்சீட்டையும் "Boarding pass"ஐயும் திருப்பிக் கொடுத்தார்கள். அந்தப் பெண்களின் கை வியர்க்கவில்லை. வியர்த்து இருந்தால் வேறு வில்லங்கம் முளைத்து இருக்கும் என்பது "TS"சிற்குத் தெரியும். மட்டமான மையில் உருவான கடவுச்சீட்டு. சற்று வியர்வை கண்டாலே கற்பை இழந்து கரைந்துவிடும் ரகம். சலிப்போடு கருமபீடத்தை விட்டுச் சற்று தள்ளிப் போய் "TS" நின்று கொள்ள அவரைச் சுற்றி இளைஞர்களும் வந்து கூடினர். அருளேசுக்கு "Suitcase" பெட்டியின் நினைவாக இருந்தது. மற்றாசில் வெளிநாடு போவதற்காய் ஊரில் இருந்து உண்டியலில் வந்த பணத்தில் புதிய உடுப்புகள் வாங்கி வைத்து இருந்தான். கட்டம் போட்ட சட்டைகளும் அதற்குப் பொருத்தமாக "Jeans"களும் அதற்குள். பார்த்துப் பார்த்துத் துணி எடுத்து, அதைத் தையல்காரரிடம் கொடுத்து, அலைந்து தைத்தது. கடைசியில் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்பதாக அது கிடைக்காமல் போவதை அவனால் ஏற்றுக் கொள்ள முடியாத தவிப்பு. எப்படியாவது "Suitcase" பெட்டியை எடுத்து மாற்றிவிட்டுச் செல்ல வேண்டும் என்று அவன் மனது கிடந்து துடித்தது.

"அப்ப... நாங்கள் முதல்ல போய் சூட்கேசை எடுத்துப் போடுவம். இல்லாட்டிப் புது உடுப்புக்கள் அநியாயமாகப் போயிடும். வாங்க அண்ணை... சுணங்காமல் போவம்." என்றான் அருளன்.

"பதட்டப் படாதையும். பிளைற்றுக்கு இன்னும் கொஞ்ச நேரம் இருக்குது. இப்ப பெட்டியத் தேடிப் போய் பிளைற்றை மிஸ் பண்ண விடுகிறது நல்ல விஷயம் இல்லை."

"வேணும் எண்டா நீங்க போங்க அண்ணை. நான் போய் என்ரை சூட்கேசை எடுத்துப் போட்டிட்டு சுருக்கா வாறன்." என்றான் அருளன்.

"அங்க போய் சேர்ந்தா இப்படி எத்தின உடுப்பை வாங்கலாம். இப்ப முக்கியம் அங்க போய் சேருகிறது. ஓடிப் போய் பிளைற்றைப் பிடிப்பமோ, இல்லாட்டி உடுப்புப் பெட்டியைத் தேடுவமோ?" என்றார் "TS".

""TS" அண்ணை சொல்லுகிறதிலையும் ஒரு பொயின்ற் இருக்குது. இப்ப ஆர் எண்டாலும் எங்கள்ள ஒரு ஆள் போய் மாட்டுப்பட்டாலும் எல்லாருக்கும் பிரச்சனை வரும். உடுப்பு அங்க போயும் வாங்கலாம். இப்ப நோர்வேல தானாம் பிரச்சனை இல்லாமல் அசூல் குடுப்பாங்கள். எதுக்கு நாங்கள் சும்மா குழம்ப வேணும்?" என்றான் சிவா.

"அருள் நாங்கள் பிளைற்றுக்குப் போகிறது புத்தி. வாரும் போவம்." என்றார் "TS".

"அநியாயம்." என்றபடி அருளன் தழுதழுத்த குரலோடு, அழுவாரைப் போல அப்படியே நின்றான்.

"வாரும்... வேணும் எண்டா உடுப்பு வாங்க நாங்கள் காசு தாறம்." என்றார் "TS".

"இது என்ன சோதனை? அநியாயம் எண்டு நினைச்சன். நீங்கள் காசு தர வேண்டாம். சொன்னதே பெரிய காரியம். பெரிய மனசு உங்களுக்கு. வாங்க போவம்." யோசித்த வண்ணம் அருளன் நடக்கத் தொடங்கினான். அவன் பார்த்துப் பார்த்து வாங்கியதின் ஏக்கம் அவனை விட்டுக் கலைத்தது. விமானம் பிந்திவிடுமோ என்கின்ற பயத்தில் மற்றவர்கள் அமைதியாக எட்டி நடக்கத் தொடங்கினார்கள். ஒருவர் அல்லது இருவர் என்றால் பருவாய் இல்லை. இவ்வளவு பேரையும் ஏற்றாது விமானம் போகாது என்கின்ற நம்பிக்கை "TS"சிற்கு இருந்தது. இருந்தும் தேவை இல்லாத கவனத்தை ஈர்க்காது அங்கே போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்பது அவருடைய அவா ஆகியது.

எங்கே பார்த்தாலும் அழகிய யுவதிகள், நடுத்தர வயதினர், முதியோர்கள் என்று கூட்டம் அங்கும் இங்கும் அலை மோதியது. விமான நிலையம் என்பது இவ்வளவு பரபரப்போடு இருக்குமா என்கின்ற அதிசயம் பரமேசிற்கு. கூட்டத்தோடு சேர்ந்து அவனும் விரைவாக நடந்தான். நடந்து போகும் அசையும் பட்டியில் வந்த போது அதில் ஏற மறுத்துப் பரமேஸ் அருகால் ஓடி வந்தான்.

கடைகளையும், அதில் விற்கப்படும் இனிப்பு வகைகளையும், மது வகைகளையும், வாசனைத் திரவியங்களையும், உடுப்பு வகைகளையும் பார்க்கப் பார்க்க வண்டி வண்டியாய் பணம் எடுத்து வந்து, பொருட்களை வாங்கிக் கொண்டு செல்ல வேண்டும்

என்கின்ற ஆசை எழுந்தது. அது ஒரு பகற்கனவே என்பதை விளங்கிக் கொண்டவர்கள் அந்தக் கனவை ஒரு நாள் நிஜமாக்கும் வெறியோடு தங்கள் விமானத்தை நோக்கி வேகமாக நடந்தார்கள்.

நீலம் ஐரோப்பியருக்குப் பிடித்த நிறமாக இருக்க வேண்டும். நீலத்திற்கு ஒரு வீரியம் இருக்கிறது. ஆழ்கடலும், ஐரோப்பியரது கண்களும், திறந்த பிரபஞ்சமும் போர்த்திக் கொண்டு கோலம் காட்டும் அந்த நீலத்தின் வீரியம் யாரை மயக்காது என்று "TS" எண்ணினார். அதுவும் ஸ்கண்டிநேவியர் என்றால் நீலமோ என்கின்ற பிரமையே உண்டாகிறது என்பது அவரது அவிப்பிராயம். டென்மார்க்கின் கொடியில் மட்டும் நீலம் இல்லாவிட்டாலும் மற்றைய நாடுகளின் கொடிகளில் நீலம் இல்லாமல் கொடி இல்லை என்பதும் அவருக்குத் தெரியும். "நீலம் எனக்குப் பிடித்த கோலமோ?" என்று அவர் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

"S.A.S" என்று அழைக்கப்படும் ஸ்கண்டிநேவியரின் இந்த விமான நிறுவனத்திற்கும் நீலம் மிகவும் பிடித்த கோலமாக இருந்தது. இரவு குடித்துவிட்டு வெறியில் கூத்து அடித்த அலுப்பில் துவண்டு அலங்கோலமாய், அவசரமாய் வருவது பற்றி அலட்டிக் கொள்ளாமல், நீலக் கண்களும், நிமிர்ந்த மார்பும், தங்க முடியும், தவழும் புன்னகையுமாக இந்தப் பரதேசிகளை வரவேற்று இன்முகம் காட்டியது "TS"சிற்குப் புளகாங்கிதத்தை உண்டு பண்ணியது.

அவர்கள் "Boarding pass"ஐ வாங்கிப் பார்த்து விட்டு எங்கு இருக்கை இருக்கிறது என்பதைக் காட்டினார்கள். இந்த விமானத்திற்கு மாறி ஏறுவது இவ்வளவு சுலபமாய் இருக்கும் என்று எதிர்பார்த்து இருக்கவில்லை. என்றாலும் பயணப் பெட்டிகளைத் தொலைத்து விட்டு வருவது மாத்திரம் பலருக்கும் வேதனை தந்தது. அதுவும் அருளனுக்குக் கடுமையாக வலித்தது. "S.A.S" விமானம் நேரத்திற்கு எடுப்பதில், பயணிகளை உபசரிப்பதில் பெயர் போனது. அது தனது பெயரையும் கௌரவத்தையும் எப்போதும் தக்க வைத்துக் கொள்ளும். அப்படியே இன்றும் நடந்தது. அவர்கள் நேரத்திற்கு விமானத்தின் கதவைச் சாத்தினார்கள். நாங்கள் ஐந்து ஆறு பேர் என்கின்ற நினைப்பில் ஆறுதலாய் வந்து இருந்தால் அதோ கதி என்பது அப்போது "TS"சிற்கு நன்கு விளங்கியது.

ராஜ மரியாதை கிடைத்த மமதையில் இளைஞர்கள் தங்கள் இருக்கைக்குச் சென்றார்கள். "Boarding pass"சில் இருக்கும் எண்ணைப் பார்த்துத் தற்போது தங்கள் இருக்கையை அடையாளம் காண அவர்கள் பழகிக் கொண்டதை "TS" அவதானித்தார். பதினேழு அல்லது பதினெட்டு வயதுடைய அழகிய இளம் பெண்கள் அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாய் பார்வை என்னும் வாட்களை பளபளக்க வீசினர். வாள் கொல்லும் அல்லது வெல்லும். பெண்ணின் விழி என்னும் வாளும் ஆணைக் கொல்லும் அல்லது வென்று அடிமை ஆக்கும். கொல்லப்படுவது அல்லது வெல்லப்படுவது விளங்கியும் பெண்ணிடம் மாட்டிக் கொள்வது இயற்கை ஆணுக்குக் கொடுத்த நியதியும், தெரிவும் ஆகிறது.

நியதி தெரிந்தும் நீங்க முடியாத விட்டில் பூச்சிகளாய் அவர்களை அடங்கா மோகத்தோடு மேய்ந்த இளைஞர்களின் பார்வையை அவதானித்த "TS"சிற்குச் சிரிப்பு வந்தது. காதல் நாடகம் நடத்தி இருக்க வேண்டிய காளைப் பருவத்தில் காலம் செய்த கோலத்தால் தூர தேசம் வந்தாலும் காமன் பார்வையைக் கடந்துவிட முடியாது என்பது அவருக்கு விளங்கியது.

வளமையான விமான நடனங்கள் தொடங்கின. சிறிது நேரத்தில் விமானம் பறக்கத் தொடங்கியது. 'பரிசில்' இருந்து ஒஸ்லோவிற்குக் கிட்டத்தட்ட இரண்டு மணித்தியாலப் பயணம். அதற்கு ஏற்ப உணவும் குடிவகைகளும் வழங்கப்பட்டன.

மீண்டும் ஒரு முறை போதை தரும் மதுவை அருந்தப் பலருக்கும் தவிப்பாக இருந்தது. வெறியில் இறங்கித் தடுமாற முடியாது என்கின்ற அச்சம் இப்போது அவர்களிடம் இருக்கவில்லை.

"TS"சிற்குச் சாப்பாடு வழங்கினார்கள். "Chees" உருண்டை பெரிய இலந்தைப் பழம் போல் சிவப்பு மெழுகால் உறையிடப்பட்டு அழகாய் இருந்தது. அதை ஆறுதலாகச் சாப்பிட வைத்து விட்டு மற்றைய சாப்பாட்டைச் சாப்பிடத் தொடங்கினார். குடிப்பதற்கு வழமை போல வயின் எடுத்துக் கொண்டார்.

அவர் சாப்பிட்ட வண்ணம் இருக்கும் போது குலம் அவசரமாக மலசலக் கூடத்திற்குச் சென்றான். அலுவல் முடியத் திரும்பி வந்தவன், "TS"சிற்குப் பக்கத்தில் வந்து

நின்றான். "TS" என்ன என்பது போல அவனை நிமிர்ந்து பார்த்தார்.

"கக்கூசுக்க நீல மை மாதிரி தண்ணி ஓடுது அண்ணை." என்றான்.

"அதைச் சொல்லவே இப்ப வந்தனீர்?"

"இல்ல வித்தியாசமாய் இருக்குது... அது தான்..."

"அது சுகாதாரத்திற்காக வேண்டி அப்பிடி வரும்."

"சரி அண்ணை... கிழிச்சுப் போட்டு இறங்க வேணும் எண்டு எஜென்சி சொல்லி விட்டார்."

"சரி அதுக்கு இப்ப என்ன அவசரம்? பொறுமையா இரும். இன்னும் நேரம் இருக்குது."

"இல்லக் கேட்டன்... உங்களுக்கும் அப்பிடிச் சொன்னாரோ எண்டு தான்..."

"எல்லாருக்கும் அப்பிடி சொல்லி இருப்பினம். அவையின்ரை இரகசியம் பிடிபடாமல் இருக்க வேணும். நாங்களும் திரும்பாமல் இங்கயே தங்க வேணும் எண்டா அப்பிடித்தான் செய்ய வேணும்."

"நீங்கள் சொல்லுகிறது சரி."

"அது என்ன வாயில இரத்தம் போல இருக்குது?"

"இல்ல அந்தச் சாப்பாட்டுக்க சிவப்பு பேழையாட்டம் ஏதோ வைச்சு இருந்தாங்கள். நான் சாப்பிட ஏதோ மெழுகு மாதிரி இருந்திச்சு. அதாக்கும் போல."

"சரி நீர் போய் உம்மடை சீற்றில இரும்."

அவன் நகர்ந்து சென்றான். அது ஒருவகை சிறிய "Chees" உருண்டை. அந்த உருண்டைச் "Chees"ஐச் சுற்றிப் பழுதாகாது இருப்பதற்கு மெழுகில் பொதி செய்யப் பட்டிருக்கும். அந்த உறையை நீக்கிவிட்டு உள்ளே இருக்கும் "Chees" மட்டும் உண்ண வேண்டும். அந்த உறையை நீக்கியே உண்ண வேண்டும் என்பது குலத்திற்குத் தெரிந்து இருக்க வாய்ப்பு இல்லை. நீ மெழுகைச் சாப்பிட்டு விட்டாய் என்று விளக்கம் கொடுத்து அவனை அம்பலப்படுத்த "TS"சிற்கு மனது இல்லை. அடுத்த முறை சாப்பிடும் போது அவனாக அதை அறிந்து

கொள்வான் என்பது "TS"சின் கணிப்பு ஆகியது. ஐரோப்பாவில் வயிற்றைக் கலக்கினால் போவதற்கு அவதிப்படத் தேவை இல்லை. அவன் பிழைத்துக் கொள்வான் என்று "TS" எண்ணினார்.

விமானம் ஒஸ்லோவை அடைவதற்கு நாற்பது நிமிடங்கள் இருக்கும் போது வரிச்சலுகைப் பொருட்கள் விற்பனை ஆகின. சில சுதேசிகள் அப்பொருட்களை ஆர்வத்தோடு வாங்கினார்கள். பாளம் பாளமாய் கிடந்த சிகரெட் பொதிகளும், பளபளக்கும் திரவங்களும் அள்ளிக் கொண்டு போக வேண்டும் என்கின்ற ஆசையை உண்டு பண்ணியது. வாங்கி எங்கே கொண்டு செல்வது? வாங்குவதற்கு பணம் இருக்கிறதா என்கின்ற கேள்வி அவர்கள் ஆசையைத் துண்டாடியது. ஆசைகளை அடக்க வேண்டிய வழியில்லாத புத்தர்களாய் பொறுமை காத்தனர்.

நேரம் செல்லச் செல்ல பெடியளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. இறங்குவதற்கு முதல் எல்லாவற்றையும் தகனம் செய்துவிட வேண்டும் என்கின்ற துடிப்பு. மலசலக் கூடத்தைப் பார்ப்பதும் "TS"சைப் பார்ப்பதுமாக அவர்கள் அந்தரப்பட்டார்கள். அதைவிடச் சில சுதேசிகளும் வந்ததைக் கழிக்க முந்தியடித்தார்கள்.

ஒவ்வொருவராகச் சென்று அலுவல் முடிய வேண்டும் என்பதை உணர்ந்த "TS" இனி தொடங்குங்கள் என்று கண்ணைக் காட்டினார். சண்முகனும் அருளும் எழுந்து முதலிற் சென்றார்கள். ஐந்து நிமிடம் சென்றிருக்கும். ஆசனத்தில் இருந்தவர்கள் ஆளையாள் பார்த்துக் கொண்டார்கள். என்ன நடக்கிறது? கேள்விகள் எழுந்தாலும் கேட்பதற்குத் துணிவில்லாது அவதிப்பட்டனர். அடுத்த நிமிடம் அவர்கள் வந்து ஆசனத்தில் அமர்ந்தார்கள். அவர்கள் வியர்வை முத்துக்களை ஈர்ந்து துவண்டு போயிருந்தனர். பெரிய போராட்டமே நடந்திருக்கும் என்பது விளங்கியது. "TS" என்ன என்பது போல தலையைக் கேள்வியாக மேலே உயர்த்தி ஆட்டினார்.

"மட்டை அண்ணை... கலர் கலராப் பிரழுது. ஆனாக் கிழியுதும் இல்லைக் கழியுதும் இல்லை. பத்துத் தரம் தண்ணியடிக்க வேண்டி இருக்குது. பல்லால கடிச்சு பிச்சு எறிஞ்சன்." என்றான் சண்முகன்.

"என்னிட்ட ஒரு சாமான் இருக்குது." என்று கூறிய வண்ணம் "Coca Cola can" ஒன்றை அழுத்தினான் சொரூபன். அவசரமாய் அழுத்தி முடிந்ததும் ஒருவித வீறாப்போடு எழுந்தான். அவனுடன் றுபனும் எழுந்தான். இருவரும் மல்லுக்குப் போவதான திணிசில் மலசலக்கூடம் சென்றனர்.

மூன்று நிமிடம் சென்று இருக்கும். மலசலக் கூடத்தில் மல்லுக் கட்டிவிட்டு வருவது போலவே இருவரும் திரும்பி வந்தார்கள். வியர்வை முத்துக்கள் ஆறாகியதாக அதீத ஈரலிப்பில் அவர்கள் முகங்கள். போராட்டத்தின் கடுமையில் அவசரமாக மூச்சுவாங்கும் அவதி. வெட்கத்தோடு மற்றவர்களைப் பார்த்த பார்வையில் பரிதவிப்பு.

சொரூபன் அலுவல் முடித்து விட்டு வரும்போது இந்த அவஸ்தைகளோடு விரலில் இருந்த காயத்தால் வடியும் இரத்தத்திற்குக் காகிதம் சுற்றி வந்தான். நெற்றியில் வழக்கத்திற்கு மாறாகச் சில சிவப்பு வியர்வைத் துளிகள். எதற்காக அந்த நீல அட்டையின் மையில் கோட்டை விட்ட பின்பு அவ்வளவு கவனம் எடுத்துக் கொண்டார்கள் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. நோர்வே நாட்டில் அகதிகளாய் தஞ்சம் கோரியவர்களுக்கு அந்த நாடு தற்காலிகமாகக் கொடுத்த கடவுச்சீட்டைப் பிரதி பண்ணி இருந்தார்கள். பிரதி பண்ணுவதில் மட்டையை மாத்திரம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். அது இரத்தம் சிந்தும் சவாலாகியது.

மற்றவர்களின் முறையும் வந்தது. அவர்கள் நெஞ்சை நிமிர்த்திய சிங்கங்களாய் போய் நொந்து, நொடிந்து அசிங்கங்களாய் வெளியே வந்து, அப்பாட என்று இருக்கையில் அமர்ந்தார்கள். கடவுச்சீட்டைக் கிழித்து, மலசலக் கூடத்தில் கழித்ததுடன் விமர்சையாக ஆரம்பமானது இவர்கள் அகதி வாழ்க்கை. பின்பு வந்த காலத்தில் மலசலக்கூடக் கழிவிலும் அகதிகள் சட்டத்தை மீறி வந்ததிற்கான ஆதாரம் தேடியதான வரலாறும் உண்டு. காலம் மாறியதா? காலம் மாறுவது இல்லை என்றால் காலம் என்று ஒன்று உண்டு என்கின்ற கற்பனையில் மனிதர்கள் மாறுகிறார்களா? இந்த உலகில் நித்தியமாய் நிலைப்போம் என்றும், நிலைக்க மாட்டோம் என்றும் தடுமாறுகிறார்களா? காலத்தை மனிதன் கணித்து இருந்தாலும் மாற்றங்களை மனிதன் கணிக்க முடியாது

போய்விடுகிறது. கணித்து இருந்தால் வாழ்வின் சுவாரசியம் அசையாத காலமாய் ஸ்தம்பித்து இருக்கும்.

அலுவல் முடிந்தது. அன்னியரின் செயல் சில சுதேசிகளுக்கு விளங்கவில்லை. அவர்கள் நூதனமாக அந்த அன்னியர்களைப் பார்த்தார்கள்.

# 6 ஒஸ்லோ விமான நிலையம்

விமானத்தின் ஒலிபெருக்கி செருமியது. பின்பு அது அந்த நாட்டு மொழியில் ஏதோ சொல்லியது. அன்னியரான இளைஞர்கள் விளங்காது "TS"சைப் பார்த்தார்கள். "TS" விளங்காது வாணிக வர்க்க இருக்கைகளைப் பார்த்தார். விடைகளோடு விடை ஏறியவன் வரவில்லை. விமானி அருள் பாலித்தார். அவர் ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினார். அவர் ஒஸ்லோ பொர்ணவு விமான நிலையத்தில் இன்னும் பதினைந்து நிமிடங்களில் தரையிறங்கி விடலாம் என்றும், வெளியே சக இரண்டு பாகை வெப்பநிலை என்றும், தங்களை அடுத்த முறையும் பயணத்திற்காக எதிர்பார்ப்பதாயும் கூறி முடித்தார்.

விமானி முடிக்கவும் "என்னவாம்?" என்பது போல இளைஞர்கள் "TS"சைப் பார்த்தார்கள். "இன்னும் பதினைஞ்சு நிமிசத்தில இறங்கீடுமாம்." என்றார் "TS". "ஆ... கடவுள் கண்ணைத் திறந்திட்டார்." என்றான் ரூபன். "அதுக்கு ஏஜென்சி பலபேற்ற கண்ணை மூடிட்டார். அதால இப்ப நீர் கடவுள் கண்ணைத் திறந்ததாகக் கதை விடுகிறீர்." என்றான் சிவா. "ஏஜென்சி அவையின்ரை கண்ணை மூடாட்டி நாங்கள் செவ்வாய் போல இங்க காலை வைக்க முடியாது." என்றார் "TS".

"அப்ப நாங்கள் இறங்கி என்ன செய்கிறது அண்ணை?" என்று கேட்டான் நிமலன்.

"கையை உயத்திக் கொண்டு வரிசையாப் போக வேணும்." என்று சிவா சிரிக்காமல் சொன்னான்.

"ஏன் இஞ்சையும் ஆமியே நிற்கப் போகிறான்கள். நீர் நல்லாப் புல்டா விடுவீர் போல இருக்குது." என்றான் நிமலன்.

"இல்லை... அசூல் அடிக்கிலிக் கையை உயர்த்திக் கொண்டு போக வேணுமாம். நான் கேள்விப் பட்டதைச் சொல்லுகிறன். வேணும் எண்டா "TS" அண்ணையைக் கேட்டுப் பாரும்." என்றான் சிவா.

"உண்மையாவா அண்ணை?" என்றான் நிமலன் சந்தேகத்தோடு.

"அவருக்கு உம்மோடை சொறிகிறதில ஒரு இன்பம்." என்றார் "TS" சிரிப்போடு.

"இவர் சொல்லுகிறதை எல்லாம் நான் நம்புவனே? எனக்கும் சொந்தக்காரர் வெளிநாட்டில இருக்கினம் தெரியுமோ? அவை, வெளிநாடு எண்டா என்ன மாதிரி இருக்கும் எண்டு சொல்லி இருப்பினம் தானே? சிவா அண்ணைக்கு நக்கலும் நளினமும் கூடத்தான்." என்றான் நிமலன். அவன் படபடப்பு விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கின்ற தொனியில் இருந்தது.

"நீர் கெட்டிக்காரன். பிளைற்றால இறங்கிறத்துக்கு இப்ப றெடியாகும். இங்கையும் தனித் தனிய, இயக்கங்கள் மாதிரி, இருட்டறைக்க வைச்சு விசாரிப்பாங்களாம். அப்ப தெரியும் நான் சொன்னது உண்மையா பொய்யா எண்டு." என்று சிவா வெருட்டினான்.

"ஐயோ உங்கடை புல்டாவை நிப்பாட்டுங்க... நான் உதை எல்லாம் நம்பமாட்டன்..." என்றான் நிமலன்.

விமானம் சடுதியாக வேகத்தைக் குறைத்து அமைதியாக நகர்ந்தது. வெளியே இருண்டு விட்டதால் விமான நிலையம் மின்னொழியில் தகதகத்தது. கண்ணுக்கு எட்டும் தூரம் வரையும் மின்னொழியும் வாகன அசைவுகளும் நகரும் நட்சத்திரங்களைப் பூமியில் ஊர விட்டதாகத் தோன்றின. இப்படி ஒளி ஆழியாய் மின்சார வெளிச்சத்தை இலங்கையில் நிமலன் பார்த்தது இல்லை. பார்க்கப் பார்க்க அது மலைப்பாக இருந்தது. எல்லாவற்றிலும் எங்கள் நாடுகளில் கண்டிராத புதுமையும் நவீனமும் இங்கே புதைந்து கிடப்பதாக அவனுக்குத் தோன்றியது. பகல் என்றால் நன்கு பராக்குப் பார்த்து இருக்கலாம் என்கின்ற ஏக்கம் நிமலனுக்குள் எழுந்தது. இப்பொழுது அதை கதைக்கப் போனால் சிவா அறுப்பான் என்று பேசாது இருந்தான்.

விமானம் வேகம் துறந்து அமைதி கண்டது. ஆசனப் பட்டிகளைக் கழற்றுவதற்கான சமிக்கை கொடுக்க முதலே சிலர் அதைக் கழற்றிவிட்டு எழுவதற்குத் தயாரானார்கள். விமானப் பணிப் பெண்கள் அப்படிச் செய்யக் கூடாது என்று இருக்கையில் இருந்தவாறே அவர்களுக்குப் புத்திமதி கூறினார்கள். பின்பு அவர்கள் இருக்கையை

விட்டு எழுந்து கொண்டாலும் பயணிகளை இருக்குமாறு தொடர்ந்தும் வற்புறுத்தினார்கள்.

விமானத்தை விட்டு வெளியே பாய வேண்டும் என்பது நிமலனின் அடங்காத ஆசை. வெளியே போனவுடன் என்ன நடக்கும் என்பது அவனுக்குத் திகைப்பைத் தந்தாலும் அதைச் சந்திக்கும் அவசரம். இலங்கையில் குற்றம் செய்து அல்லது செய்யாமல் காவலரிடம் அகப்பட்டால் அவர்களின் கையே முதலில் பேசும். அடித்தால் மட்டுமே காவலர்கள் என்கின்ற அறியாமை அவர்களிடம். காவலர்களைப் பார்த்துப் பயப்படுவதே முதலில் வளமையாக இருந்தது. பின்பு இராணுவத்தைப் பார்த்துப் பயப்பட வேண்டி வந்தது. அதன் பின்பு கடற்படையையும் பார்த்துப் பயப்படத் தொடங்கினார்கள். கடைசியாகச் சிங்களவரைப் பார்த்துத் தமிழர்கள் பயப்பட்டார்கள். காலப் போக்கில் சிங்களவர்கள் தமிழரைப் பார்த்து பயப்பட்டார்கள். ஒஸ்லோவிலும் காவலர்களைப் பார்த்துத் தாங்கள் பயப்பட வேண்டும் என்று நிமலனுக்குத் தோன்றியது. இலங்கைக் காவலர்கள் நினைவே அவன் மனதை ஆக்கிரமித்தது. அப்படி இருக்க மாட்டார்கள் என்று வெளிநாடு போய் வந்தவர்கள் சொல்லி இருந்தாலும், அவனால் அதை நம்ப முடியவில்லை.

பணிப் பெண்களைப் பற்றிக் கவலைப்படாது பலர் ஆசனப் பட்டியை நீக்கிவிட்டு அவசரமாக எழுந்தார்கள். மனிதர்களுக்கு எத்தினை அவசரம்? எங்கிருந்து வந்தோம், எங்கே போகப் போகிறோம் என்பது விளங்காது, இடையில் கிடைக்கும் வாழ்வில் எதைப் பிடிக்க இத்தினை அவசரம்? எத்தினை கற்பனை? எத்தினை காதல் என்னும் காமம்? எத்தினை கபடம்? எத்தினை பொய்? எத்தினை துரோகம்? இந்த வாழ்வு நித்தியம் என்கின்ற மாயையில் புத்தி பேதலித்து எழும் எத்தினை குழப்பங்கள்? நிமலனுக்குத் துரோகிகள் யார் உத்தமர் யார் என்பது விளங்கவில்லை. சிவா துரோகியா? யார் துரோகி? எப்போது ஒருவன் மற்றவனுக்குத் துரோகி ஆவான்? நல்லவனுக்கும் குரூரமான துரோகிகள் இருப்பார்கள். கெட்டவர்களுக்கும் அதி விசுவாச நண்பர்கள் இருப்பார்கள். இது உலக நியதி அல்லவா என்று நிமலன் சலித்துக் கொண்டான்.

"என்ன நிமலன் பிளைற்றில இருந்து இறங்கப் போகிற நேரத்தில ஈரோசின்ர குண்டு போல இதுக்கையும் என்னத்தையோ வைக்க யோசிக்கிறீர் போல இருக்குது?" என்றான் சிவா.

"உங்களுக்கு எப்பவும் பகிடி. வெளியால போனா என்ன செய்வாங்களோ எண்டு பயமா இருக்குது." என்றான் நிமலன்.

"சும்மா பகிடி விடக் கூடாது. வெளியால போனா நிச்சயமா முதல்ல பச்சை மட்டையால அடிப்பாங்களாம். அதுக்குப் பிறகு விசாரிப்பாங்களாம். அது என்ன எங்களுக்குப் புதிசே? சட்டையைக் கிளப்பினி எண்டா உன்ரை முதுகிலும் அந்த அடையாளம் இருக்குதோ, இல்லாட்டிப் பிட்டுக்கு மண் சுமக்கேக்க பித்தனுக்குக் கிடைச்சது மட்டும் இருக்குதோ எண்டு பார்க்கலாம்." என்றான் சிவா.

"பிட்டுக்கு மண் சுமந்தாரும், பச்சை மட்டையால அடி வாங்கினவங்களும்... நீங்கள் எப்பவும் வில்லங்கம் ஆகத்தான் கதைப்பியள் போல இருக்குது? நீங்கள் வெளிநாட்டை வாறதால நிச்சயமா உங்கடை அம்மா, அப்பா இப்ப நிம்மதியாய் மூச்சு விடுவினம். அதோடை பச்சை மட்டையால அடி வாங்கிற அளவுக்கு நாங்கள் ஒண்டும் கிரிமினல் இல்லை எண்டும் விளங்கிக் கொள்ளுங்கோ." என்றான் நிமலன்.

"இனி அவை மூச்சு விடுகினமோ இல்லாட்டி மூச்சையே விடுகினமோ எண்டு இருந்துதான் பார்க்க வேணும். நீர் கான் லக்கேஜ்சை எடும்... சனம் அசையத் தொடங்கீட்டுது."

இவர்களது உரையாடலைக் கேட்டுக் கொண்டு சிரித்த வண்ணம் நின்ற "TS" "ஆர் குத்தினாலும் அரிசியானாற் சரி." என்றார் தனது ஊர்ப் பாணியில்.

"உங்களுக்கு நல்ல மனசு. ஆனால் தான் குத்தினால் மட்டும் அரிசி வரும். மற்றவை குத்தினால் ஆலகால விஷம் வரும் எண்டு கதை விடுகிறவை பற்றி உங்களுக்குத் தெரியாமல் இல்லை. எல்லாரும் ஆர் குத்தினாலும் அரிசியானாற் சரி எண்டு நினைச்சா ஏன் இந்தப் பிரச்சனை எல்லாம் சொல்லுங்க பார்ப்பம் அண்ண? சுயநலத்தோடை, அகங்காரத்துக்குத் துணை போகிறது இறந்த நீதியோடை குடும்பம் நடத்துகிறது மாதிரி இல்லையா?" என்றான் சிவா.

"நீ சொல்லுகிறதும் சரி சிவா. அதுக்காகச் சின்னச் சின்ன உரசலுக்குப் போய் நெற்போருக்கு நெருப்பு வைக்க முடியுமா?"

"நெற்போருக்கு நெருப்பு வைச்சாலும் அடுத்த வருசம் அமோகமா விளையும். காணியையே யாரிட்டையோ குத்தகைக்குக் குடுக்கிற மாதிரிச் செய்தா?" என்றான் சிவா.

"நீர் வீணாக் கற்பனை செய்யிறீர். அப்பிடி எல்லாம் ஒரு நாளும் நடக்காது. நாங்களும் ஒரு நாளைக்கு நெஞ்ச நிமிர்த்துகிற காலம் வரும்." என்றார் "TS" அசைக்க முடியாத நம்பிக்கை உடன். அவரது நம்பிக்கை சிவாவிற்கு வியப்பைத் தந்தது. எப்படி இவரால் இவ்வளவு நம்பிக்கையாக இருக்க முடிகிறது என்று அவனுக்கு விளங்கவில்லை. சனம் வெளியே போகும் அவசரத்தில் அவனைத் தள்ளத் தொடங்கியது. அவன் தனது கைப் பையை எடுத்துக் கொண்டான். "TS"சும் தனது பொருட்களை எடுப்பதில் மும்மரமானார். எடுத்த பின்பு நிமிர்ந்து சிவாவைப் பார்த்தார். சிவா அவரைப் பார்த்து,

"நெஞ்ச நிமிர்த்துகிறமோ இல்லையோ இராவணனுக்கு வந்த தலை குனிவு வராமல் இருந்தால் பெரிய விஷயம். நாங்கள் எல்லாம் வரும் காலத்தில வேரறுந்து போகாமல் விட்டால் அது அதைவிடப் பெரிய விஷயமா இருக்கும்."

அதற்கு மேல் சிவாவால் ஒரு இடத்தில் நிற்க முடியவில்லை. அவனது அந்தக் கருத்திற்கு "TS"சும் பதில் சொல்லவில்லை. கூட்டத்தோடு கூட்டமாக எல்லோரும் விமானத்தை விட்டு வெளியேறினார்கள். விமானத்தின் வாசலில் விமானப் பணிப் பெண்கள் நின்றனர். அவர்கள் தங்களைப் புதிதாக அலங்கரித்து இருந்தனர். இளமையும், வெள்ளையும் பல வேளைகளில் அழகாக இருப்பதாய் "TS" எண்ணிக் கொண்டார்.

அந்த விமானப் பணிப் பெண்கள் ஏதோ சுதேச மொழியிற் கதைத்தார்கள். பின்பு வெளிநாட்டவரைக் கண்டதும் போய் வாருங்கள் என்று ஆங்கிலத்தில் கூறினார்கள். விமானத்தின் வாசலில் மாற்றுத்திறனாளிகளுக்கும், பிள்ளைகளுடன் வரும் பெற்றோருக்கும் உதவி செய்வதற்காகவும், அத்தோடு பேருந்தில் மற்றவர்களையும் ஏற்றி அனுப்புவதற்காகவும், நீல ஆடை மீது பச்சை அங்கி ஒன்றை அணிந்த வண்ணம், இருவர் நின்றார்கள்.

அவர்கள் வழிகாட்டலோடு எல்லோரும் விறு விறு என்று பேருந்தில் ஏறினார்கள்.

இளைஞர்கள் ஒவ்வொருவரும் தங்கள் நடையின் வேகத்தைக் குறைத்து "TS"சைச் சுற்றி அண்டினார்கள். அவர்கள் பார்வையில் ஒருவித மிரட்சியோடு என்ன செய்வது என்கின்ற கேள்வியை "TS"சால் அவதானிக்க முடிந்தது.

"என்ன இங்க நிண்டு குழம்புறியள். பேசாமல் வஸ்சில ஏறுங்க. ஏயாப்போட்டுக்கு உள்ள போனால்தான் இமிக்கிறேசன் வரும். அங்க எங்களை விசாரிப்பாங்கள். அதுவரைக்கும் நாங்கள் யாருக்கும் பயப்பிடாமல் மற்றவைய மாதிரி அவசரமாய் போக வேண்டியதுதான்." என்றார்.

அவர் அப்படிக் கூறிய பின்பு அனைவரும் முந்தி அடித்துப் பேருந்தில் ஏறிக் கொண்டார்கள். அந்த விமான நிலையத்தின் பேருந்து ஐந்து நிமிடத்தில் குடிவரவுக் குடியகல்வுக் கட்டடத்தை அடைந்தது. அங்கே சென்றதும் சுதேசிகளுக்கான வரிசையில் பலர் போய் நின்றார்கள். அவர்களில் ஒரு சிலரே வித்தியாசமான நிறத்தை உடையவர்கள். சுதேசிகளைப் பார்ப்பதற்கு ஒரு பெண் அதிகாரியும் ஒரு ஆண் அதிகாரியும் தயாராக இருந்தார்கள். அவர்கள் மென் நீல நிறத்தில் உள்ள மேற்சட்டையில் மஞ்சள் நிறத்தில் "Politi" என்று எழுதி இருந்தது. இரண்டு கை மூட்டிலும் அரச முத்திரை சிவப்பில் பதிந்து கிடந்தது. கடும் நீல நிறத்தில் அவர்கள் "Tie"கட்டி இருந்தார்கள். காவல் அடையாள அட்டை அவர்கள் கழுத்தில் தொங்கியது.

வரிசையில் நின்றவர்கள் தங்களது சிவப்பு நிற நோர்வே நாட்டுக் கடவுச்சீட்டைக் காட்ட அவர்கள் உடனடியாக உள்ளே போக அனுமதிக்கப்பட்டார்கள். "TS"சும் மற்றைய இளைஞர்களும் பின்னடிப்பதைப் பார்த்த அதில் இருந்த பெண் அதிகாரிக்குச் சந்தேகம் வந்து விட்டது. நோர்வேயில் தமிழ் அகதிகள் வந்திறங்கத் தொடங்கிய காலம் அது. இதற்கு முன்பு வந்தவர்களின் அனுபவம் அவருக்கு இருந்திருக்கும். அந்த அதிகாரி வேறு அதிகாரியைத் தொலைத் தொடர்புச் சாதனத்தின் மூலம் தொடர்பு கொண்டாள். சுதேசிகள் போய் முடிந்த பின்பு வேற்று நாட்டுக்காரரின் ஆவணங்களை ஆராய்வதில் அந்த அதிகாரிகள் மும்மரம் காட்டினர். "TS"சும் இளைஞர்களும்

தற்போது பின்னே தனித்து நின்றார்கள். கூட்டிற்குள் இருந்த அதிகாரிகள் தங்களை அடிக்கடி பார்ப்பதாக "TS"சிற்குத் தோன்றியது.

சிறிது நேரம் செல்ல வேறு ஒரு காவல் அதிகாரி இவர்களை நோக்கி வந்தார். அவர் ஆறடி உயரம் இருப்பார். நல்ல பருமனாக இருந்தார். பத்துப்பேரை அடித்து விழுத்தும் பரந்த மல்யுத்த வீரனான உருவம் என்று நிமலன் நினைத்தான். அவருக்குப் பழுப்பு நிறமான பூனைக் கண்கள். தலை முடியும் பழுப்பு நிறத்தில். உரல் போன்ற கைகளில் பிதுங்கும் தசைகள். பார்வையின் கூர்மை பயந்த இதயத்தை நடுங்க வைத்தது. அவர்களைப் போன்று இவரும் காவலர்களின் சீருடை அணிந்து இருந்தார். இடுப்பில் தொலைத் தொடர்பு சாதனம் தொங்கியது. அருகில் வந்த உடன்.

"கடவுச்சீட்டைத் தாருங்கள்." என்று அதிகாரத்தோடு பொதுவாக எல்லோரையும் பார்த்துக் கேட்டார். ஒருவரும் அதற்குப் பதில் அளிக்கவில்லை. எதையும் எடுத்து நீட்டவும் இல்லை. அந்தப் பகுதியில் இப்போது ஒரு சிலர் மட்டுமே நின்றனர். மற்றவர்கள் அதைத் தாண்டி தங்கள் பொதிகளை எடுப்பதற்குச் சென்று விட்டார்கள்.

"எங்கே கடவுச்சீட்டு?" என்று மீண்டும் அவர் கேட்டார்.

"நாங்கள் கிழித்து எறிந்து விட்டோம். எங்களை அப்படிச் செய்யுமாறு முகவர் கூறினார்." என்று உண்மையைத் துணிவோடு ஆங்கிலத்தில் கூறினான் சிவா. அதைக் கூறியதில் அவனுக்கு ஒருவித திருப்தி. வாயை வைத்துக் கொண்டு சும்மாய் இருக்க முடியாதா என்பது அவன் கூறியதைக் கேட்ட மற்றவர்களின் எரிச்சல். அவன் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை. அந்த அதிகாரிக்கும் தான் எதிர்பார்த்த பதில் கிடைத்ததான மன நிறைவு. "எனக்குப் பின்னால் வாருங்கள்." என்று கூறிவிட்டு அவர் நடக்கத் தொடங்கினார்.

விமானம் நிறுத்திய பின்பு அதில் இருந்து இறங்கிப் பேருந்தில் ஏறும் போது கடும் "AC"குள் போவதாய் குளிர்ந்தது. விமான நிலையத்திற்கு உள்ளேயும் "TS"சிற்குச் சாதுவாய்க் குளிர்ந்தது. போகப் போக இது பழகிவிடும் என "TS" எண்ணிக் கொண்டார். அந்த அதிகாரிக்குத் துணையாக இன்னும் ஒரு அதிகாரி வந்து சேர்ந்தார். அவருக்குப் பின்னால் அனைவரும் இனி என்ன

என்கின்ற கேள்வியோடு அமைதியாகச் சென்றார்கள். இலங்கையில் இராணுவம் இப்படி அழைத்துச் சென்று இருந்தால், கடந்த வாழ்நாள் நினைவு எல்லாம் கடைசிக் கணங்கள் என்பதாய் வந்து போய் இருக்கும். இவர்களுக்குப் பின்னால் போகும் போது வாழப் போகும் நினைவு மட்டுமே அவர்களுக்கு வந்து போனது.

போகும் இடம் எல்லாம் தரைக்கு நீல நிறத்தில் கம்பளம் பதித்து இருந்தார்கள். பெரிய பெரிய கண்ணாடிக் காலதர்களை உடைய கட்டடம் அது. வெளியே விமானங்களின் ஏறலும் இறங்கலும் அதனூடாகத் தெரியும் பௌவியம். வெளியே நிலவும் குளிர் உள்ளே இல்லாதவாறு வெப்பம் ஆக்கும் வெப்பம் ஊட்டிகள்.

இவர்களை அழைத்துக் கொண்டு விமான நிலையத்தின் தொங்கலில் இருந்த ஒரு கட்டடத்திற்கு அவர்கள் சென்றார்கள். பின்பு இவர்களை அங்கே காத்திருக்க விட்டார்கள். மீண்டும் சிறிது நேரத்தில் திரும்பி வந்தவர்கள் ஒரு படிவத்தைக் கொடுத்து அதை நிரப்பச் சொன்னார்கள். அதில் குடும்பப் பெயர், சொந்தப் பெயர், இலங்கை முகவரி, பிறந்த திகதி, தாய் தகப்பனின் பெயர், சகோதரங்களின் பெயர் போன்றவை கோரப்பட்டு இருந்தன. அதை நிரப்புவதற்கு "TS"சும் சிவாவும் மற்றவர்களுக்கு உதவி செய்தார்கள்.

"இதை நிரப்பினாப் பிறகு என்ன செய்யப் போகிறாங்கள்?" என்று நிமலன் சிவாவிடம் கேட்கப் போக, "இது உமக்குத் தெரியாதே? வெளிநாட்டை போய் வந்தவை இதை உமக்குச் சொல்ல இல்லையே? ம்… நிரப்பி முடிஞ்ச உடன மாமியார் வீட்டுக்கு அனுப்புவாங்கள். அங்க காய்ஞ்ச பாணும், புளிச்ச சூப்பும் தருவாங்களாம்." என்றான் சிவா.

"உங்களுக்குச் சும்மா பகிடி. கோழிப் பொரியலும் சோறும் தருவினம் எண்டு வெளிநாட்டை போய் வந்தவை சொன்னவை. சில வேளை உங்களை மாதிரிப் பயங்கரவாதிகளை ஜெயில்ல போடுவினம் ஆக்கும்?" என்றான் நிமலன்.

"இதுதான் சொல்லுகிறது… குட்டி நாய்க்கும், குழந்தைப் பிள்ளைக்கும் செல்லம் குடுக்கக் கூடாது எண்டு. விளையாட்டு விளையாட்டா அதுகள் கடிச்சுப் போடும்.

இல்லாட்டித் தலையில ஏறி ஒண்டுக்கும் அடிச்சுப் போடும்." என்றான் சிவா.

"நாங்கள் ஒண்டும் அடிக்கவும் இல்லைக் கடிக்கவும் இல்லை. நீங்கள் செய்கிற அலுவலை ஒழுங்காச் செய்யுங்கோ." என்றான் நிமலன்.

சொரூபன், அருளன், சண்முகன், றூபன் ஆகியோர் தங்கள் விண்ணப்பங்களை தாங்களே நிரப்பினார்கள். ஒரு சில சொற்களுக்கு மாத்திரம் உதவி கேட்டார்கள். மற்றவர்களுக்குப் படிவத்தை நிரப்புவதற்கு உதவி தேவைப்பட்டது. படிவங்கள் நிரப்பும் போது,

"அண்ணை நான் இப்பிடி இந்தச் சீற்றில படுக்கலாமோ? என்னால நிமிர்ந்து இருக்க முடியாத மாதிரி அலுப்பா இருக்குது. ஒழுங்கான நித்திரை இல்லை. எப்ப எங்களைப் படுக்க விடுவினம்?" என்றான் பரமேஸ்.

"நான் என்ன இந்த எயார்ப்போட்டிலையே வேலை செய்கிறன்? நானும் உங்களோடைதானே வந்தனான். என்னைப் போய் உதுகளைக் கேட்டா நான் என்ன பதில் சொல்லுகிறது? பொறுமையா இருங்கோ... ஏதோ செய்கிறதுக்குத் தானே போம் தந்து இருக்கிறாங்கள்?"

"TS" பதில் சொல்லும் போதே ஒரு அதிகாரி வந்து "TS"சை விண்ணப்பப் படிவத்தோடு வருமாறு அழைத்தார். "TS" அருகே செல்லவும்,

"இப்ப பார் நடக்கப் போகுது." என்றான் சிவா நிமலனின் காதில் இரகசியமாக.

"சும்மா பகிடிய விடுங்க." என்றான் நிமலன். அவனுக்குச் சிவா மீது கோபம் வந்தது.

அந்த அதிகாரி "TS"சிடம் இருந்து விண்ணப்பப் படிவத்தை வாங்கிப் பார்த்தார். பின்பு அருகில் இருந்த அறைக்குள் அவரை அழைத்துச் சென்றார்.

"சரி... உள்ளுக்க வைச்சுச் சாத்தல் நடக்கப் போகுது. தலைகீழா கட்டிப்போட்டு வயரால அடிப்பாங்கள் எண்டு கேள்வி." என்றான் சிவா. நிமலன் உண்மையாக இருக்குமோ என்று முதலில் யோசித்தான். பின்பு தன்னைச் சமாளித்த வண்ணம் இவர் சும்மா வெருட்டிக் கொண்டு இருக்கிறார் என்று எண்ணினான். சிவாவிற்குப் பக்கத்தில் நில்லாது தூரத்தில் போய் நிற்போமோ என்று அவன்

மனதிற்குள் ஆலோசித்தான். இனியும் இப்பிடி வெருட்டினால் துாரப் போக வேண்டும் என்று இறுதியாக முடிவு செய்து கொண்டான்.

"TS"சிற்கு எதற்காக அந்த அறைக்குள் தன்னை அந்த அதிகாரி அழைத்துச் சென்றார் என்பது முதலில் விளங்கவில்லை. அங்கு வைக்கப்பட்டு இருந்த புகைப்படக் கருவியைப் பார்த்ததும் அது விளங்கி விட்டது. "TS"சை நேரே பார்க்குமாறு கூறிவிட்டு முதல் புகைப்படத்தை எடுத்தார். அது கறுப்பு வெள்ளைப் புகைப்படம். எடுத்ததும் புகைப்படம் புகைப்படக் கருவியில் இருந்து புறப்பட்டு வெளியே வரும். வந்தது. அவர் அதை எடுத்தப் பார்த்தார். பின்பு பௌத்திரமாய் அதைக் காய வைத்துவிட்டு "TS"சைப் பக்கவாட்டில் திரும்பி நிற்குமாறு கூறினார். குற்றம் செய்தேனா என்பது "TS"சிற்கு விளங்காவிட்டாலும் குற்றவாளியாய் படம் எடுக்கப்படுவது, இராணுவம் துவக்கோடு வந்து நின்று எட்டி உதைப்பது போன்று இருந்தது. அவமானம். எங்களிடம் அதிகாரம் இல்லை என்கின்ற மானக்கேடு. அதிகாரம் கையில் இல்லாதவர்களின் மௌனமான மனக் குமுறல். "TS" பக்கவாட்டிற் திரும்பினார். மேலும் ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டது. அடுத்த பக்கத்திற்கு இன்னும் ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டது. முதன் முறை குற்றம் சுமத்தப்பட்ட ஒருவித அவஸ்தை தொடர அந்த அதிகாரியைத் தொடர்ந்தார். அடுத்த அறையில் ஒரு மேசை இருந்தது. அதில் கறுப்பு மை ஊற்றப்பட்ட "sponge" அடங்கிய சிறிய தகரப் பெட்டி ஒன்று இருந்தது. அது பாடசாலைக்குக் கொண்டு செல்லும் வர்ணப் பெட்டியின் உயரம் இருக்கும். விரல்கள் வைத்து உருட்டக்கூடிய விஸ்தீரணத்தில் அது இருந்தது. "TS"சின் விரல்களை அவர் கடன் வாங்கினார். ஐந்து விரல்களையும் அந்த மையில் அழுத்தி அங்கு ஏற்கனவே வைக்கப்பட்டு இருந்த ரேகைப் படிவத்தில் அழுத்தினார். அதே போல மற்றைய கையையும் வாங்கி அப்படிச் செய்தார். பின்பு மையைத் துடைப்பதற்கு கடதாசி கொடுத்தார்.

அவர்கள் தன்னை ஒரு முழுமையான குற்றவாளியாகக் கௌரவமாய் நடத்துவதாய் மனதுள் மருண்டார் "TS". அடைக்கலம் கேட்டுத் தானே வந்தோம்? கொலை செய்தோமா? கொலை செய்துவிட்டு நாட்டைவிட்டு வேற்று நாட்டிற்கு ஓடி வந்தோமா? இலங்கையில் கொலை ஆகக்

கூடாது என்பதற்காக இங்கு வந்தோம். அதற்காக ஏன் எங்களைக் குற்றவாளிகள் போன்று நடத்த வேண்டும்? அகதிகளாக வருவது குற்றமா? பின்பு ஏன் ஜெனிவாவிற் கூடிச் சட்டம் இயற்றினார்கள்? மனிதத்தை மறந்துவிட்ட மனிதாபிமானமா இது? "TS" மனதிற்குள் குமைந்தார். அதிகாரி தனது வேலையில் முழுமையான அக்கறை காட்டினார்.

"TS"சிற்குச் சாத்தி இருந்தால் சத்தம் கேட்டிருக்கும். அப்படி ஒன்றும் அவரின் சத்தம் கேட்கவில்லை. அப்படி என்றால் "TS"சிற்கு உள்ளே சாத்தவில்லை. சிவா சும்மாய் என்னை வெருட்டுகிறான் என்று முதலில் எண்ணிய நிமலன், சீ இவ்வளவு ஏமாளியாக நான் இருக்கக் கூடாது என்று தன்னைத் தானே கடிந்து கொண்டான். அவன் சொல்லியதை நம்பாவிட்டாலும் உண்மையாய் இருக்குமோ என்று தளும்புவதே முட்டாள்தனம் என்று எண்ணினான்.

"TS"ன் பின்பு மாய வனத்திற்குள் போவது போல ஒவ்வொருவராய் அந்த அறைக்குள் சென்று பின்பு காணாமற் போயினர். அவர்களைத் தேடி மீதமாக இருந்தவர்களும் அந்த அறைக்குள் புகுந்தனர். புகுந்தவர்கள் மாய வனம் கடந்து வெளியே வந்தபோது எல்லோரும் ஒரு இடத்தில் தங்க வைக்கப்பட்டு இருப்பது விளங்கியது. ஆளையாள் காணும் போது பிரிந்தவர் கூடினாற் பேசவும் வேண்டுமா என்கின்ற சந்தோஷத்திற்கு அங்கே குறைவில்லை.

"இனி என்ன நடக்கும்?" என்றான் நிமலன் வாயைச் சும்மாய் வைத்திருக்க முடியாது.

"உள்ள கையைப் போட்டு உருட்டி உருட்டிப் பக்கம் பக்கமா படம் எடுத்ததைப் பார்த்தநீர் தானே? பிறகு என்ன கேள்வி? ஜெயிலுக்குப் போயிட்டு வரேக்க பெரிய ஆள் ஆகீவிடுவீர்." என்றான் சிவா.

"அப்ப உங்களை எங்க அனுப்பப் போறாங்கள்? முதியோர் இல்லத்திற்கா? ஏன் உங்கடை சக்திய வீணாக்குறியள். நான் நீங்கள் சொல்லுகிறதை எள்ளளவும் நம்பேல்லை. அதை நினைச்சுப் பயப்பிடவும் இல்லை. உங்களுக்கு ஒரு விஷயம் தெரியாது. நானும் ஆமியிட்ட பிடிபட்டு உள்ளுக்க இருந்தவன் எண்டு உங்களுக்குத் தெரியுமோ?" என்றான் நிமலன்.

"உண்மையாவாடா?" என்றான் சிவா வியப்போடு.

நிமலன் சிவாவைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரித்தான்.

ஒவ்வொருவராக அந்த அறைக்குள் வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் வந்து சேர்ந்த பின்பு எங்கோ அழைத்துச் செல்லப் போகிறார்கள் என்பது விளங்கியது.

எங்கு என்பது மட்டும் விளங்கவில்லை. வெளியே நல்ல குளிராக இருக்கும் என்பதை உள்ளேயே உணர முடிந்தது. இந்தியாவில் வாங்கிய மேலங்கி பன்னாடை போல வெப்பத்தை மட்டும் காக்க மறுத்து பாரமாய் மேலே கிடந்தது.

கட்டடங்களின் வடிவமைப்பு, அதன் உள்ளே வைக்கப்பட்டு இருந்த பொருட்கள் என்பன இலங்கையில் அல்லது இந்தியாவில் கண்டு இருக்காதவையாக இருந்தன. "TS" சிலவற்றை முன்பு வேலை செய்த இடத்தில் பார்த்து இருக்கிறார். பரமேஸ் போன்றவர்களுக்கு அது பெரும் வியப்பாக இருந்தது. பரமேஸ் ஊரில் இருக்கும் போது கடற்கரை வடலி தேடிப் போவது உண்டு. சென்னையில் கொஞ்சக் காலம் கஸ்ரப்பட்டு அதைக் கற்றுக் கொண்டான். இலங்கையில் இருந்து நேராகவே ஐரோப்பாவிற்கு வந்த சிலர் அசிங்கமாக அதைக் கற்றுக் கொண்டதாக "TS" கேள்விப்பட்டு இருக்கிறார். பெடியள் மற்றாசில் நின்று வருவதால் ஓரளவுக்கு அதைப் பற்றித் தெரிந்து இருப்பார்கள் என்பது "TS"சின் எண்ணம்.

பயணக் களையும், பசிக் களையும் சேர எல்லோரும் சோர்ந்து போனார்கள். நேரம் போகப் போக உள்ளேயே கடுமையாகக் குளிர்வது போன்று அவர்களுக்கு இருந்தது. எங்காவது போய் படுக்க வேண்டும் என்கின்ற அந்தரிப்பில் எப்போது கதவைத் திறந்து கொண்டு யாராவது ஒரு அதிகாரி வருவாரோ என்னும் ஏக்கத்தில் வைத்த கண் வாங்காமல் எல்லோரும் காத்து இருந்தார்கள்.

கதவு திறந்தது. ஒரு அதிகாரி வந்தார். அவர் "TS"சைப் பார்த்து,

"லக்கேஜ் கொண்டு வந்தீர்களா?" என்று கேட்டார்.

"அதை நாங்கள் பரிசில் மாற்றிப் போடவில்லை." என்றார் "TS".

"யாரிடமாவது ரிக்கெற் இருக்கிறதா?" என்று கேட்டுவிட்டு ஒரு விதமாகச் சிரித்தார். அவர் சிரிப்பின் அர்த்தம் "TS"சிற்கு விளங்கியது. விளங்கியும் விளங்காதது போலத்

தனது சட்டைப் பையில் கிழிக்காது வைத்து இருந்த துண்டை எடுத்துக் கொடுத்தார். அந்த அதிகாரி வியப்போடு அதை வாங்கிப் பார்த்தார். பின்பு மற்றவர்களையும் பார்த்து,

"வேறு யாரிடமாவது இருக்கிறதா?" என்று கேட்டார்.

சிவாவும், நம்பிக்கையோடு அருளனும், நிமலனும் தங்களது சட்டைப் பைக்குள் இருந்து அதை எடுத்துக் கொடுத்தார்கள். மற்றவர்கள் எங்களுக்கு நீங்கள் இதைச் சொல்லவில்லையே என்று முறையிட்டார்கள். அடிக்கட்டைகளை வாங்கிய அதிகாரி,

"நாங்கள் லக்கேஜ் எடுப்பதற்கு முயற்சிக்கிறோம். இன்னும் சிறிது நேரத்தில் வாகனம் வரும். நீங்கள் அவர்களோடு செல்லுங்கள். லக்கேஜ் கிடைத்தால் நாங்கள் கொண்டு வந்து தருவோம்." என்றார். பின்பு சிரித்த வண்ணம் அவர் சென்று விட்டார். அவர் அப்படி இடைக்கிடை சிரிப்பார். எதற்காக அப்படிச் சிரித்தார்? அதன் அர்த்தம் என்ன என்பது ஒருவருக்கும் முழுமையாக விளங்கவில்லை.

# 7 சண்வீக்கா

சிறிது நேரத்தில் வெள்ளை இரதம் ஒன்று வந்தது. அது பதினாறு இருக்கைகள் கொண்ட நவீன இரதம். அதை இந்த உலகத்தில் "Benz" என்கிறார்கள். இந்த வகை இரதத்தில் இதுவரை ஏற வேண்டும் என்று கனவு மட்டும் கண்டவர்களே இவர்கள். இன்று கனவு நனவாகும் திரு நாள். வெளியே நிற்கும் வாகனத்தைப் பார்த்துப் பார்த்து மிகவும் ஆவலோடு எல்லோரும் காத்து நின்றார்கள். வாகனத்தை நிறுத்திய சாரதி அருகில் உள்ள அறைக்குச் சென்று காவலர்களிடம் பத்திரங்களை வாங்கிக் கொண்டு சிறிது நேரத்தில் "TS"சும், இளைஞர்களும் இருக்கும் அறைக்கு வந்தார். அவர் ஐந்தடி எட்டங்குலம் இருப்பார். பொன்னிறக் கேசமும் ஆழக் கடல் நீலம் காட்டும் கண்களும், அரும்பு மீசையும் வைத்திருந்த அழகு அவரிடம். காவல் அதிகாரிகள் போன்று சரளமாக ஆங்கிலம் கதைக்கா விட்டாலும் விளங்கக் கூடிய அளவில் அவர் ஆங்கிலம் கதைத்தார்.

"நான் உங்களைச் ‘சண்வீக்கா’ என்னும் இடத்தில் இருக்கும் செஞ்சிலுவைச் சங்கத்தின் மையத்திற்கு அழைத்துச் செல்லப் போகிறேன். அங்கே மேற்கொண்டு நீங்கள் தங்குவதற்கான வசதிகள் செய்து தருவார்கள்." என்றார். பின்பு "நான் வாகனக் கதவைத் திறந்த பின்பு உங்களை அழைக்கிறேன். அப்போது நீங்கள் வந்து வாகனத்தில் ஏறலாம். வெளியே இப்போது குளிராக இருப்பதால் அதிக நேரம் உங்களால் வெளியே நிற்க முடியாது." என்று கூறிவிட்டு வெளியே சென்றார். சென்றவர் வாகனத்தின் கதவைத் திறந்துவிட்டுச் சீட்டி அடித்துச் சைகை காட்டினார். எல்லோரும் ஆவலோடு ஓடிப் போய் இரதத்தில் ஏறினார்கள்.

ஆசனங்கள் அகலமாகவும் சொகுசாகவும் இருந்தமை உடலில் இருந்த களைப்பிற்கு மிகவும் ஆறுதலாக இருந்தது. வாகனத்தின் உள்ளே வெக்கையாக இருக்கும் அளவிற்கு அதன் வெப்பம் ஊட்டிகள் முழு வேகத்தோடு வேலை செய்தன. சாரதி பயணிகளைப் பார்த்து,

"எல்லோரும் பாதுகாப்புப் பட்டியை அணிந்து கொள்ள வேண்டும்." என்றார். பாதுகாப்புப் பட்டியை பெரிய வான்களில் அணிந்து கொள்வது இளைஞர்களுக்குப்

பழக்கப்பட்ட ஒன்றல்ல என்பது "TS"சின் எண்ணம். அதற்கு அமையப் பெரிய அமளிதுமளி உடன் அந்த அலுவல் நிறைவேறியது. அதன் பின்பு திருப்தி அடைந்த சாரதி வாகனத்தை நகர்த்தத் தொடங்கினார். அப்படி வாகனம் நகரும் போது,

"நாங்கள் இப்போது சண்வீக்காவில் உள்ள செஞ்சிலுவைச் சங்கத்தின் மையத்திற்குச் செல்கிறோம். இது ஒஸ்லோவிற்கு எதிரான திசையில் மேற்குப் பக்கமாக ஒஸ்லோவிற்கும் றமன் என்னும் நகருக்குமிடையே உள்ளது. அங்கு நீங்கள் தங்குவதற்கான ஏற்பாடு செய்வார்கள். அதற்கு மேல் நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி அவர்கள் உங்களுக்கு விளக்கம் கொடுப்பார்கள்." என்று கூறிவிட்டு வாகனத்தை ஓட்டத் தொடங்கினார்.

ஒளிப் பிழம்பாகத் தகதகத்த விமான நிலையத்தை விட்டு வாகனம் வெளியே வந்து ஒரு சுரங்கத்திற்குள் இறங்கிப் பின்பு நெடுஞ்சாலையில் ஏறியது. இரவு என்றாலும் மின்னல் வேகத்தில் காற்றைக் கிழித்துக் கொண்டு போகும் வாகனங்களின் ஓசை. இலங்கையில் இப்படி வாகனங்கள் சென்று இருந்தால் "Horn" அடித்தே கொன்று இருப்பார்கள். இங்கு தப்பித் தவறிக்கூட யாரும் அதைச் செய்யாதது இளைஞர்கள் எல்லோருக்கும் பெரும் வியப்பைத் தந்தது. "Horn" அடிக்காமலும் வாகனத்தைச் செலுத்த முடியும் என்பதை அவர்கள் முதன்முதல் இங்கே நேர்முகமாகக் கண்டு கொண்டார்கள்.

ஆலம் கட்டிகளை மீன் வியாபாரிகள் யாழ்ப்பாணத்தில் இருந்து வாங்கி வருவார்கள். அல்லது ஐஸ்பழ வியாபாரிகள் அங்கிருந்து வாங்கி வருவார்கள். அது செயற்கை. இங்கு இயற்கையாகவே பார்க்கும் இடம் எல்லாம் ஆலம் கட்டிகள் பாளங்களாய் படிந்து கிடந்தன. அதை உடைத்து வாய்க்குள் போட்டு உமிய வேண்டும் என்கின்ற நமநமப்பு பரமேசுக்கு ஏற்பட்டது. இப்போது அவனுக்குத் தூக்கம் போய்விட்டது. இவ்வளவு ஆலம் சுற்றி இருக்க இதற்குள் வாழ முடியுமா என்பது அவனுக்கு விளங்கவில்லை. ஒரு சில ஊசி இலை மரங்களைவிட மற்றைய மரங்களில் இலைகளே இல்லாது விதவைப் பெண் போல மொட்டையாக, நிர்வாணமாக நின்றன. இலைகள் இல்லாது நிர்வாணமாக நின்ற மரங்கள் வாழ்வின் இன்னொரு பக்கத்தைப் பற்றிப் பாடம் புகட்டின. வாகனம் போகும் போது பல இடங்களில்

உறைந்து மினுங்கும் ஏரிகளைக் காண முடிந்தது. இந்தக் குளிருக்குள் நாங்கள் எப்படி வாழப் போகிறோம் என்பது திருநாவுக்கும் விளங்கவில்லை. இங்கு வந்தாகிற்று… இனிச் சமாளிக்க வேண்டியதே என்று அவன் எண்ணிக் கொண்டான். வாகனம் நெடுஞ்சாலையில் இறங்கி வேகம் எடுத்தது.

"நீங்கள் சைலோனில இருந்து அல்லவா வருகிறீர்கள்?" என்று ஆங்கிலத்தில் சாரதி கேட்டார்.

"ஆம் நாங்கள் அங்கே இருந்தே வருகிறோம்." என்று "TS" ஆங்கிலத்தில் பதிலளித்தார்.

"நான் சைலோனுக்கு ஒரு முறை வந்து இருக்கிறேன். நல்ல அழகான நாடு. காலிக்கும் சென்று இருந்தேன். அழகான கடற்கரை. கண்டிக்கும் சென்று இருந்தேன். அத்தோடு சிகிரியாவுக்கும் சென்றேன். வடக்கே போவது பாதுகாப்பு இல்லை என்று கூறினார்கள். எனக்கு உங்கள் நாடு மிகவும் பிடித்துக் கொண்டது. மிகவும் கனிவான மக்கள். அன்பாக வரவேற்பார்கள்." என்றார் அவர்.

அதைக் கேட்டுக் கொண்டு இருந்த "TS"சிற்கு அது உண்மை இல்லை என்று தோன்றியது. எண்பத்து மூன்றாம் ஆண்டு நடந்த கலவரம் மனதில் வந்து போயிற்று. எத்தினைக் கொடூரம்? எப்படி அவர்களால் செய்ய முடிந்தது? உயிரோடு எப்படி மனிதர்களை எரிக்க முடிந்தது? மனதின் குமைச்சல்களை அவரால் அப்படியே கொட்டிவிட முடியவில்லை. அதைக் கேட்ட பின்பும் மௌனம் காக்கவும் முடியவில்லை.

"வளமையாக அப்படித்தான் இருக்கும். அந்தத் தோற்றம் சில வேளைகளில் மாறிவிடும். அதுவும் சிறுபான்மையினரை அவர்கள் சில வேளைகளில் மனிதராக மதிப்பது இல்லை. அதை நாங்கள் பல முறை அனுபவித்து இருக்கிறோம். உதாரணமாக எண்பத்து மூன்றாம் ஆண்டு நடந்த கலவரத்தைச் சொல்லலாம். ஏற்கனவே குழம்பி இருந்த நாடு அதன் பின்பு முழுமையாக் குழம்பிவிட்டது."

"சைலோனில பல்வேறு இனங்கள் இருப்பதை அறிந்து இருக்கிறேன். பின்னாளில் சைலோனில பிரச்சனை என்றும் கேள்விப்பட்டு இருக்கிறேன். உங்கள் நாட்டில் என்ன பிரச்சனை என்று எனக்கு ஆழமான அறிவு இல்லை. இப்படி அகதிகளை ஏற்றிச் செல்லும் போது சிலர்

தங்களது கதைகளைச் சொல்லி இருக்கிறார்கள். அதைக் கேட்கும் போது பரிதாபமாய் இருக்கும். இரண்டாம் உலகமகா யுத்தத்திற்குப் பின்பு எங்கள் நாட்டில் இப்படியான வன்முறைகள் நடந்ததில்லை. அது வேறு இடங்களில் மிகவும் கொடூரமாக நடப்பதைக் கேட்கும் போது மனவருத்தமாய் இருக்கும். இருந்தும் நாங்கள் என்ன செய்ய முடியும்? ஒவ்வொரு நாடும் சுகந்திரமான நாடுகள் அல்லவா? அவர்கள் யோசித்து அல்லவா நடக்க வேண்டும். அப்படி நடந்து இருந்தால் நீங்கள் இங்கு வந்திருக்கத் தேவை இல்லை."

"உண்மை. நாங்களும் அமைதியோடும், கௌரவத்தோடும், உரிமையோடும் வாழலாம் என்று நினைத்தோம். கடைசியில் உயிரோடு வாழ்வதே முடியாது என்பதாகிப் போனது எங்கள் நிலைமை. தமிழ் இளைஞர்கள் உயிரோடு இருக்க வேண்டும் என்றால் இலங்கையை விட்டு வெளியேற வேண்டும் என்பது போல் ஆகிவிட்டது. இல்லாவிட்டால் அவர்களின் உயிருக்கு எந்த உத்தரவாதமும் கிடையாது. போகும் வரும் இடங்களில் இராணுவம் சுட்டுக் கொன்றுவிட்டுப் பயங்கரவாதிகளை கொன்றதாக பொய்யாகச் செய்தியைப் பரப்பி விடுவார்கள். பின்பு அதைப் பற்றி எந்த விசாரணையும் நடக்காது. எந்த நீதியும் தரப்பட மாட்டாது. இப்படி ஒரு காட்டுமிராண்டித்தனமான போக்கில் அந்த நாட்டு அரசு செயற்படத் தொடங்கி விட்டது. அவர்கள் அதைச் சுகந்திரத்திற்கு பின்பு இருந்தே தொடர்ந்தாலும் இப்போது மிகவும் மோசமாகி விட்டது."

"அதற்கு உங்களது எதிர்ப்புப் போராட்டமும் காரணம் இல்லையா?"

"இருக்கலாம். அதற்காக அவர்கள் எங்களைத் தொடர்ந்து கொல்லவும், அவமானப் படுத்தவும் பொறுத்துக் கொண்டு இருக்க வேண்டும் என்பது இல்லையே?"

"பிரச்சனைகளை எப்போதும் பேசித் தீர்க்க வேண்டும். அப்படிப் பேசித் தீர்க்கலாம் என்று நான் நம்புபவன். எங்கள் நாடு அதையே செய்து வருகிறது."

"நாங்களும் அப்படியே நம்பி இருந்தோம். அதனாற் பல அரசியல் சூதாட்டத்தில் பல முறை ஏமாந்தோம். கடைசியாக நாடு இப்படியாக மாறிவிட்டது. இதில்

யாருக்கும் விருப்பம் இல்லை. இதைவிட வேறு தேர்வுகள் அவர்களிடம் இல்லை."

"ம்... கவலைக்கு உரிய விஷயம். உங்களுக்கும் ஒரு நல்ல காலம் பிறக்கும். வெகு விரைவில் நீங்கள் திரும்பிப் போகும் காலம் வரும்." என்றார் அவர்.

நாங்கள் இனித் திரும்பிப் போவதா? அப்படி ஒரு சந்தர்ப்பம் வருமா? வந்தாலும் எங்களால் போக முடியுமா? என்னால் போக முடியுமா? இவ்வளவு பணம் செலவழித்து வந்தது, வெளி நாடு பார்த்துவிட்டு நாட்டிற்குத் திரும்புவதற்காகவா? அதற்காகவா அங்கு இருந்து இங்கு வந்தோம்? எங்களைப் பற்றி விளங்கிக் கொள்ளாது இவர் கதைக்கிறார். எங்களின் அடக்கத்திற்கான நிலங்களை இப்போதே, இங்கேயே பதிவு செய்து வைப்பவன் புத்திசாலியாக இருக்க முடியும். இங்கு வரும் ஒவ்வொரு தமிழனும் இனி இந்நாட்டவனே. இந்நாடு தலைகீழாக நின்றாலும் நாட்டில் பிரச்சனை தீரப் போவதும் இல்லை. நாங்கள் திரும்பிப் போகப் போவதும் இல்லை. திரும்பிப் போய் அங்கே என்ன செய்ய முடியும் என்பதாகச் சிவா அந்தச் சம்பாசனையில் தொலைந்தான்.

"அது சரி, ரோட்டில் மாத்திரம் ஐஸ் இல்லாமல் இருக்கிறதே? அது எப்படிச் சாத்தியம் ஆகிறது?" என்று "TS" திடீரென்று தனது சந்தேகத்தை அவரிடம் கேட்டார்.

"ஓ அதுவா? நாங்கள் பாதைக்கு உப்புப் போடுவோம். அது ஐஸ்சைக் கரைத்து விடும்."

"ஓ அப்படியா? எங்கள் ஊரில் உமி அல்லது மரத்தூள் போட்டு ஐஸ் கரையாது பாதுகாப்பார்கள்." என்றார் "TS". இருவரும் சிரித்தார்கள்.

வாகனம் நெடுஞ்சாலையை விட்டு நீங்கிச் சிறு தெரு ஒன்றில் ஓடியது. எங்கும் பனி வெள்ளைக் கம்பளம் விரித்ததாகப் படிந்து கிடந்தது. அவை பகலில் கரைந்து நீராக ஓடுவதும் இரவில் மீண்டும் உறைந்து பளபளப்பதுமான காட்சி சில இடங்களில். சில தெருக் கரைகளில் பனி உருகி வழிந்து பின்பு குளிரில் இறுகிக் கூரிய ஆயுதங்களாகத் தொங்கின. அவை உடைந்து விழுந்து தலையில் பட்டால் அவர் சுவர்க்கம் காண்பாராக அது பயமுறுத்தியது.

வாகனம் வேகம் குறைந்து ஒரு பாரிய கட்டடத்தின் முன்பு நின்றது. சாரதி வாகனத்தை நிறுத்திவிட்டு வந்து கதவைத் திறந்தார். பெடியள் அவசரப்பட்டு தங்கள் பட்டிகளை அகற்றினர். இந்தப் பட்டியை அகற்றுவதில் மனிதருக்கு எத்தனை அவசரம் என்று அருளனுக்கு எண்ணத் தோன்றியது. தனது பெட்டி வருமா இல்லையா என்கின்ற ஏக்கம் தொடர்ந்தும் அவனிடம் சாகாது உத்தரித்தது.

வாகனத்திற்கும் கட்டடத்திற்கும் இடையேயான பகுதியில் பனி கண்ணாடியாகப் படிந்து கிடந்தது. வழுக்காமல் இருப்பதற்கு அதற்கு மண் கொட்டி இருந்தார்கள். உப்பு மாத்திரம் இல்லை மண்ணும் சிறு குறுணிக் கற்களும் வழுக்காது பாதுகாக்கும் என்பது அப்போது இளைஞர்களுக்கு விளங்கியது.

உள்ளே இருந்து ஒரு பெண் அதிகாரி மிடுக்காக வெளியே வந்தார். அவர் கிட்டத்தட்ட நாற்பத்து ஐந்து வயது மதிக்கத்தக்கவர். வெள்ளையும் கருப்புமாக தலைமுடி முதுமையின் விலாசம் எழுதிய கோலம். மூக்குக் கண்ணாடி பார்வைக்குப் பலமாக அழகிற்கு மேலும் அழகாக... அவரது கண்கள் மென்மையான பச்சை நிறமாகக் கூர்மையான ஒளியுடன் துருவியது. ஊதா நிறத்தில் அவர் உடை. வதனத்தில் அன்று மலர்ந்த ரோஜா போன்ற மலர்ச்சியான புன்னகை. அதில் தாய்மையின் வாஞ்சை. அவரிடத்தில் பஞ்சத்தில் அடிபட்டு வந்து இருப்பவர்களைப் பராமரிக்கும் பரபரப்பு.

அப்படியாக வந்த அந்தப் பெண் அதிகாரியோடு சாரதி அவர்கள் மொழியில் ஏதோ கதைத்தார். எல்லோரும் அவர்கள் கதைப்பது விளங்காது அவர்கள் வாயைப் பார்த்தார்கள். அவர்கள் வாயில் இருந்து ஸ் ஸ் என்கின்ற சத்தம் வந்தாலும் அது ஏதோ காட்டுவாசிகள் கதைப்பது போல இருந்தது. இப்படியான ஒலி அமைப்போடு அவர்கள் ஒரு மொழியை இதற்கு முன்பு கேட்டது இல்லை. கேட்காத மொழியைக் கேட்கின்ற போது கேட்பவரின் அறிவின்மை அதைக் கேலிக்கு உரியதாகப் பார்க்க வைக்கிறது. ஒரு மொழி சிறந்தது என்று இல்லை. ஒவ்வொரு மொழியும் தனித்துவமானவை. அந்த மொழியில் நன்கு பரிச்சயம் வரும் போது அது விளங்குகிறது. விளங்காது இருந்தால் அது பிரமிப்பு, பல வேளை கேலி உண்டாகிறது. விளங்காத மொழியை கதைப்பவரைப் பார்த்து கேலி செய்வது கடைநிலை. இலங்கையில் சிங்களம் ஒரு தினுசாய் இருந்தாலும் அதில் இந்த

அன்னியம் தெரிவதில்லை. ஸ் ஸ் என்கின்ற சத்தம் ஆங்கிலத்தை நினைவு படுத்தினாலும் ஆங்கிலத்தில் விளங்கும் ஒரு சில சொற்கள்கூட இதில் விளங்குவது இல்லை. முற்றும் அறிந்திராத அன்னிய மொழி அவர்களைத் திகைக்க வைத்தது. இந்த நாட்டில் வாழ்வது என்றால் இந்த மொழியைக் கற்றாக வேண்டும். இப்படி காட்டுவாசிகளின் மொழி போல இருப்பதைக் கற்க முடியுமா என்று பரமேசுக்குப் விளங்கவில்லை. அவன் அந்த மொழியைக் கேலி செய்யாவிட்டாலும் அவன் கேள்வி ஞானத்தின் வறட்சி அந்த மொழியைக் காட்டுவாசிகளின் மொழி போல இருப்பதாய் எண்ணத் வைத்தது.

"ஆங்கிலத்தைக் கற்பதே எங்களுக்குப் பெரும் பாடாகப் போய் விட்டது. இது ஆங்கிலத்தைப் போல் சற்றுக்கூட விளங்கும் மொழியாக இல்லை. எப்படி இதைக் கற்பது? அதுவரை என்ன செய்வது? கையை, உடம்பை அசைத்து உடல் மொழி பேசலாம். அல்லது ஊமைப் பாசை பேசிப் பிழைத்துக் கொள்ளலாம். ஊமைப் பாசை என்பது கூட ஒரு பாசை அல்லவா? அதைக் கற்காமல் எப்படிப் பிரயோகிப்பது?" என்று பரமேஸ் மேலும் எண்ணிக் குழம்பினான்.

அவர்கள் ஏதோ கதைத்தார்கள். பின்பு சாரதி கொடுத்த பத்திரங்களை வாங்கிய அந்தப் பெண் அதிகாரி "நீங்கள் எல்லோரும் வாகனத்தைவிட்டு இறங்கி உள்ளே வாருங்கள். வரும் போது கவனமாக வாருங்கள். பாதையில் வழுக்கல் இருக்கிறது." என்று ஆங்கிலத்தில் புன்னகை புரிந்த வண்ணம் கூறினார்.

"TS"சிற்கு வியப்பாக இருந்தது. விமான நிலையத்தில் ஏற்பட்ட எண்ணம் இப்போது மாறிப் போயிற்று. மத்தியகிழக்கில் அடிமைகள் போல ஆசியரை நடத்தியதான அனுபவம் அவருக்கு. இங்கு அகதிகளுக்குக்கூட இவ்வளவு மரியாதை தந்து, மனிதராக நடத்தும் இந்த மனிதர்கள் அவர் மனதில் தெய்வப் பிறவிகளாக, பெரும் மதிப்பைப் பெற்றனர். அவர் இந்த மரியாதையை எதிர்பார்த்து இருக்கவில்லை. இளைஞர்களால் இவ்வளவு பண்பாக நடத்தப் படுவதை ஒரு கணம் விளங்கிக் கொள்ள முடியவில்லை. எதற்கும் பேச்சும் அடியும் வாங்குவதே பழகிப் போன அவர்களுக்குப் பண்பான வார்த்தைகளால் மட்டுமே மற்றைய மனிதர்களோடு உறவாடுவது என்பது

ஒருவிதத்தில் அன்னியமாகவே தோன்றியது. அவர்கள் ஆளையாள் பார்த்துவிட்டு "TS"சைப் பார்த்தார்கள். அவர்களின் தயக்கத்தை பார்த்த அந்த அதிகாரி,

"என்ன யோசிக்கிறீர்கள்? பயப்படாமல் உள்ளே வாருங்கள். வாகனத்தில் இப்படியே இருந்தால் உங்களுக்குக் குளிரப் போகிறது." என்று கரிசனையோடு கூறினார்.

இராணுவத்திடம் வாங்கும் அடி உடன் கொட்டியா, பறத்தமிழு, என்கின்ற வசை மொழியும் கேட்டுப் பழகிப் போனவர்களுக்கு, அந்தப் பெண்மணி கூறுவது சப்த சுரங்களையும் சரியாகப் பூட்டிய சங்கீத அலையாகச் செவிகளைத் தீண்டியது.

"TS" வாகனத்தை விட்டு இறங்கிச் சிரித்த வண்ணம் உள்ளே சென்றார். அப்படிச் செல்லும் போது இளைஞர்களையும் கெதியாக வாருங்கள் என்பது போலப் பார்த்துவிட்டுச் சென்றார். "TS" இறங்கிப் போகவும் மற்றைய இளைஞர்களும் இறங்கி உள்ளே சென்றார்கள். அவர்களுக்கு அந்த அதிகாரி தற்காலிக செஞ்சிலுவைச் சங்கத்தின் இருப்பிடத்தைச் சுற்றிக் காட்டினார். உள்ளே அழகாகவும் வெப்பமாகவும் இருந்ததோடு மிகவும் துப்பரவாக இருந்தது. பரீஸ் விமான நிலையத்தைவிட உள்ளே துப்பரவாக இருந்ததாக நிமலன் நினைத்துக் கொண்டான்.

முதலில் அலுவலகப் பகுதியைச் சுற்றிக் காட்டினார். ஐந்து அலுவலகங்கள் இருந்தன. அவற்றில் கிழக்குப் பக்கமாகத் தொங்கலில் இருந்த அலுவலகத்தில் விசாரணை நடக்கும் என்று கூறினார். விசாரணை என்றவுடன் ஊரிலே காவல் அல்லது இராணுவம் போல "Wire"ஆல் அடித்து விசாரிப்பார்களோ என்கின்ற பயம் முதலில் எல்லோருக்கும் தன்னிச்சையாகவே வந்தது. அதை அந்த அதிகாரியிடம் கேட்பதற்குத் தயக்கமாக இருந்தது. அவர்கள் எண்ணத்தை அறிந்தவர் போல அந்த அதிகாரி "விசாரணை என்றவுடன் ஏன் யோசிக்கிறீர்கள்?" என்று கேட்டார். எல்லோரிடமும் ஒருவித தயக்கம் சொற்களுக்குத் தடை போட்டது. எப்படி இந்தப் பெண் அதிகாரியால் மனதைப் படிக்க முடிந்தது என்கின்ற பிரமிப்பு தூக்கிவாரிப் போட்டது. அவர் கண்ணைப் பார்க்கவே அவர்களுக்குத் தயக்கமாக இருந்தது. மற்றவர்கள் தயங்கினாலும் சிவா தயங்கவில்லை.

அவனுக்கு உண்மை பேசுவதில் தயக்கம் இருப்பது இல்லை. எதையும் யாரிடமும் நேரடியாகக் கேட்க வேண்டும் என்கின்ற அவன் துடிப்பு அடங்கி விடுவதில்லை. அவன் தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் அந்த அதிகாரியுடன் கதைக்கத் தொடங்கினான்.

"இல்லை… இலங்கையில் விசாரணை என்றால் அடிப்பார்கள். அது இங்கு அப்பிடி இல்லைத் தானே?"

"ஓ இல்லை... இல்லை... இங்கு யாரும் யாரையும் அடிக்க முடியாது. உடல் ரீதியாக அல்லது மனரீதியாகத் துன்புறுத்துவதற்கு எங்கள் நாட்டில் சட்டம் இடம் கொடுக்காது. அப்படிச் செய்தால் அது சட்டத்தை மீறுவதாக இருக்கும். நீங்கள் இங்கு எதற்கும் பயப்படத் தேவை இல்லை. தயிரியமாக உண்மையைச் சொல்லலாம். உண்மை சொல்லுவதற்கும் அதன் மூலம் நம்பிக்கையாய் இருப்பதற்கும் தயங்கத் தேவை இல்லை. அப்படியானவர்களையே பலரும் இங்கு விரும்புவார்கள்." என்றார் அந்த அதிகாரி.

"மிகவும் சந்தோஷம். நாங்கள் இனிப் பயம் இல்லாமல் வாழ முடியும்." என்றான் சிவா.

"நிச்சயமாக. இங்கே நீங்கள் யாருக்கும் எதற்கும் பயப்படத் தேவை இல்லை. சுதந்திரமாக வாழ, சிந்திக்க அனைத்து மனிதருக்கும் சம உரிமை உண்டு." என்றார் அந்த அதிகாரி.

பின்பு அவர்களைச் சாப்பிடும் அறைக்குக் கூட்டிச் சென்றார். அங்கே பல கதிரைகள், மேசைகள், உணவுகள் வைப்பதற்கான பகுதி, பலவகைத் தட்டுக்கள், பலவகைக் குவளைகள், சாப்பிடும் கத்திகள், கரண்டிகள் என்பன ஈறாக அது ஒரு உணவு விடுதி போல் இருந்தது.

கோப்பி மணம் அலை அலையாக வந்தது. இப்பொழுதே அதைக் குடிக்க வேண்டும் என்கின்ற ஆசையை அந்த மணம் வன்மையாகத் தூண்டியது. ஒரு பக்கத்தில் இருந்த சிறிய இயந்திரத்தில் கோப்பி வடிந்தது. அது வடிந்து கறுத்தப் பொட்டிற்கு காய்ச்சிய பாகு போல் ஒரு கண்ணாடிக் குவளையில் நிறைந்தது. தேவையான போது அதை எடுத்து ஊற்றிக் குடிக்கலாம். நோர்வே மக்கள் இந்தக் கோப்பியை அதிகம் விரும்பிக் குடிப்பார்களாம். அது வித்தியாசமான முறையில் செய்யப்படுகிறது. ஊரில் கோப்பி அரைப்பது சுவாரசியமான விசயம். அனேகமாக

அதை வீட்டில் உரலில் இடிப்பார்கள். கோப்பியை முறுக, கருக மல்லியும் வாசனைப் பொருட்களும் சேர்த்து வறுத்து கமகமக்க இடித்து அரித்து எடுப்பார்கள். கோப்பியின் அந்த வாசத்திற்கு ஒரு பிடி சுடச் சுட அள்ளிச் சாப்பிட வேண்டும் என்கின்ற ஆசை உண்டாகும். கோப்பித் தூளை அப்படிச் சாப்பிட்டுவிட முடியாது. அதில் ஒருவித கயர்வும் வறட்சியும் இருக்கும்.

இங்கு வீட்டில் கோப்பி அரைப்பது மிகவும் குறைவு. அரைத்த கோப்பியைப் பாரிய அளவில் தயாரிப்பதற்காக நோர்வேயில் பல தொழிற்சாலைகள் உண்டு. உலகத்தின் பல பாகங்களிலும் இருந்து தெரிந்து வாங்கி வந்த கோப்பியை இயந்திரத்தில் வறுத்து, மல்லி போன்ற வேற்றுப் பொருட்கள் அதிகம் கலக்காமல், கோப்பியைக் கோது போலப் பொடி செய்து, சிறு துகள்களாக அரைத்து, அதைப் பொதிகளில் அடைத்துக் கடைகளில் விற்பார்கள். அதை இவர்கள் வாங்கி வந்து வடிக்கும் காகிதத்தில் கொட்டி இயந்திரத்தில் நீரை ஊற்றிவிட்டால் சாராயம் வடிவது போல் அது கண்ணாடிக் குவளையில் வடியும். பின்பு அதை எடுத்து அருந்த வேண்டியதே. இவர்கள் அந்தக் கோப்பிக்கு பொதுவாகச் சீனி, பால் கலக்காமலே குடிப்பார்கள். சிலர் மட்டும் தடிப்பான பால் சேர்த்துக் கொள்வார்கள். மிகவும் அரிதாகவே சீனி சேர்த்துக் கோப்பி அருந்துவார்கள். ஒரு நாளைக்குப் பல முறை கோப்பி அருந்தாது இவர்களால் இருக்க முடியாது. கோப்பி மணத்தில் "TS" மயங்கி நின்ற போதும் அதிகாரி தொடர்ந்தார்.

"இங்கு நீங்கள் மாலைச் சாப்பாடு சாப்பிட வேண்டும். மாலைச் சாப்பாடு ஏழுமணி போல் கொடுக்கப்படும்." என்றார் அந்த அதிகாரி. அங்கே ஒரு கண்ணாடிப் பெட்டி இருந்தது. அதில் சிவப்பு நிறத் திரவம் இயந்திரத்தால் கலக்கப்பட்ட வண்ணம் இருந்தது. அதை நிமலன் ஒரு போதும் முன்பு பார்த்தது கிடையாது. அவனுக்கு அது என்ன என்று அறிய வேண்டும் என்கின்ற ஆவலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவன் தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் அந்த அதிகாரியைப் பார்த்து,

"என்ன இது?" என்று கேட்டான்.

"ஓ இதுவா? இது பழரசம்." என்று கூறிவிட்டுக் கடதாசியால் செய்யப்பட்ட குவளையை எடுத்து அதில் அந்தப் பழரசத்தை நிரப்பினார். அதை நிமலனிடம்

கொடுத்து "குடித்துப் பாருங்கள்." என்றார். நிமலன் வாங்கிக் குடித்துவிட்டு "நல்லது, நல்லது." என்றான். அந்த அதிகாரி மற்றவர்களையும் பார்த்து "நீங்களும் தாகத்தோடு இருப்பீர்கள். எடுத்துக் குடியுங்கள். நான் பத்து நிமிடங்கள் கழித்து வந்து நீங்கள் தங்கும் அறைகளை உங்களுக்குக் காட்டுகிறேன்." என்றார். பின்பு அவர் தனது அலுவலகத்தை நோக்கிச் சென்றுவிட்டார். தாகத்தோடும், பசியோடும் இருந்தவர்களுக்கு அந்தப் பழரசம் அமிர்தம் ஆகிற்று. போகும் உயிரைப் பலருக்கு மீட்டுக் கொண்டு வந்த தென்பை அது தருவது ஆகிற்று. அவர்கள் பல குவளை பழரசம் குடித்தார்கள். அப்போதே அந்த விடுதியில் தாங்கள் மட்டும் அல்ல மத்திய கிழக்கு நாட்டைச் சார்ந்தவர்கள், லத்தின் அமெரிக்காவைச் சார்ந்தவர்கள், ஆப்பிரிக்காவைச் சார்ந்தவர்கள் ஆகிய பல நாட்டினரும் தங்கி இருப்பதைப் பார்க்கக் கூடியதாக இருந்தது. அதில் இரு ஆப்பிரிக்க நாட்டவர் வந்து,

"நீங்கள் இலங்கையில் இருந்து வருகிறீர்களா?" என்று ஆங்கிலத்தில் "TS"சைப் பார்த்துக் கேட்டார்கள். அதற்கு "நீங்கள் எந்த நாட்டைச் சார்ந்தவர்கள்?" என்று "TS" திருப்பிக் கேட்டார். அதற்கு அவர்கள் தாங்கள் சோமாலியா நாட்டைச் சார்ந்தவர் என்று கூறிவிட்டு தேநீர் தயார் செய்து எடுத்துக் கொண்டு செல்லும் போது,

"நீங்களும் தாராளமாகத் தேநீர் தயாரித்துப் பருகலாம்." என்றார்கள். "TS"சிற்குத் தேநீர் ஒன்று தயாரித்துப் பருகினால் நன்றாய் இருக்கும் என்று தோன்றியது. அந்த அதிகாரி வந்துவிடுவார் என்கின்ற எண்ணத்தில் அவர் அதைப் பின்போட்டார்.

சொல்லி வைத்தது போல அந்த அதிகாரி வந்தார். வந்தவர் அவர்களைப் பார்த்து,

"நீங்கள் படுக்கும் அறையை இப்போது காட்டுகிறேன். ஒரு அறையில் இரண்டு பேர் தங்க வேண்டும். சாப்பிட்ட பின்பு உங்களைப் படமெடுக்க வேண்டும். அத்தோடு உங்களுக்கு ஒரு அடையாள அட்டை தயாரித்துத் தரவேண்டும்." என்றார் அந்த அதிகாரி.

"உங்களுக்கு அலுப்பாக இருக்கிறதா?" என்று "TS"சைப் பார்த்து அவர் கேட்டார்.

"அலுப்பாகத் இருக்கிறது. விமானத்தில் ஒழுங்காக நித்திரை கொள்ளவில்லை." என்றார்.

"எனக்கு உங்கள் நிலமை விளங்குகிறது. சாப்பிட்ட பின்பு நான் உங்களை விரைவாகப் படம் எடுத்து உங்களுக்கான அடையாள அட்டையைத் தயார் செய்து தந்து விடுவேன். அதன் பின்பு நீங்கள் தாராளமாய் நித்திரை கொள்ளப் போகலாம்." என்றார். பின்பு "எனக்குப் பின்னே வாருங்கள்." என்று கூறிவிட்டு நடக்கத் தொடங்கினார். அவர் கையில் ஒரு பட்டியல் இருந்தது. 107 என்கின்ற அறைக்கு முன்பு நின்றார். அதுதான் முதலாவது அறை. அதை அவர் "TS"சிற்குக் கொடுக்க உத்தேசித்து விட்டார். தமிழர்களோடு தொடர்பு கொள்வதற்கு "TS"சைப் பாவிப்பது அவரது உத்தேசம். அறையைத் திறந்த பின்பு "இந்த அறையில் நீங்களும், நிமலனும் தங்கலாம்." என்று "TS"சைப் பார்த்துக் கூறினார்.

"சூ... அப்பா... சிவா அண்ணையிட்டை இருந்து எனக்கு விடுதலை." என்றான் நிமலன் நிம்மதிப் பெருமூச்சோடு. அவன் அப்படிக் கூறியது பலருக்கும் சிரிப்பை பீரிட வைத்தது. அதைப் பார்த்த அந்த அதிகாரி "எதற்குச் சிரிக்கிறீர்கள்?" என்று "TS"சைப் பார்த்துக் கேட்டார். "இல்லை அவருக்கு முதலாவது அறை கிடைத்ததில் சந்தோஷம். அதுதான்." என்றார். அதை அவர் நம்பியதாகத் தெரியவில்லை.

கதவைத் திறந்தவுடன் ஒரு கரையில் குளியல் அறை இருந்தது. அது நவீன விடுதிகளில் இருப்பது போல பளிச்சிட்டது. சுவர் தரை எங்கும் மாபிள் பிசிறு அற்றுச் சுத்தமாகப் பதிக்கப்பட்ட அழகு. சுவரில் இருந்த மாபிளில் கடற்கரையும் சில தென்னைகளும் தெரிந்தன. அந்தக் காட்சியைப் பார்த்த வண்ணம் குளிப்பது ரம்மியமாக இருக்கும் என்று "TS" எண்ணினார்.

இவ்வளவு துப்பரவாக மினுமினுக்கும் குளியல் அறையை நிமலன் இதுவரை பார்த்தது இல்லை. தரையில் ஓடிப் போய் விழுந்து படுக்க வேண்டும் என்கின்ற ஆசை அவனுக்கு வந்தது. அப்படிச் செய்தால் கோமாளித்தனமாய் இருக்கும் என்பதை உணர்ந்து தனது அந்த ஆசையை அடக்கம் செய்தான். வெள்ளை வெளிரென்று முகம் கழுவும் 'சிங்' மினுங்கியது. நின்று

குளிப்பதற்கு அரைப் பிறை வடிவில் கூடாரம் அமைக்கப்பட்டு இருந்தது. அதற்குக் கண்ணாடிக் கதவுகள் இருந்தன. திறந்த வெளிக் கிணற்றிற்கும் இதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது என்பது நிமலனுக்கு விளங்கியது. இப்போதே அதில் போய் நின்று குளிக்க வேண்டும் என்கின்ற ஆவல் அவனிடம் துள்ளி எழுந்தது. அவன் தனது ஆவலை அடக்கப் போராடினான். குளிப்பதற்கும், கழிப்பதற்கும் அங்கிருந்த வசதி அவனுக்குப் பிரமிப்பை ஊட்டின. குளிக்கு மேல் இருந்ததும், பின்பு முன்னேறித் தண்ணி வாளி தூக்கிக் கொண்டு அலைந்ததும் ஞாபகம் வந்து போயின. இனி அப்படி ஒரு நிலை தன் வாழ்வில் வரக் கூடாது என்று அவன் பிரார்த்தித்தான்.

மனித உபாதைகளை அறைக்கு உள்ளேயே தீர்த்துக் கொள்ளும் வசதி "TS"சிற்குப் பிடித்துக் கொண்டது. வெள்ளை நிறத்தில் பெரிய இரண்டு துவாய்கள் அங்கே தொங்கின. அத்தோடு சவர்க்காரமும், சம்பூவும் அங்கு வைக்கப்பட்டு இருந்தன. ஒரு முழுக்குப் போட்டு விட்டு நித்திரை கொள்ள வேண்டும் என்று "TS" முடிவு செய்தார்.

அதிகாரி குளியல் அறைக்குள் சென்று ஒரு முன்னோட்டம் காட்டுவது போல எந்தப் பக்கம் திருப்பினால் குளிர் நீர் வரும், எந்தப் பக்கம் திருப்பினால் வெப்பமாக நீர் வரும், எந்தளவில் வைத்துக் கொண்டால் மென்சூடாக இருக்கும் என்பதையும் காட்டி, எப்படிக் குளிப்பதற்கு நீரைத் திறக்க வேண்டும் என்றும் விவரித்தார். அவர் நிறையவே அனுபவப்பட்டு இருப்பார் என்று "TS" எண்ணினார்.

உள்ளே இரு கரைக்கும் இரண்டு கட்டில்கள் இருந்தன. அது சுத்தமான வெள்ளைத் துணியால் போர்க்கப்பட்டு அதன் மேல் சுத்தமான வெள்ளைத் தடித்த போர்வை அழகாக மடித்து வைக்கப்பட்டு இருந்தது. இந்தத் தடிப்பான போர்வை இல்லாவிட்டால் மனிதன் விறைத்துச் செத்து விடுவான் என்பதாக நிமலன் நினைத்தான். அத்தோடு பெரிய தலைகாணி ஒன்று இருந்தது. அதைப் பார்த்ததும் ஏறி இப்போதே படுத்துவிட வேண்டும் என்கின்ற தவுனம் நிமலனுக்கு ஏற்பட்டது.

இரு பக்கமும் இரண்டு அலுமாரிகள் இருந்தன. உடுப்புக்களை வைப்பதற்கு அவை தாராளமாய் போதும். தற்போது உடுப்பே இல்லையே என்கின்ற குறையில் இருந்தவர்களுக்கு அந்த இடம் வெற்றிடமாக இருக்கப்

போகின்ற கவலை. கண்ணாடிக் காலதருக்கு வெளிச்சம் தடுக்கும் துண்டு துண்டாக மென் அலுமேனியத்தால் செய்யப்பட்ட மறைப்பு போடப்பட்டு இருந்தது. இரு கரைக்கும் இரண்டு படங்கள் சுவரில் தொங்கின.

குப்பை போடுவதற்கு ஒரு வாளி, குப்பை போடும் பை போட்டு மூலையில் வைக்கப்பட்டு இருந்தது. இருப்பதற்கு இரண்டு கதிரைகள் இருந்தன. கட்டில்களுக்கு நடுவே ஒரு அழகிய சிறிய மேசை இருந்தது. அறையை மங்கலாக வைத்துக் கொள்ள ஒரு ஆழி, அதை அதிக வெளிச்சத்தோடு வைத்துக் கொள்ள இன்னொரு ஆழி இருந்தது.

"எப்படி இருக்கிறது?" என்று "TS"சைப் பார்த்து அந்த அதிகாரி கேட்டார்.

"மிகவும் நன்றாக இருக்கிறது. இப்போதே படுத்துக் கொள்ள வேண்டும் என்கின்ற அலுப்பு."

"எனக்குப் விளங்குகிறது. நீங்கள் சாப்பிட வேண்டும். புகைப்படம் எடுக்க வேண்டும். அதற்குத் தயவு செய்து ஒத்துழைப்புத் தாருங்கள்." என்றார் அந்த அதிகாரி.

"நிச்சயமாக." என்றார் "TS".

"சரி மற்றவர்கள் என்னுடன் வாருங்கள்." என்று கூறிய அதிகாரி மற்றைய அறைகளை நோக்கி நடக்கத் தொடங்கினார். மற்றவர்கள் அவர் பின்னால் செல்ல "TS" வலப் பக்கக் கட்டிலில் இருக்க, நிமலன் இடப் பக்கக் கட்டிலில் இருந்தான். அவன் ஒரு முறை துள்ளித் துள்ளி இருந்து பார்த்து விட்டு,

"நல்ல குசனாக இருக்குது. இல்லையே அண்ணை?" என்றான்.

"கட்டில் மட்டுமில்லை, வாழ்க்கையும் இனி அப்பிடித்தான் இருக்கும். அதை நல்ல வழியிலும் பாவிக்கலாம். தான்தோன்றித்தனமாய் கெட்டும் போகலாம். உமக்குச் சின்ன வயசு… படிச்சுக்கிடிச்சு முன்னுக்கு வந்தி எண்டா எதிர் காலத்தில நல்ல வாழ்க்கை இங்க இருக்குது." என்றார் "TS". அவர் மனதில் ஒருவித ஏக்கம் படர்ந்தது. தனது ஏக்கத்தை இந்தச் சின்னப் பொடியனிடம் கொட்டுவதா என்கின்ற கௌரவம் அவர் ஏக்கத்தை மீண்டும் மனதில் ஆழமாகப் புதைத்தது. அவர் அதை

காட்டிக் கொள்ளாது இருக்கப் பார்த்தாலும் அவரையும் மீறி ஒரு பெருமூச்சு விடை பெற்றுப் போனது. "TS" சொன்னது முதலில் நிமலனுக்கு விளங்கவில்லை. அவன் அந்த அறையைப் பார்த்து தனக்குச் சொந்தமாக தரப்பட்டது போன்ற கற்பனையில் மிதந்தான். பின்பு "TS" சொன்னது ஞாபகம் வர,

"எனக்கும் படிக்க வேணும் எண்டு ஒரு ஆசை இருக்குது. அதுக்கு முதல் வந்த கடனை அடைக்க வேணும். கடனை அடைச்சுப் போட்டு பாட்ரைம் வேலையும் செய்து கொண்டு படிக்க வேணும் எண்டு ஆசை." என்றான்.

"உழைக்கிறது நல்லது . சில வேளை உழைச்சுக் காசைக் கண்டால் பிறகு படிக்க மனசு வராது. நீர் எதுக்கும் யோசிச்சு செய்யும்."

"நீங்கள் சொல்லுகிறதும் உண்மை. அம்மா தன்ரை தாலிக் கொடியை வித்து, வீட்டை அடைவு வைச்சு, என்ன இங்க அனுப்பி இருக்கிறா. அதை நான் மீட்க வேணும். முதல்ல எங்க வேலை கிடைச்சாலும் செய்ய வேணும் எண்டு நினைக்கிறன். கடன் இல்லாமல் இருக்கோணும். அனுப்பி வைச்சவையப் பார்க்க வேணும். எனக்குச் சகோதரங்களும் இருக்கினம். அதைவிட இங்க படிக்கவும் வேணும்."

"ம்... விளங்குது." என்று மீண்டும் ஒரு பெருமூச்சு விட்டார் "TS". சுமைகள் மனித சவாரிக்கு எப்போதும் தயாராக இருக்கின்றன. சொறிவதில் ஒரு வித இன்பமான வேதனை உண்டு. சுமப்பதிலும் பலருக்குச் சுகமும் உண்டு, வேதனையும் உண்டு. அவன் சுமையும் தன் தலையில் ஏறியதான அவஸ்தை அவருக்கு. பொருளாதாரத்தைப் புறக்கணித்த ஒரு வாழ்க்கை இவ்வுலகில் இல்லை. மனிதனின் ஒவ்வொரு அசைவையும் அதுவே கட்டுப்படுத்துகிறது. தமிழர்களுக்குக் கல்வியும் பொருளாதாரமும் முக்கியம் என்றாலும் கல்வியை மிஞ்சிப் பொருளாதாரம் சில வேளை இந்தக் காலங்களில் அதிமுக்கியம் பெற்று விடுகிறது. அப்படியே நிமலனின் நிலைமையும் இருக்கிறது. அவனைப் பிழை சொல்ல முடியாது. அனுப்பியவர்கள் எதிர்பார்ப்போடு இருப்பார்கள். அவன் மனச்சாட்சி அதை ஞாபகப்படுத்துகிறது. உழைப்பு ஒன்றே அவன் இப்போதைய தெரிவாகும்.

"என்ன அண்ணை யோசிக்கிறியள்? நானே கவலைப்பட இல்லை. நீங்கள் ஏன் கவலைப் படுகிறியள்? படைச்சவன் படியளப்பான் எண்டுவினம். அப்பிடி எங்கடை வாழ்க்கையும் எப்பிடியோ ஓடும். பசிக்குது அண்ணை. என்ன சாப்பாடு தருவாங்கள்? பசிக்கிற பசிக்கு ஒரு பிடி பிடிக்கோணும். பிறகு நல்லா நித்திரை அடிக்கோணும். இப்பிடித் துப்பரவான படுக்கையில நான் படுத்ததே இல்லை. மூட்டைப்பூச்சி கடிக்கக் கடிக்க கட்டில்ல பிரண்டு பிரண்டு படுக்கிறது என்ரை வாழ்க்கை. இண்டைக்கு அரசகுமாரனாக உந்த மெத்தையில நல்ல பஞ்சுப் போர்வையால போர்த்திக் கொண்டு… அவளைவைய… சீ உங்களோடை அதெல்லாம் கதைக்கிறது அழகில்லை. நாங்கள் முகத்தைக் கழுவிக் கொண்டு சாப்பிடப் போவமே அண்ணை? சிவா அண்ணையும் சாப்பிட வருவார். அவருக்கு இப்ப என்னைக் காணாமல் தவிப்பா இருக்கும். நான் முதல்ல முகம் கழுவப் போகட்டோ அல்லது நீங்கள் முதல்ல முகம் கழுவப் போறியளோ?"

"நீர் போயிட்டு வாரும்." என்று நிமலனுக்கு வழிவிட்ட "TS" தனது கைப்பையை எடுத்து ஏதோ கிண்டத் தொடங்கினார்.

"என்ன அண்ணை அதுக்க வயிரமா வைச்சு இருக்கிறியள்? இப்பிடிக் கமக்கட்டுக்க கொண்டு திரிகிறியள்? எனக்குச் சொல்லக் கூடாதே?"

"ம்… வயிரம். நேரம் வரேக்க சொல்லுகிறன்."

"வயிரமோ?"

"அட... போடா. போய் முதல்ல முகத்தைக் கழுவு."

"சரி... உங்களைத் தொந்தரவு பண்ணக் கூடாது எண்டுகிறியள்."

"தொந்தரவு இல்லை. நேரம் வரேக்க சொல்லுகிறன்."

"சரி நான் போய் முகம் கழுவுகிறன்." என்று கூறிவிட்டு நிமலன் குளியல் அறையை நோக்கிச் சென்றான். "TS" தனது கைப்பையைத் திறந்து தேடி அதை எடுத்துப் பார்த்தார். அவருக்கு ஏக்கமாகவும் கவலையாகவும் உணர்ச்சிகள் பொங்கி எழ நெஞ்சு இரணமாக வலித்தது. பிரிவு என்பது எவ்வளவு கொடுமை ஆனது? அதுவும் உயிராய் நேசிப்பவர்களைப் பிரிவது எவ்வளவு கொடுமை?

அதுவும் அவர்கள் வாழ்க்கைப் போராட்டமான போது அதற்கு உதவி செய்ய முடியாது பிரிவது என்பது எவ்வளவு கொடுமை ஆகும்? நல்ல வாழ்க்கையைத் தேடி, அக்கிரமத்தில் இருந்து தப்பி, இங்கு வந்திருக்கலாம். வருவதற்கு அவர்களுக்குக் கொடுத்து வைக்கவில்லை என்பது அவர் நெஞ்சைப் பிழிந்தது.

இருவரும் "TS"சின் இரண்டு கண்கள் போல. இருவரையும் திடீரெனப் பிரிந்து இங்கு வரவேண்டியது ஆகிவிட்டது. யாரோ தவசீலனுக்குப் பதிலாக இந்த அப்பாவித் தவசீலனை வலை போட்டுத் தேட ஆரம்பித்து விட்டார்கள். அல்லது வேறு காரணம் ஏதாவது இருந்து இருக்குமா என்பதும் தெளிவில்லை. எந்தச் சமாதானமும் எடுபடாது என்பது விளங்கிப் போயிற்று. அவசர அவசரமாய் புறப்பட வேண்டியது ஆகிற்று. பணத்திற்காகத் தேடினார்களா அல்லது வேறுயாரும் அள்ளிவைத்துத் தேடினார்களா என்று ஆராய நேரம் இருக்கவில்லை. உயிர் தப்ப வேண்டும் என்கின்ற அவதியில் உயிரான இரு கண்களையும் பரிதவிக்க விட்டு, அவசரமாக வந்தும் ஆகிற்று. "TS" அதை எண்ணி எண்ணி மனம் குமைந்தார். கொழும்பில் வந்து நிற்கும் போது பலாலியில் இருந்து செல் அடிப்பதாகவும் அங்கு இனி குடியிருக்க முடியாது என்றும் சுப்பண்ணன் சொல்லிவிட்டுச் சென்றது தொடக்கம் திரும்பிப் போக வேண்டும் என்று "TS" எண்ணினார். அண்ணன்காரன் உதவி செய்வார் என்கின்ற நம்பிக்கை "TS"சிற்கு இருந்தது. திரும்பிப் போவதால் தனது குடும்பத்திற்கு வரவிருக்கும் நல்ல வாழ்க்கையைக் கெடுக்கக் கூடாது என்கின்ற யதார்த்தம் உறைத்தது. அந்தப் போராட்டத்தோடு வந்து சேர்ந்தாகிவிட்டது. இப்பொழுது அவர்கள் எங்கே எப்படி இருக்கிறார்கள் என்பது "TS"சிற்குத் தெரியாது. இனி எப்போது அவர்களோடு தொடர்பு கொள்ள முடியும் என்பதும் அவருக்குத் தெரியவில்லை. அது "TS"சிற்குக் குழப்பத்தையும் கவலையையும் உண்டு பண்ணியது. அவர் கையில் வைத்து இருந்ததைத் தனது கைப்பையில் மீண்டும் வைத்தார். கவலையோடு தலையை இரண்டு கைகளாலும் பிடித்த வண்ணம் அப்படியே இருந்தார்.

"என்ன அண்ணை தலையில இடி விழுந்த மாதிரி இருக்கிறியள்? போய் முகத்தைக் கழுவிப் போட்டு வாருங்கோ. சாப்பிடப் போவம். எங்களுக்குச் சொந்த அப்பா மாதிரி புத்திமதி சொல்லிக் கொண்டு வந்தியள்...

இப்ப எதுக்குத் தலையைப் பிடிச்சுக் கொண்டு இருக்கிறியள்?"

"அப்பிடி இல்லை... எனக்கு ஏதோ தலை இடிக்குது. பயணக் களைப்பா இருக்கும்."

"சரி முகத்தைக் கழுவிப் போட்டு வாங்க. போய்ச் சாப்பிட்டிட்டு வந்து படுப்பம்."

"TS" எழுந்து முகம் கழுவச் சென்றார். நிமலனுக்கு அவர் சமாதானத்தில் நம்பிக்கை ஏற்படவில்லை. அவரது கைப்பையை எடுத்து அதற்குள் என்ன இருக்கிறது என்று பார்க்க வேண்டும் என்கின்ற ஆர்வம் பிடரி பிடித்துத் தள்ளியது. "TS" திரும்பி வந்தால் என்கின்ற பயம் திகிலாக அதற்குத் தடை போட்டது. நிமலனுக்கு "TS"சின் இந்தக் கவலைக்கும் சமாளிப்பிற்கும் காரணம் என்ன என்பதை அறிய வேண்டும் என்கின்ற ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அந்தக் கைப்பைக்குள் போதைவஸ்துவுக்கு அடிமை ஆனவனுக்கு போதைப் பொருள் இருப்பது போன்ற தவனம் அவனிடம் எழுந்தது. அவன் எழுந்து சட்டையை மாட்டினான். பார்ப்பதா அல்லது பார்க்காமல் விடுவதா? பார்ப்பது என்றால் கெதியாகச் செய்ய வேண்டும். சிறிது பிந்தினாலும் அவர் வந்து விடலாம். தற்சமயம் நான் பார்ப்பதைக் கண்டு விட்டால் என் மீது இருக்கும் நம்பிக்கை போய்விடும். அதன் பிறகு கள்ளனும் காவலுமாக ஒரே அறையில் இருக்க முடியாது. என்ன செய்வது? என்பதாகச் சிந்தித்து நிமலன் குழம்பினான். பின்பு மனதில் துணிவை வரவழைத்தவனாய் அவரது கைப்பைக்கு அருகே சென்றான். அவனுக்குக் குளிர்காய்ச்சல் வந்ததாகக் கை, கால் நடுங்கின. இருந்தும் ஆவலோடு குனிந்து அந்த பையைத் தொடச் சென்றான். திடீரென கொமேட் தண்ணீர் அழுத்திவிடும் சத்தம் குளியல் அறைக்குள் கேட்டது. நிமலன் அதைக் கேட்டு இடி ஓசை கேட்ட சர்ப்பமாய் நடுங்கிப் போய்விட்டான். அவன் பயத்தோடு அவசரமாக வந்து தனது கட்டிலில் இருந்தான். பயத்தில் அவனுக்கு வியர்த்து விட்டது. அவனது இதயம் அவசரமாக அடிப்பது தெளிவாகக் கேட்டது. "TS" இப்போது வந்தால் அவருக்கும் அது கேட்டுவிடும் என்கின்ற பயம் அவனுக்கு உண்டாகியது. இதயத்தின் சத்தம் அடங்கிவிட வேண்டும் என்று அவன் அந்தரப்பட்டான். அவன் அந்தரப்பட அது இன்னும் அதிகரிப்பது போல இருந்தது. "TS"சின்

கைப்பையைப் பார்க்க இப்போது பயமாக இருந்தது. ஆசையில் தொடப் போனால் அவமானமாய் முடியலாம் என்பது விளங்கியது. அடிக்கும் இதயம் தன்னை காட்டிக் கொடுக்கக் கூடாது என்று கடவுளை வேண்டிக் கொண்டான். பக்கத்தில் வந்தாலோ கையை யாராவது உடல் மேல் வைத்தாலோ இதயத்தின் அவஸ்தையை அறிந்து விடுவார்கள். அப்படி எதுவும் நடக்கக் கூடாது. "TS" வெளியாலே வந்ததும் அறையை விட்டு வெளியேறிவிட வேண்டும். வெளியே சென்றுவிட்டால் பல சத்தங்களில் மூழ்கிப்போய் விடலாம். இதயத்தின் சத்தம் அதில் தொலைந்து போகலாம் என்று அவன் எண்ணினான்.

அவன் தொடர்ந்தும் அந்தக் கைப்பையைப் பார்த்த வண்ணமே இருந்தான். நான் உண்மை மட்டுமே சொல்வேன் என்று இதயம் உரக்க ஒலித்தது. நிமலன் கண்களை மூடிப் பாட்டி சிறுவயதிற் சொல்லித் தந்த தியானத்தைச் செய்யத் தொடங்கினான். அப்படியே கண்ணை மூடித் தியானத்தில் அவன் மூழ்கிப் போய்விட்டான்.

"என்ன இருந்த இரையிலேயே நித்திரையே?"

"TS" சிரித்த வண்ணம் கேட்டார். திடுக்கிட்டுக் கண் விழித்த நிமலன் திகைப்போடு அவரைப் பார்த்தான். பின்பு சமாளித்துக் கொண்டு,

"இல்ல... இல்ல... நான் நித்திரை கொள்ளேல்லை."

"அப்ப என்ன செய்கிறாய்?"

"பாட்டி சொல்லித் தந்த மாதிரி தியானம் செய்ய ஏலுமோ எண்டு பார்க்கிறன்."

"ஓ... இந்தச் சின்ன வயசிலேயே நீ அவ்வளவு பெரிய விஷயம் எல்லாம் செய்கிறியே? செய்... செய்... அது உனக்கு நல்லது. அமைதி தரும். சாந்தம் தரும். அழுக்கைப் போக்கி ஆறுதல் தரும். மனதை ஒரு நிலைப் படுத்தும். உன் குறிக்கோளை நோக்கி இயங்க அது உதவி செய்யும். ஆனா... அதை நீ தொடர்ந்து செய்ய வேணும். சும்மா விளையாட்டா இடைக்கிடை தொட்டுப் பார்க்கிறேல்லை." என்றார் "TS". தான் எதற்கு தற்போது தியானம் செய்யத் தொடங்கினேன் என்பது விளங்காது விளக்கம் சொல்லுகிறார் என்பது அவனுக்கு விளங்கியது. தான் செய்ததை அறிந்தால் எப்படி விளக்கம் சொல்லுவார்

என்பது அவனுக்கு விளக்கு எண்ணெய்யான உண்மை ஆகியது.

"சாப்பிடப் போவமே?"

"ஓ நான் றெடி."

இருவரும் புறப்பட்டுச் சாப்பிடச் சென்றார்கள். சாப்பிடும் அறைக்கு ஏற்கனவே எல்லோரும் வந்து விட்டார்கள். இவர்களே கடைசியாகச் சென்றவர்கள் போன்று இருந்தது. கத்தி கரண்டிகளின் யுத்தகளமான முழக்கம் எத்திசையும் எதிரொலித்தது. எல்லாம் சில காலத்தில் பழகிவிடும் என்று "TS" நினைத்துக் கொண்டார்.

தாங்கள் பிந்தி வந்தது ஒரு விதமான சங்கடத்தை நிமலனுக்கு உண்டு பண்ணியது. அங்கு ஏற்கனவே வந்து விட்டவர்கள், சாப்பாடு வைக்கப்பட்டு இருந்த மேசையைச் சுற்றி நின்று சாப்பாடு எடுத்தார்கள். சாப்பாட்டுக் கத்தியால் வெண்ணெய் பாணிற்குப் பூசி அதற்கு மேல் மற்றைய உணவுகளை முள்ளுக் கரண்டிகளால் எடுத்து வைப்பது பிரச்சனை ஆகியது. சிலருக்கு அது வேடிக்கை ஆகியது. நிமலனோடு வந்த எல்லாத் தமிழரும் அங்கு நிற்பதும் தாங்கள் பிந்தி வந்ததும் அவனுக்கு ஒருவித தடுமாற்றத்தை உண்டு பண்ணியது. சிவா சும்மாவே அறுப்பான். இப்போது நான் கடைசியாக வந்தேன் என்பதை அறிந்தால் இன்னும் அறுப்பான் என்கின்ற எண்ணமும் பயமும் அவனுக்கு வந்தது. அதிக நேரத்திற்குப் பின்பு சிவா நிமலனைப் பார்த்தான். அவனுக்கு நிமலனோடு தனகாமல் இருக்க முடியவில்லை.

"என்ன நித்திரை கொண்டிட்டியே?" என்றான் சிவா. நிமலன் தான் பயந்தது சரியாகிப் போய்விட்டது என்று எண்ணினான்.

"அடிபடாமல் ஆறுதலாகச் சாப்பிடுவம் எண்டு பிந்தி வாறம்." என்றான் நிமலன். சிவாவிடம் பிடி கொடுக்கக் கூடாது என்பது அவன் எண்ணம். அடிக்கடி அது நழுவி விடுவது அவன் யதார்த்தம்.

"ஆறுதலா வந்தால் மேசையே மிச்சமா இருக்கும்." என்றான் சிவா. சொல்லி விட்டு "TS"சைப் பார்த்து வழிந்தான்.

"சரி உங்கடை அறுவைய நிப்பாட்டுங்க." என்றான் நிமலன்.

"ஆமிக்குப் பயந்து காத்துக் குடிச்ச இரவுகளும் உண்டு இல்லையே?" என்றார் "TS".

"அநியாயத்தை யார் செய்தாலும் அநியாயமே. எங்கடை மண்ணில நாங்களே அடிமை ஆக்கப்பட்ட யதார்த்தம். அதை நான் மறுக்கவும் இல்லை. மறைக்கவும் இல்லை அண்ணை." என்றான் சிவா.

"பிளேற்றில இருக்கிற பாண் நிலத்தில விளப் போகுது பாருங்க." என்றான் நிமலன் சிவாவைப் பார்த்து.

"ஓமடா... தாங்ஸ்... பிறகு நாங்கள் விரிவாக் கதைப்பம். சண்டைக்குப் பிந்து சபைக்கு முந்து எண்டதை கவனிச்சிட்டு அதுக்குப் பிறகு உன்னிட்டை வாறன்." என்று கூறிய சிவா மேற்கொண்டு தனக்கு வேண்டிய சாப்பாட்டுப் பொருட்களை ஆராய்ந்து ஆராய்ந்து எடுத்துக் கொண்டு சென்றான்.

பழக்கம் இல்லாதவாறு மாலைச் சாப்பாடுகள் இராஜ விருந்தாக வகை வகையாக மேசைகளில் வைக்கப்பட்டு இருந்தன. அதைச் சமையற்காரர்கள் கலை நுணுக்கத்தோடு அழகு படுத்திய விதம் கண்களையும் அதனால் மனதையும் குளிரச் செய்தது. ஐரோப்பியர்கள் எப்படிச் சாப்பாட்டை கண்ணுக்கு முதலில் விருந்து ஆக்குவார்கள், பின்பு அதை எப்படி உண்பார்கள் என்பது நிமலனுக்குக் கற்பனைக்கும் எட்டாத விடையம். அதை நேரே பார்த்த போது அவனுக்கு மலைப்பு ஏற்பட்டது. சாப்பாட்டின் நிறமும், அழகும் அதை உண்பதற்கான ஆர்வத்தைத் தூண்டியது. சிவப்பு, பச்சை, மஞ்சள், ஊதா, நீலம் என்பதாக வானவில் காட்டிய உணவுப் பொருட்களின் வண்ணங்கள். அதை வட்டமாக, சதுரமாக, பூப் போல உணவில் கலை வண்ணம் காட்டிய கை வண்ணம் வியக்க வைத்தது. கடுகு போட்டுத் தாளித்த உணவின் வாசனை வராவிட்டாலும் நிமலன் போரனை வாசம் வந்ததை உணர்ந்தான். அது மட்டுமே அமிலம் சுரந்த அவன் வயிற்றை அவிய வைப்பதாய் கொதி எழுப்பியது.

மாலைச் சாப்பாடாக பல வகை ரொட்டிகள், பல வகை "Corn flakes", பல வகை "Chees", பல வகை "Jam", பல வகை இறைச்சிச் சீவல்கள், பதப்படுத்திய மீன் வகைகள், முட்டையில் செய்யப்பட்ட உணவுகள், வேறு கடல் உணவுகள், தேன், இனிப்புப் பாகுகள், வெட்டிய

மரக்கறிகள், "Salad" இலை, அதற்கு மேலே விட்டுச் சாப்பிடுவதற்குச் சுவையான "Cream", குடிப்பதற்குப் பால், தேநீர், கோப்பி, பழரசம் ஈறாக இன்னும் பல உணவு வகைகள் அங்கு இருந்தன. இராஜ விருந்து என்று கதைகளில் கேள்விப்பட்டதைக் கண் முன்னே கண்ட மலைப்பு. பஞ்சத்தில் இருப்பவனால் உணவில் கலை வண்ணம் செய்து இரசிக்க முடியாது. எப்போது உணவு கைக்கு வரும், அது எப்போது வாய்க்குள் போகும் என்று அவன் துடிப்பான். பஞ்சம் இல்லாத போது, செல்வச் செழிப்போடு இருக்கும் போது, மனிதனுக்கு அதிகமாக நேரம் கிடைக்கும் போது, உணவிலும் மனிதன் அழகு பார்க்கிறான். பசி நெருப்பாக எரியாத அவனை அது அப்போதே கவருகிறது. பாணுக்கும், மரவள்ளிக் கிழங்கிற்கும் பஞ்சத்தில் நிரைக்கு நின்றவருக்கு உணவில் கலை விசித்திரமாய் இருந்தது.

"TS"சிற்கு அவை ஓரளவிற்கு அறிமுகம் ஆனவை. நிமலனுக்கு எந்த உணவை எடுப்பது எதை விடுவது என்று விளங்கவில்லை. எல்லாவற்றையும் சுவைத்துப் பார்க்க வேண்டும் என்கின்ற ஆசை மனதில் எழுந்தது. எல்லாவற்றையும் சுவைத்தால் இரவு படுக்க முடியாது போய்விடும் என்பதும் விளங்கியது. "TS" தனக்கு விருப்பமான உணவுகளை எடுக்கத் தொடங்கினார். அவரைப் பார்த்து நிமலனும் தனக்குத் தேவையானதை எடுத்தான்.

"இந்தப் பாணுக்குச் சீஸ் வைச்சு, அதில இருக்கிற மஞ்சள் கிறீம் மேல விட்டுச் சாப்பிட்டா நல்லா இருக்கும்." என்று நிமலனைப் பார்த்து "TS" கூறினார். தனக்கும் அப்படி இரண்டு துண்டு பாண்கள் செய்து எடுத்தார். நிமலனும் அவரைப் பார்த்து தனக்கு அப்படி இரண்டு துண்டு செய்து எடுத்தான்.

அவனது கையில் கத்தி கரண்டி நிற்க மறுத்து மீனாய் நழுவித் துள்ளிப் பாயப் பார்த்தன. கத்தி கரண்டி மினுங்கியது மட்டுமல்ல கையோடு விரோதித்தும் கொண்டன. ஒருவாறு அதைக் கேட்டியாகப் பிடித்த வண்ணம் இரண்டு துண்டு பாணில் ஒன்றிற்கு மஞ்சள் நிற "Jam"மும், மற்றையதிற்கு சிவப்பு நிற "Jam"மும் பூசி எடுத்தான். "TS" குடிப்பதற்குக் கோப்பி எடுத்தார். நிமலனும் அதை எடுக்கச் செல்ல,

"கோப்பிக்குச் சீனி போடமாட்டினம். படு கச்சலா இருக்கும். நீர் வேணும் எண்டா சீனி போட்டுக் குடியும். இல்லாட்டி ரீ போட்டுக் குடிக்கலாம். உம்மட வயசுக்குப் பால் குடிக்கிறது இன்னும் நல்லம்." என்றார்.

"புட்டும் சம்பலும் எண்டாப் பிரச்சனை இருக்காது. இத்தினை வகையை வைச்சிட்டு எடு எண்டா எதை எடுக்கிறது? எதை விடுகிறது எண்டு பிரச்சனை. இந்த பச்சைப் பாலைக் குடிச்சா ஒண்டும் செய்யாதே?"

"தாராளமாய் நம்பிக் குடிக்கலாம். அது பதப்படுத்தப்பட்ட பால். ஒரு கிருமியும் இருக்காது. எலும்பு வளர்ச்சிக்கும் உடல் ஆரோக்கியத்துக்கும் வளர்கிற பிள்ளையளுக்கும், ஏன் எல்லாருக்கும் நல்லது."

சாப்பாடு எடுத்து முடிய எங்கே போய் இருந்து சாப்பிடுவது என்று பார்த்தார்கள். ஒரு பெரிய மேசையில் எல்லாத் தமிழர்களும் ஒன்றுகூடி இருந்தார்கள். வேறு ஒரு மேசையில் சோமாலியர்கள் குழுமி இருந்தார்கள். வேறு ஒரு மேசையில் ஈரானியர்கள் இருந்தார்கள். வேறு ஒரு மேசையில் லத்தின் அமெரிக்கர்கள் இருந்தார்கள். நாடுவாரியாகப் பலர் சேர்ந்த உடனேயே குழுக்கள் உருவாகிவிட்டன என்பது "TS"சிற்கு விளங்கியது. ஏன் இந்தக் குழுக்களின் தோற்றம்? மற்றைய இனங்களை, மொழிகளை, நிறங்களைப் பார்க்கும் போது மனிதருக்குப் பயமாக இருக்க வேண்டும். மற்றைய மனிதனின் தனித்துவம் மனிதனுக்குப் பயத்தை உண்டு பண்ணுவது கற்காலத்தின் தொடராக. அவன் ஏன் அப்படி இருக்கிறான் என்பதை விளங்கிக் கொள்ளாத அறியாமை அரணாகப் பழகத் தடை போடுகிறது. அப்படியே ஈழத்திலும் நடந்து இருக்கிறது. காலாகாலமாக தமிழரைச் சிங்களவரும் சிங்களவரைத் தமிழரும் விளங்கிக் கொள்ளவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்துப் பார்த்துச் சந்தேகத்தோடு பயந்தே வாழ்ந்து வந்தார்கள். ஆதி மனிதனின் மீதியாக நிலைத்துவிட்ட பயம்.

ஆரம்பத்தில் இருந்தே கடல் தாண்டி வாழும் தமிழர்களை நினைத்தே சிங்களம் மருண்டு இருக்கிறது. மருட்டப்பட்டு இருக்கிறது. தென் நாட்டவர் தென் ஆசியாவையே பிடித்தார்கள். தாங்கள் எந்த மூலைக்கு என்கின்ற பயம் பயமாக இருந்திருந்தால் பருவாய் இல்லை. அது நாளையளவில் வன்மமாக மாறிவிட்டது. தமிழர்கள் தங்கள் ஒரே நாட்டைப் பிடித்துவிட்டுத் தங்களைக்

கடலுக்குள் தள்ளி விடுவார்கள் என்கின்ற கீழ்த்தரமான அரசியல் புல்டா சிங்களவர்களைப் பிடித்து உலுக்கியது. ஆங்கிலேயரும் அதற்கு வஞ்சகம் இல்லாது எண்ணெய் ஊற்றினர். தமிழர்களைக் கல்வியில் உயர்த்தித் தங்களுக்குச் சேவகம் செய்விப்பதில் வெற்றி கண்டனர். அவர்கள் வெற்றி பெரும்பான்மை இனத்தின் வெறுப்பின் விளைநிலம் ஆகியது.

சுதந்திரம் கிடைத்தது. ஜனநாயகம் என்பது ஜனநாயகம் அற்ற ஒரு பகுதி அரசியல்வாதிகளிடம் கொடுக்கப்பட்டது. அதனால் பெரும்பான்மை என்கின்ற வெறிபிடித்தது. ஜனநாயகம் என்பதே ஒரு வகையில் பெரும்பான்மைக்கு கூழைக் கூத்தாட வேண்டும். அந்தப் பெரும்பான்மை நீதி தவறினால் சிறுபான்மைகள் அழிந்து ஒழியும். அயல் நாட்டில் ஆண்ட இனம் தன்மானம் அற்று தனிமனித சுயநலத்திற்கு தங்கள் அரசியலைப் பயன்படுத்தியது. எங்கள் நாட்டில் சிறுபான்மை பெரும்பான்மை அரசியலால் சிதறடிக்கப் பட்டது.

தமிழர்கள் அப்போது தாங்கள் சிறுபான்மை என்பதை உணர்ந்தார்கள். தங்கள் இடங்களைப் பிடித்துப் பிடித்து… தங்களைக் கொன்று ஒழித்து… மீதம் இருப்பவர்களைத் துண்டாடி, தங்கள் இனத்திற்குள் கலந்து… தமிழ் வாசமும், சுவாசமும் இல்லாது கரைத்து விடுவார்கள் என்பது தமிழர்களின் பயமாகியது. அவர்கள் பயம் சிங்களத்தின் வன்முறை அரசியல் ஆகியது. யானையை எப்படிச் சாப்பிடுவது என்பது அவர்களுக்கு விளங்கிவிட்டது. யானையை எப்படிச் சாப்பிடுகிறார்கள் என்பது தமிழருக்கும் விளங்கியது. யானையைச் சாப்பிடும் பயத்தை எந்த அரசியல் வாதிகளும் தீர்த்து வைக்கவில்லை. அதற்கு எண்ணெய் ஊற்றி அதில் இனவெறி அரசியல் நடத்தினார்கள். நடத்துகிறார்கள். இந்த நாட்டில் நிச்சயம் அப்படி இருக்காது என்று "TS" எண்ணினார்.

""TS" அண்ணை ஏதோ யோசிக்கிறியளே? அப்பிடியே திகைச்சுப் போய் நிண்டிட்டியள்?" என்றான் நிமலன்.

"ஒண்டும் இல்லை... வா போவம்." என்று கூறிவிட்டு "TS" நடந்தார். நிமலனும் தமிழர்களின் மேசையை நோக்கி நடந்தான்.

"அண்ணையைத் பார்த்துக் கொண்டு இருக்கிறம். ஏன் பிந்திப் போனியள்? அது சரி அண்ணை, சாப்பாடு நல்ல வடிவாவும் கலராவும் இருந்திச்சுது. சாப்பிட்டுப் பார்த்தா உப்பு, புளி, உறைப்பு ஒண்டும் அதிலை இல்லை. எனக்கு பிளேன் ரீதான் பிடிச்சிருக்குது. நல்ல வேளையா சீனி வைச்சிருக்கினம். அந்த ரீப்பக்கேற்ற போட்டு அடிக்கடி ரீயக் குடிச்சுப் பசிய ஆத்திக் கொள்ளலாம் எண்டு நினைக்கிறன். ஜாமும் பாணும் பசிக்குச் சாப்பிட்டாலும் பசியாற, பானை வயிறு முட்டச் சாப்பிடேலாது. நல்ல சோறும் ஏதாவது ஒரு குளம்பும் இருந்திருந்தா ஒரு பிடி பிடிச்சிருக்கலாம். இப்ப அரைப் பட்டினி கிடக்கிற மாதிரி இருக்குது." என்றான் பரமேஸ்.

"சாப்பாட்டில ருசி இல்லை எண்டு இல்லை. அது முதல்ல பிடிபடாது. ஒடியல் கழிக்கு நல்லெண்ணெய்யை ஊத்தி முதல் முறையாச் சாப்பிடேக்க யாருக்கும் பிடிக்குமோ? இல்லைத் தானே? அதையே சாப்பிட்டுப் பழகினா? பிடிச்சுப் போயிடும். அது ஒரு தனிச் சுவை எண்டு நாக்கும் மனதும் அதுக்கு ஏங்கும். சுவை எண்டுகிறதும் கலை மாதிரியே. அதை இரசிக்கப் பழக வேணும். சாப்பாடு சரி இல்லை எண்டு முதலே நினைக்காமல் சாப்பாட்டை எடுத்து வைச்சுக் கொஞ்சம் கொஞ்சமா ருசிச்சு இரசிச்சு சாப்பிட வேணும். அதில என்னென்ன சுவை இருக்குது எண்டு ஆராய வேணும். காலப் போக்கில உங்களுக்கு இந்த உணவை விடவே மனம் வராது. நாங்கள் சாப்பிடுகிற சாப்பாட்டிலும்விட இந்தச் சாப்பாடுகளில நிறையச் சத்து இருக்குது. அனேகமாக இவங்கள் சத்தை வீண் விரயம் செய்யாத மாதிரிச் சமைப்பாங்கள்." என்றார் "TS". "TS" அதிகப்பிரசங்கித் தனமாகக் கதைத்தாலும் அவரின் அனுபவத்தால் அவர் சொல்வதில் உண்மை இருக்கும் என்று பலருக்கும் தோன்றியது.

"நல்லாகத்தான் சொல்லுறியள். ஆனா நாக்கு செத்துப் போயிடும் போல இருக்குதே அண்ணை." என்றான் திருநா.

"TS" தான் எடுத்து வந்த இறைச்சியில் கிறீம் வைத்ததை எடுத்துப் பரமேசிடம் கொடுத்தார். அவன் என்ன என்பது போல் பார்த்தான்.

"சாப்பிட்டுப் பாரும்."

"இல்லை அண்ணை... நான் வேணும் எண்டா எடுத்து வந்து சாப்பிடுகிறன்."

"அதுக்கு இல்லை... இதை முதல்ல பிடியும். பிறகு ரேஸ்ற் பண்ணிப் பாரும்."

"நீங்கள் பசியில இருக்கிறீங்கள்."

"பருவாய் இல்ல... நீர் முதல்ல சாப்பிட்டுப் பாரும்."

அவன் தயக்கத்தோடு வாங்கி அதைக் கடித்தான். உறைப்பு இல்லை. உப்பு புளிப்பு இருந்தது. வித்தியாசமான சுவை. சாப்பிடலாம் என்கின்ற எண்ணம் வந்தது.

"பருவாய் இல்லை அண்ணை." என்றவன் இன்னும் ஒரு கடி கடித்த வண்ணம்

"நல்லா இருக்குது அண்ணை." என்றான்.

மற்றைய பாண் துண்டைத் திருநாவிடம் கொடுத்தார். அவன் வாங்கிச் சாப்பிட்டான். "நல்லா இருக்குது அண்ணை. எப்படி செய்கிறது எண்டு சொல்லித் தாங்க." என்று எழுந்து கொண்டான்.

அவன் எழ, நிமலனைத் தவிர அந்த மேசையில் இருந்தவர்கள் அனைவரும் எழுந்தார்கள். "TS" அவர்களோடு மறு முறை உணவு எடுக்கச் சென்றார். அன்று அதிக அளவான இறைச்சி சீவல்களும், "Chees"உம், "Mayonnaise"உம், விற்பனை ஆகிற்று. பசியில் இருந்தவர்கள் அவற்றைச் சாப்பிட்டுப் பாலையும் குடித்து வயிற்றின் நச்சரிப்பில் இருந்து சாந்தி பெற்றார்கள்.

சாப்பிட்டு முடியவும் அந்த அதிகாரி வந்து தனது அலுவலகத்திற்கு ஒவ்வொருவராக வருமாறு கூறிவிட்டுச் சென்றார். "TS" முதலிற் சென்றார். அதிகாரி சிரித்த வண்ணம் தனது கணினியில் அவரது பெயரைச் சரிபார்த்தார். அந்தக் கணினி நவீனமாக இருந்தது. அதன் இரண்டு துளைகளிலும் அட்டைகள் செலுத்தப்பட்டு இருந்தன. ஒரு அட்டை கணினி இயங்குவதற்கான மென் பொருளைக் கொண்டது. மற்றைய அட்டையில் உபயோகிக்கும் மென் பொருட்கள் இருந்தன. அப்படியான ஒரு மென் பொருளையே அந்த அதிகாரி பாவித்துப் பெயர்களைப் பதிவு செய்தார். அவர் மிகவும் விரைவாகப்

பதிவு செய்துவிட்டு "TS"சிற்கு அடையாள அட்டையைக் கொடுத்தார். "TS" நன்றி கூறிவிட்டு வெளியே வந்தார்.

அந்த அதிகாரி தொடர்ந்து சென்றவர்களுக்கும் "TS"சிற்கு செய்தது போலப் புகைப்படம் எடுத்து, அதை ஒரு சிறிய அடையாள அட்டையில் ஒட்டிச் செஞ்சிலுவைச் சங்கத்தின் சின்னம் பொறித்துக் கொடுத்தார். அத்தோடு கணினியிலும் பதிந்து கொண்டார். அதில் இருந்த புகைப்படம் விமான நிலையத்தில் எடுத்தது போன்று கறுப்பு வெள்ளை அல்ல. பல வண்ணப் புகைப்படத்தோடு தகவல்களை அந்த அட்டையில் பத்திரப்படுத்தினார். அதன் பின்பு அனைவரும் அலுப்போடு சென்று படுத்தார்கள்.

# 8 ஐரோப்பா என்னும் சொர்க்கம்

கடலின் ஆர்ப்பாட்டமான ஓயாத தாலாட்டலால் தொலைந்து போன இரவுத் தூக்கம். அமைதியை மெதுவாகக் கொலை செய்த வாகனங்களின் இரைச்சல். இலங்கை இராணுவம் கலைத்து வந்தது. அவன் பனைகளுக்குப் பின்னால் மறைந்து மறைந்து ஓடி ஒரு குடிலுக்குள் புகுந்தான். அந்தக் குடிலைச் சுற்றி இராணுவத்தின் பாதணிகளால் ஏற்பட்ட முழக்கம். ஒருவன் அந்தக் குடிசையின் வாசலின் முன்பு வந்து நிற்கிறான். அவன் கையில் உள்ள துப்பாக்கி குடிசைக்குள் நின்ற பரமேசைக் குறி பார்த்தது. சுடாதே சுடாதே என்று கத்திய வண்ணம் திடுக்கிட்டு விழித்தவனுக்கு எங்கே தான் படுத்துள்ளேன் என்பது விளங்கவில்லை. சில கணங்கள் அந்தத் திகைப்பு நீடித்தது. அவன் அப்படியே கிடந்தான். அறை புதிது. அமைப்புப் புதிது. அவனுக்கு ஞாபகம் வரத் தொடங்கியது. நாடு மாறி ஆகிற்று. நோர்வேக்கு வந்தாகிற்று. இரவுச் சாப்பாடு சாப்பிட்ட பின்பு படுத்தது நினைவுக்கு வந்தது. சிங்கள இராணுவம் இங்கே ஒரு போதும் வர முடியாது என்கின்ற துணிவு வந்தது. எழ மனம் ஒப்பவில்லை. இப்படி நிம்மதியாகப் பயம் இல்லாது படுத்தது அவனுக்கு நினைவில்லை. அதைக் குழப்ப இப்படி ஒரு கனவா என்கின்ற சலிப்பு மட்டும் இப்போது மிஞ்சியது. ஒவ்வொரு சத்தமும் உயிரைப் பறித்த அனுபவம் உண்டு. மனிதர்களைக் கண்டு பயந்தது உண்டு. சத்தத்தோடு செல் ஏவுகணையாக இதயத்தைக் கிழிக்கப் பறந்து வரும். கெலி அதிர்வோடு நெருப்புக் கக்கி வரும். அவர்கள் பறந்தாலோ, நடந்தாலோ எங்கள் உயிர்கள் பலியாகும். பயந்து, பயந்து, பார்த்துப், பார்த்துச் சலித்த காட்சி. பரதேசம் போனால் மட்டும் வாழலாம் என்பதாய் மனது கல்லாய் இறுகிற்று.

இன்று பரதேசம் வந்தாகிற்று. இந்த நாடு எப்படி இருக்கும்? எத்தினை மணிக்கு மீண்டும் சாப்பாடு தருவார்கள்? இப்போது என்ன நேரம்? என்கின்ற கேள்விகளோடு தனது கைக் கடிகாரத்தை எடுத்துப் பார்த்தான் பரமேஸ். அது இலங்கை நேரம் காட்டியது. அதை இந்த நாட்டின் நேரத்திற்கு மாற்றுவதற்கு அவன் மறந்து போய்விட்டான். சிவாவின் கடிகாரத்தை எடுத்துப்

பார்க்கலாம். அவனுக்குத் தயக்கமாக இருந்தது. ஏன் எடுத்தாய் என்று அவன் கேட்டால்? சிவா பொல்லாதவன் போலத் தோன்றினான். யார் என்பது பாராது நேருக்கு நேரே உரிப்பது அவன் பழக்கமாக இருக்கிறது. அதற்கு அவனில் கோபித்துப் பிரயோசனம் இல்லை. நாங்கள் கவனமாக இருக்க வேண்டும். இப்போது எடுத்தால் எதற்குக் கேட்காமல் எடுத்தாய் என்றுகூட அவன் கேட்கலாம்.

முகத்தைக் கழுவிவிட்டுச் சாப்பிடும் அறைக்குச் சென்று பார்க்கலாம். ஏதாவது சாப்பாடு இருந்தாற் சாப்பிடலாம். நேரத்தையும் அங்கிருக்கும் பெரிய மணிக்கூட்டில் பார்த்துச் சரி செய்யலாம். அல்லது தேநீர் ஆவது தயாரித்து எடுத்து வரலாம். அல்லது அந்த நினைப்பை எல்லாம் துறந்து இப்படியே படுத்திருக்கலாம். சில வேளைக் காலைச்சாப்பாடு முடிந்துவிட்டால்? பசிக்கும் வயிற்றோடு அதிக நேரம் இப்படியே தூங்க முடியாது. சாப்பிட்ட பின்பும் அலுவல் இல்லை என்றால் தூங்கலாம். எதற்கும் எழுந்து முகத்தைக் கழுவிய பின்பு சென்று பார்ப்பது என்று அந்தச் சிந்தனையின் பின்பு அவன் முடிவு செய்தான்.

எழுந்து முகத்தைக் கழுவிய பரமேஸ் தனது உடுப்புகளை எடுத்து உதறி மாட்டினான். அந்தச் சத்தத்தில் சிவா விழித்துவிட்டான். விழித்தவன் எழாது படுத்த வண்ணமே,

"என்ன நேரம் இப்ப?" என்றான்.

"தெரிய இல்லை. நான் நேரத்தை மாத்த மறந்து போனன்." என்றான் பரமேஸ்.

"மறந்தாச் சரி. மாத்தத் தெரியாட்டிப் பிரச்சனை. என்ரைய எடுத்துப் பாரும்." என்றான் சிவா. சிவாவின் உரசல் பரமேசுக்குக் கேந்தியை உண்டு பண்ணியது. அதைக் காட்டிக் கொள்ளாமல் மணிக்கூட்டை எடுத்துப் பார்த்தான். அது றோமன் எழுத்தில் இருந்தது.

"இப்ப இவனுக்கு என்ன பதில் சொல்லுகிறது? அறுவான் நக்கலடிக்கப் போகிறானே?" என்பது பரமேசுக்குத் தடுமாற்றத்தை ஏற்படுத்தியது.

"மணி பார்க்கிறீரா? இல்லாட்டிப் புது மணிக் கணக்கு கண்டு பிடிக்கிறீரா?" என்றான் சிவா. அவன் விஷமம்

தொடங்கி விட்டது என்பது பரமேசுக்கு விளங்கியது. "எதிருக்கு எதிராய் போட்டுத் தாக்க வேண்டும். இல்லாவிட்டால் இவன் அடங்கமாட்டான்." என்பது விளங்கினாலும் அவனை மடக்கக் கூடியதாக எதுவும் கிடைக்காதது பரமேசுக்கு பெரும் தவிப்பு ஆகியது.

"உந்த ரோமன் எழுத்து அறுப்பு எல்லாம் எனக்குத் தெரியாது. ஏழரையா இருக்கும் எண்டு நினைக்கிறன்." என்றான் பரமேஸ்.

"என்ன எழரையோ? சாப்பிடப் போக வேணும்." என்று கூறிய வண்ணம் துடித்துப் பதைத்து எழுந்தான் சிவா. எழுந்து வந்த சிவா அவசரமாகப் பரமேசிடம் இருந்து மணிக்கூட்டை வாங்கிப் பார்த்தான். பின்பு சிரித்த வண்ணம் பரமேசைப் பார்த்து,

"நீர் சாத்திரம் ஏதும் சொல்லுகிறநீரே?" என்றான்.

"எதுக்கு உந்த நக்கல் இப்ப?"

"பகிடிக்கு இல்லை… சீதியசாக கேட்க்கிறன். சாத்திரம் சொல்லுறநீரே?"

"இது என்ன கோதாரி… சும்மா இரும். நான் சாத்திரம் யாரிட்டையும் கேட்டு இருப்பன். எனக்குச் சாத்திரம் சொல்ல வராது. உமக்கு உந்தக் குசும்பு மாத்திரம் போகாது போல இருக்குது."

"அப்ப என்ன விஷயம் எண்டு தெரிய வேண்டாம் எண்டால் விடும்."

"அறுக்காதீர். என்ன எண்டு அதைச் சொல்லித் துலையும்."

"பிறகு என்ன நேரம் சரியா இருக்குது. அதுதான் சாத்திரம் சொல்லுவீரோ எண்டு கேட்டனான்."

"அடக் கோதாரியே. இந்த நேரத்தில பெரிய மேதாவி எண்ட நினைப்பு உமக்கு."

சிவா பதில் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டு குளியல் அறைக்குள் சென்றான். சிவா வரும் வரையும் எதற்காகக் காத்திருக்க வேண்டும் என்று நினைத்த பரமேஸ் அவன் கடியைக் குறைப்பதற்கு என்றாலும் பொறுத்திருக்க வேண்டும் என்று சமாதானம் செய்து கொண்டு அவனுக்காகக் காத்திருந்தான். சிவாவின் இந்த

அறுவையை நிறுத்த வேண்டும் என்பது அவனுடைய விருப்பம். அதை எப்படி நிறுத்துவது என்பது மட்டும் அவனுக்கு விளங்கவில்லை. சில குணங்கள் பிறப்போடு உதித்து விடுகிறது. யார் என்ன சொன்னாலும் நாய் வாலாக அதை மாற்றிவிட முடியாது. சிவாவின் கடியும் மாற்றத்திற்கு அப்பாற்பட்டது. அந்தக் கடி மாறினால் அவன் முற்றாக மாறிப் போய்விடுவான்.

சிவா குளியல் அறையை விட்டு வெளியே வந்தான். "எண்டாலும் உமக்கு என்னில அன்பு." என்று கூறிய வண்ணம் அவசரமாகப் புறப்பட்டான். இருவரும் வெளியே வந்தார்கள். சாப்பாட்டு அறையில் சாப்பாடு வைக்கப்பட்டு இருந்தது. சோமாலியர், ஈரானியர், சில்லி நாட்டினர் போன்ற சிலர் சாப்பிட்ட வண்ணம் இருந்தனர். ஒரு தமிழரையும் காணவில்லை. பயணக் களைப்பு அவர்களை எழுந்திருக்க விடவில்லை என்பது சிவாவுக்கு விளங்கியது.

"என்ன செய்வம் பரமேஸ்? உவங்களை எழுப்புகிறத்துக்குக் குண்டு வைப்பமே?"

"இங்க வந்தும் குண்டும் வெடியுமா? வாரும் திருவெண்பா பாடி எழுப்பிப் போட்டு வருவம்."

"ம்... குண்டு எண்டுகிறது பனம் பழம் மாதிரிப் பழகிப் போச்சுது. எங்கடை மண்டைக்க இருக்கிற வேதனையும் ஆத்திரமும் எங்களுக்கு மட்டும்தானே தெரியும்?" சிவா அதைச் சொல்லும் போது அவன் முகம் இறுகிவிட்டது. எங்கோ யார்மீதோ அவனுக்கு அடக்க முடியாத கோபம். வெறுப்பு. ஆனாலும் மற்றவர்களைக் கிண்டல் பண்ணிக் கலகலப்பாய் இருப்பது அவன் இயல்பு.

இருவரும் முதலில் "TS"சின் அறைக் கதவைத் தட்டினார்கள். "TS" ஏற்கனவே விழித்துவிட்டார். நிமலனை எழுப்பும் அளவிற்குச் சத்தம் செய்யாது தனது காலைக் கடனை முடித்து விட்டு, அதன் பின்பும் இன்னும் சிறிது அவன் தூங்கட்டும் என்று காத்து இருந்தார். அவருக்கு அவனைப் பார்க்கும் போது தனது சொந்த மகனைப் போன்று ஒரு பரிவு. அவன் தூங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்த அவரிடம் ஏக்கம் அலை அலையாக வெயிலில் தோன்றும் கானல் நீர் போல எழுந்தது. தனது கைப்பையை எடுத்து அதில் தான் வைத்திருந்த படத்தை உருவிப் பார்த்தார்.

யுத்தத்தின் மொத்தக் கொடுமையும் பிரிவாக வந்ததான ஏக்கம் அவரிடம் எழுந்தது. எதைப் பிரியக் கூடாதோ அதையே பிரிந்து விட்ட சோகம் கொடும் புயலாக மனதைச் சிதைத்தது. ஓ வென்று கத்திக் கதறி அழ வேண்டும் என்பதாகத் தோன்றியது. அப்படிச் செய்தால் இப்போதே பைத்தியம் என்பார்கள். அப்படிச் செய்யாது விட்டால் நாளையளவில் தான் பைத்தியமாகி விடுவேனோ என்கின்ற பயம் அவருக்கு வந்தது. எவ்வளவு காலம் இந்தக் கொடுமை நீடிக்கும் என்பது அவருக்கு விளங்கவில்லை.

தொடக்கத்தில் இருந்தே குடும்ப வாழ்க்கை என்பது தொடராக அமையவில்லை. அம்மாள் ஏன் இப்படிச் சோதிக்கிறாள் என்று பல முறை "TS" எண்ணி மனதில் கதறியது உண்டு. கதறல்கள் அவள் காதில் கேட்பதாகத் தெரியவில்லை. அநியாயங்கள் நடக்கும் போது அவதரிப்பேன் என்ற ஆண்டவனை எங்களுக்கு அநியாயம் நடந்தபோது விக்கிரகமாக மட்டுமே காண முடிந்தது. அதுவும் குண்டு மழைக்குப் பயந்து கோயிலிற்குள் அடைந்து கிடந்த விக்கிரகமாக மட்டும் காண முடிந்தது. "TS"சின் வாழ்வில் மீண்டும் பிரிவு வந்துவிட்டது. அதுவும் யாழ்ப்பாணம் அந்தரத்தில் இருக்கும் போது அவர்களைப் பிரிந்து வந்தது மனதைக் குடைந்தது. மீண்டும் மீண்டும் அந்தப் புகைப்படத்தை பார்ப்பதில் அவர் தன்னை மறந்தார்.

திடீரெனச் சிவா கதவைத் தட்டினான். அந்த அதிர்வில் நிமலன் துடித்துப் பதைத்து துள்ளி எழுந்தான். "TS" அவசரமாக அந்தப் படத்தை தனது கைப்பையில் மீண்டும் வைத்தார். அதை நிமலன் கவனித்தான். இவர் அந்தப் பையில் அப்படி என்ன வைத்து இருக்கிறார் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அதை அறிய வேண்டும் என்கின்ற ஆவல் அவனுக்கு மேலும் அதிகம் ஆகிற்று. அதிகமாகிய ஆவலைத் தீர்த்துக் கொள்ளும் வழி என்ன என்று தெரியவில்லை. அவன் ஆற்றாமை உடன் எழுந்து குளியல் அறைக்குச் சென்றான்.

"அண்ணை சாப்பாட்டுக்கு கெதியா வாங்கோ. இல்லாட்டி மிச்சம் சாப்பிட வேண்டி வரும்." என்றான் சிவா.

"ஓம் வாறம்... நீங்க போங்க." என்றார் "TS".

"சரி."

அவனும் பரமேசும் அடுத்த அறையை நோக்கிச் சென்றார்கள். சோறு சாப்பிட்டால் நித்திரை வரும் என்கிறார்கள். சிவாவிற்கு அதன் உண்மை பொய் விளங்கவில்லை. இரவு சோறு சாப்பிடாது விட்டாலும் எல்லோரும் நன்றாக நித்திரை கொள்கிறார்கள். எப்படி என்பது அவனுக்குச் சற்றும் விளங்கவில்லை.

ஒவ்வொரு அறையாகத் தட்டி எழுப்பிவிட்டுச் சிவாவும், பரமேசும் வந்து சாப்பிடத் தொடங்கினார்கள். மற்றவர்களும் சிறிது நேரத்தில் வந்து சாப்பிட்டார்கள். சாப்பிட்ட பின்பு போய் மீண்டும் நித்திரை கொள்ள வேண்டும் என்பது திருநாவின் திட்டமாக இருந்தது. அந்தத் திட்டம் இப்படித் தவிடுபொடி ஆகும் என்று அவன் எதிர்பார்க்க இல்லை.

சாப்பிட்டு முடிந்ததும் சிலர் நித்திரைத் தவுனத்தோடு தங்கள் அறைக்குச் சென்று விட்டார்கள். சிவா ஆறுதலாகப் பிள்ளையாரின் பிடி பிடித்தான். அவனோடு பரமேஸ், "TS", சொரூபன், அருள் ஆகியோர் இருந்து சாப்பிட்டார்கள். மத்தியானத்திற்கும் சேர்த்துச் சாப்பிடும் பாங்கு அவர்களிடம். இவர்கள் ஆற அமரச் சமா வைத்துச் சாப்பிடும் போது அந்த அதிகாரி அங்கு வந்தார். வந்த அதிகாரி, "குமோர்கன்." என்றார். எல்லோரும் அவர் என்ன சொல்கிறார் என்பது விளங்காது விழித்தார்கள். அவருக்கு அது சட்டென விளங்கியது. பின்பு ஆங்கிலத்தில் தான் சொன்னதிற்கு அர்த்தம் என்ன என்று விளக்கிக் கூறினார். எல்லோரும் புன்னகையை வரவழைத்துக் கொண்டு பாடசாலை ஆசிரியருக்குக் காலை வணக்கம் சொல்வது போல அவருக்குக் காலை வணக்கம் சொன்னார்கள். அதன் பின்பு அந்த அதிகாரி அவர்களைப் பார்த்து,

"நாங்கள் இன்று கடைக்குச் செல்ல வேண்டும். நீங்கள் அதற்கு இன்னும் பத்து நிமிடத்தில் தயாராக இருக்க வேண்டும்." என்றார்.

"கடைக்கா? எதற்கு?" என்று சிவா கேட்டான்.

"உங்களில் பலர் "Suitcase"ஐத் தவற விட்டு வந்திருப்பது எனக்குத் தெரியும். அத்தோடு இங்கு பாவிப்பதற்குக் குளிர் தாங்கும் உடைகள், பாதணிகள் வேண்டும். அதை வாங்கித் தருவது என்னுடைய பொறுப்பு. அதற்காக நான் உங்களைக் கடைகளுக்கு அழைத்துச் செல்லப்

போகிறேன். இன்னும் பத்து நிமிடத்தில் நீங்கள் புறப்படத் தயாராக இருக்க வேண்டும்." என்று கூறிவிட்டுத் தனது அலுவலகத்திற்குத் திரும்பிச் சென்றார்.

எல்லோரும் அவசரமாகச் சென்று தங்களை மீண்டும் ஒரு முறை அலங்கரித்துக் கொண்டனர். பத்து நிமிடம் கழித்து அனைவரும் வந்து அவரது அலுவலகத்திற்கு முன்பு நின்றார்கள். சிறிது நேரத்தில் வெளியே வந்த அந்த அதிகாரி ஆட்களை எண்ணினார். பதினோரு உருப்படி சரியாக இருப்பதில் திருப்தி அடைந்தவர் எல்லோரையும் வாசலில் வந்து நிற்குமாறு கூறிவிட்டு எங்கோ சென்றார். ஐந்து நிமிடம் பஞ்சாய் பறந்து இருக்கும். அவர் ஒரு நீல நிறச் சிறிய பேருந்தை ஓட்டிக் கொண்டு வந்தார். தமிழர்கள் இதை எதிர்பார்க்கவில்லை. அதிசயத்தோடு வாயைப் பிளந்தார்கள். இலங்கையில் பெண்கள் வாகனம் செலுத்துவது ஏவுகணையில் சந்திரனுக்குப் போவது போல. அதுவும் இப்படியான பெரிய வாகனத்தைச் செலுத்துவதே இல்லை. இங்கு ஒரு பெண் அதைச் செய்வது அவர்களுக்கு அதிசயமாக இருந்தது. வாகனத்தை நிறுத்திய அதிகாரி வாயைப் பிளந்து கொண்டு நின்றவர்களை வந்து அதில் ஏறுமாறு கூறினார். அதை அடுத்து "TS", சிவா போன்றவர்கள் ஆங்கிலம் விளங்கியதால் வாகனத்தில் ஏற அவர்கள் ஏறுகிறார்களே என்பதால் மற்றவர்களும் அவர்கள் பின் சென்று வாகனத்தில் ஏறினார்கள். அதை அடுத்து எல்லோரும் பட்டி மாட்டிக் கொள்ள வேண்டும் என்று அந்த அதிகாரி கூறினார். அதனால் அங்கே சிறிய அமளிதுமளி கோடைக் காலத்துச் சுழல் காற்று போல உருவானது. அது அடங்கும் வரைக்கும் அவர் சிரித்துக் கொண்டு காத்து இருந்தார். எல்லோரும் பட்டியை அணிந்து விட்டார்கள் என்பதை உறுதிப்படுத்தியதும் அவர் வாகனத்தை இயக்கினார். அது மெதுவாக ஊர்ந்து குறுகிய பாதை ஒன்றில் இறங்கியது. அப்படிப்பட்ட பாதையை இலங்கையில் "TS" பார்த்தது இல்லை. அங்கே தெருக்களில் கருமை நிறம் கொண்ட தார் என்கின்ற ஒன்றை ஊற்றி, அது பின்பு வெயிலில் உருகி, வெள்ளியாய் மினுமினுக்கும். தெருவுக்கும் நிலத்திற்கும் பிடிப்பு இல்லாத ஒருவித அந்தரமான உறவு அவற்றிற்குள் இருப்பது மழையைக் கண்டதும் தெரியவரும். குண்டு குளிகளுக்குச் சரளையைக் கொட்டி ஓலையால் தார் ஊற்றிய கைவண்ணம் அலங்கோலச் சாட்சி ஆகும். மாரியில் நடுத் தெருவிலும் திடீரெனக் குளங்கள்

உருவாகும். வாகனங்கள் ஓடுவதற்குப் பதிலாக வெள்ளத்தில் நீந்தியும் செல்லும்.

இங்கு அந்தக் குறும் பாதையே வித்தியாசமாய் இருந்தது. கறுப்பும் வெள்ளையும் கலந்ததான தெருவின் தோற்றம். தார் எது சல்லிக் கல் எது என்பது தெரியாது சீமேந்தாய், விமான ஓடுதளம் போல் உறுதியாக இறுகிய பாதை. பூமியில் நிரந்தரமாகப் புதைத்து வைத்ததாக அதன் இருப்பு. விமானத்தை அங்கும் இறக்கலாம் இங்கும் இறக்கலாம் என்கின்ற வசதியான சொகுசு அல்லது அருமையான ஏற்பாடு. அலுங்காமல் குலுங்காமல் வழுக்கிய வண்ணம் பயணிக்கும் அலாதியான புது சுகம்.

ஐரோப்பா எப்படி இருக்கும் என்பது பலருக்கும் இதுவரை மனதிற்குள் விரியும் கற்பனைக் காட்சிகளாகவே இருந்தன. ஒஸ்லோ விமான நிலையத்தில் இறங்கிய பின்பு அது கண்முன் நிஜமான வாழ்வு ஆகியது. அந்த நிஜமான வாழ்வின் தோற்றத்தை நேற்று இருட்டில் அவர்களால் அதிகம் பார்க்க முடியவில்லை. இன்று சூரிய வெளிச்சத்தில் நோர்வே நாட்டைப் பார்த்த போது எல்லோருக்கும் உச்சி விறைக்கும் வியப்பாக இருந்தது. வாகனம் கடற்கரையை அண்டி ஓடியது. அங்கே பல துறைகள் இருந்தன. எல்லாத் துறைகளிலும் விதம் விதமான ஓய்வுப் படகுகள் நிரை நிரையாக நின்றன. இந்த ஓய்வு நேரத்தை இன்பமாகக் கழிக்கும் படகுகள் பொழுது போக்கிற்காய் மட்டும் பயன்படுத்தப்படுபவை. எவ்வளவு ஓய்வுப் படகுகள்?. பார்க்கும் இடம் எல்லாம் அவற்றின் நெருக்கமான பிரசன்னம். பல துறைகளிலும் அவற்றின் தொடர் காட்சி... திருநாவுக்கு வியப்பாக இருந்தது. இப்படி ஊரில் வசதி இருந்தால் எவ்வளவு மீனைக் கடலில் இருந்து அள்ளி வந்து இருக்கலாம். கயிற்றால் மரத்தைக் கட்டி, தடியிலே தூண்டிலைக் கட்டி... அப்படி அவன் வேலை செய்த கட்டுமரத்திற்குக் கூரை எதுவும் கிடையாது. இவை அப்படியல்ல. இந்த ஓய்வுப் படகுகள் சிலவற்றிற்கு அறைகள் இருக்கும் போலத் தோன்றியது. மேலே மூடிய பகுதி உண்டு. திறந்த பகுதியும் உண்டு. அப்படி இருந்தும் இவை தொழிலுக்குப் பாவிக்கப்படுவது இல்லை. பொழுது போக்கிற்கான உபகரணம் போல இவை பயன்படுகின்றன. மீன் பிடிக்கப் போகின்ற வள்ளங்களும் சில நிற்பதைத் திருநா அவதானித்தான். மற்றவர்களும் கண்ணுக்கு எட்டிய தூரம்

எல்லாம் நீலமும் வெள்ளையுமாக நின்ற அந்த வள்ளங்களைப் பார்த்து மலைத்துப் போய்விட்டார்கள்.

வாகனம் நெடுஞ்சாலையை நெருங்கியது. மற்றாசில் இருக்கும் போது மவுண்ரோட் பாரிய நெடுஞ்சாலையாகத் தோன்றியது. அதற்கு இந்த அழகான முகம் கிடையாது. பிச்சைக்காரனுக்குப் பழசைப் போர்த்தியதான தோற்றம் அது. இந்த நெடுஞ்சாலை, அதற்கு மேல் செல்லும் பாலம்? எங்கும் பளிச்சிடும் நவீனம். எதிலும் பல தேரோடும் வீதியான விஸ்தீரணம். கண்ணைக் கவரும் புதிய புதிய வாகனங்கள். எண்பது கிலோமீற்ரர் வேகத்தில் நகரும் அதன் மின்னல் வெட்டுக்கள். பெரிய பெரிய அசுரன் போன்ற பாரவூர்திகள். அத்துடன் ஒப்பிடும் போது "Ashok Leyland" ஒரு தட்டி வான் போல. இவை இறுக்கமான இரும்புப் பெட்டிகளைப் புகையிரதமாய் தெருவில் ஓட விட்டதான ஓர்மத்தோடு நகர்ந்தன. ஒரு ஊர்தியில் இரண்டு பெட்டிகளின் பிணைப்பு. அவையும் எண்பது கிலோமீற்ரர் வேகத்தில் குட்டிச் சூறாவளிகளை உண்டு பண்ணிய வண்ணம் நகர…

இயற்கையின் அதி அற்புத அழகு நிலையமாக, சிறிய ஏரிகள் கடும் குளிர்சாதனப் பெட்டியில் ஊற்றப்பட்டு உறைந்த நீராக... பட்டுத் தெறிக்கும் சூரிய ஒளி கண்ணைக் கெட்டுப் போகும்படி அடிக்க, ஏரியைத் தாண்டிய கடலின் அலையில் கரைந்த பனிப் பாளங்களின் வெள்ளை ஓடங்களான மிதப்பு. புதுமை. பனிப்பாளங்கள் அலையில் மிதப்பது இதுவரை கண்டிராத புதுமை. பனிக் காலம் முடிந்து கோடை காலம் தொடங்கும் ஆரம்பத்தில் நோர்வேக்கு வந்திருப்பது அவர்களின் பெரும் அதிர்ஷ்டம். என்றாலும் இன்னும் குளிர் தன் பிடியை விடாத கோலம்.

"TS"சிற்கு இலங்கை ஒரு உலகம் என்றால் இது வேறு ஒரு உலகம் என்பது விளங்கியது. இந்த மனிதர்களிடம் என்ன அபூர்வமான தனித்துவம் இருக்கிறது? எதனால் இப்படி இவர்கள் மட்டும் முன்னேறினார்கள்? எதனால் நாங்கள் இவர்களின் அசுர வேகத்தில் முன்னேற முடியவில்லை? நாங்கள் பின்தங்கினாலும் பருவாய் இல்லை. சொந்த நாட்டிலேயே உரிமைக்காக இனங்களாகக் கூறுபட்டுப் போராடுகிறோம். அழிகிறோம். என்ன சாபம் இது? "TS"சிற்கு மனம் சோர்ந்தது. இவர்களின் முன்னேற்றமும், இந்த நாட்டின் கட்டுமானமும், அதன் கவர்ச்சியான அமைப்புக்களும், வியப்பாக, மலைப்பாக அவரைத் திகைக்க வைத்தன.

இப்படி இலங்கை மாறுவதற்கு இன்னும் எத்தனை நூற்றாண்டுகள் தேவைப்படும் என்பது "TS"சிற்குத் தெரியவில்லை. அப்படி இலங்கை மாற்றம் அடைந்து அதில் வாழும் சந்தர்ப்பம் கிடைத்தால் எப்படி இருக்கும் என்கின்ற கற்பனை அவரிடம் ஓடியது. இலங்கை அப்படிப் பொருளாதாரத்தில் மாறினாலும் அதில் வாழும் மனிதர்களின் குணம் மாறுமா என்கின்ற கேள்வி அவரிடம் எழுந்தது.

இந்த மேற்கு ஐரோப்பியர்களிடம் ஏதோ இருக்கிறது. அவர்கள் குடி இருக்கும் இடங்கள் எல்லாம் பொன்னாக மாறுகிறது. அவர்கள் குடியிருக்கும் நாடுகளுக்கு மட்டுமே அவர்கள் தொழில்நுட்பம் கிடைக்கிறது. ஆத்திரேலியா அப்படியே மாறியது. கொங்கொங் அப்படி மாறியது. இலங்கையும் மாறி இருக்கும். அந்த நாட்டு மக்களும் மாறி இருப்பார்கள். சுதந்திரம் என்பது பலருக்கு விடிவாகும். எங்கள் நாட்டிற்கு அது ஒரு கௌரவமான சாபமாக அமைந்து விட்டது. ஐரோப்பியர் போல எங்களால் அபிவிருத்தி அடைய முடியவில்லை. அவர்களிடம் இருக்கும் தொழில்நுட்பத்தை எங்களால் உருவாக்க முடியவில்லை. அவர்கள் தொடர்ந்தும் எங்களோடு இருந்திருந்தால் இலங்கையும் ஒரு ஆத்திரேலியா போல அல்லது சிங்கப்பூர் போல மாறியிருக்கும். ஆளத் தெரியாதவர் கைகளில் ஆட்சி. தொழில்நுட்ப வறட்சியில் இனவாதம் பேசும் ஏமாற்று அரசுகள். அழிந்து போகும் நாட்டின் அபிவிருத்தியும், நம்பிக்கையும், மனிதாபிமானமும் கேள்விக்குறி.

விதம் விதமான கட்டடங்கள். கண்ணாடிச் சாளரமே தோற்றமாகச் சில கட்டடங்கள். சில கட்டடங்களுக்கு சுவர்களே கண்ணாடியாக. அவற்றில் எழுந்து நின்ற வர்த்தகச் சுலோகங்கள். வாகனங்கள், தெருக்கள், கட்டடங்கள் என்பதாக அசையும், அசையா அனைத்துமே இதுவரை பார்த்திராத நவீனத்தோடு நம்ப முடியாது வியப்பு ஊட்டியது. சுத்தம். எங்கும் விழுந்து படுத்து உருளச் சொல்லும் சுத்தம்.

காலா காலமாய் இருந்து வந்த ஐரோப்பியக் கனவு உண்மை என்பதாக "TS"சிற்குத் தோன்றியது. இவ்வளவு அழகான, வசதியான நாடுகளில் வாழ்வது சுவர்க்கத்தில் வாழ்வது போல் அல்லவா என எண்ணத் தோன்றியது. அப்படி இருந்தும் ஏன் இந்த ஐரோப்பியரில் சிலர் எங்கள் நாடுகள் போன்ற ஏழை நாடுகளைத் தேடி வந்து

வாழ்கிறார்கள் என்பது அவருக்கு விளங்கவில்லை. பணமும் இந்த வசதிகளும் உண்மை இல்லை என்பது அவர்கள் எண்ணமா? அவர்களுக்கு இப்போது விளங்குவது, சில ஞானிகளுக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு விளங்கியது, எங்களுக்கு இன்னும் பல நூறுவருடங்கள் சென்ற பின்பு விளங்குமா? மற்றைய மனிதனைப் பார்த்தால் மலைப்பாகவே இருக்கிறது. எந்தக் காரியமும் எங்களால் திறமையாகச் செய்ய முடியவில்லை என்பது சிறுமையாகப் படுகிறது. இது நிதர்சனமா? இது நித்தியமா?

வாகனம் தொடர்ந்தும் சளைக்காத வேகத்தில் பயணித்தது. அது நெடுஞ்சாலைக்கு ஏறாது அதன் அருகாக இருந்த பாதையால் பயணித்து நகரப் பகுதிக்குள் பிரவேசித்தது.

"இந்தச் சண்வீக்கா என்கின்ற நகரம் பற்றி உங்களுக்கு ஒரு விடயம் தெரியுமா?" என்றார் அந்த அதிகாரி.

"இல்லையே... என்ன அது?" வினாவினார் "TS". சம்பாசனை ஆங்கிலத்தில் தொடர்ந்தது.

"2500 வருடங்களுக்கு முன்பு இந்த இடம் எல்லாம் நீருக்கு அடியில் இருந்ததாம். 800 ஆண்டுகளுக்கு முன்பு நிலப்பரப்பு மேலே வந்ததாம். அதன் பின்புபே இங்கு மனிதர்களும், மிருகங்களும் வாழும் நிலை உருவாகியதாம். முதலில் நான்கு கால் மிருகங்களே அதிகம் இங்கு வாழ்ந்தனவாம். பின்பு 1650 இல் தாதுப் பொருள் தெற்குப் பகுதிகளில் இருந்து இரும்பு ஆலைகளுக்குக் கொண்டு வரப்பட்டனவாம். இரும்புத் தொழிற்சாலைக்கான துறைமுகமாக சண்வீக்கா மாறியதாம். பின்பு 1842 இல் புகையிரதப் பாதை கிறிஸ்தியானியாவான இன்றைய ஒஸ்லோவுக்கும் றமன் என்கின்ற நகருக்கும் இடையே போடப்பட்டதாம்.

அந்த முக்கியமான பாதையில் சண்வீக்கா அமைந்து இருப்பது குறிப்பிடத்தக்கதாய் அமைந்து விட்டது. அதன் பின்பு இது ஒரு சிறிய நகரமாக மாறத் தொடங்கியதாம். இன்று இது ஒரு முக்கியமான நோர்வேயின் தெற்கு நகரமாக இருக்கிறது." என்று முடித்தார்.

"நீங்கள் என்ன வரலாறு படித்தீர்களா? இவ்வளவு விடயத்தையும் தெரிந்து வைத்து இருக்றீர்கள்?" என்று அந்த அதிகாரியைப் பார்த்து "TS" கேட்டார்.

"நான் வரலாறு பெரிதாகப் படிக்கவில்லை. சிறிது சிறிதாக இப்படியான விடயங்களை அறிந்து வைத்து இருக்கிறேன். இப்பொழுது சண்வீக்கா மிகவும் மாறிவிட்டது. இது இன்னும் அதிகமாக வரும் காலத்தில் மாறும். ஒஸ்லோவுக்குப் பக்கத்தில் இருப்பதும் றமனுக்கும் ஒஸ்லோவுக்கும் இடையில் இருப்பதும் அதற்கு ஏதுவாக இருக்கிறது." என்றார் அந்த அதிகாரி.

"நன்றி. நீங்கள் நன்றாக வாகனம் ஓட்டுகிறீர்கள். எங்கள் நாட்டில் பெண்கள் வாகனம் ஓட்டுவது மிக மிக அரிது."

"அதைப் பற்றி நான் கேள்விப்பட்டு இருக்கிறேன். அத்தோடு இங்கிலாந்தைப் போல் வலப்பக்கம் வாகனம் ஓட்டுவீர்கள். இல்லையா?"

"ஆம். உண்மை. இங்கு இடப்பக்கம் ஓட்டுவதைப் பார்க்க அதிசயமாக இருக்கிறது."

"எல்லாம் பழக்கமே. எங்களுக்கு வலப்பக்கம் சில வேளை தடுமாற்றத்தை உண்டு பண்ணலாம்."

வாகனம் நகரின் மத்திய பகுதிக்கு வந்தது. சாப்பாட்டுக் கடைகள், உடுப்புக் கடைகள், விளையாட்டுப் பொருட்கள் விற்கும் கடைகள், பாதணிகள் விற்கும் கடைகள் என ஏகப்பட்ட கடைகள் இருந்தன. வாகனத்தைத் தரிப்பிடம் ஒன்றில் நிறுத்திய அந்த அதிகாரி அது தரித்து நிற்பதற்கான பணம் செலுத்தி ஒரு அனுமதிப் பத்திரத்தை இயந்திரத்திடம் இருந்து பெற்று, அதை வாகனத்தின் முன் கண்ணாடிக்கு உள்ளே வைத்துவிட்டு வந்தார். "TS" இதை முன்பே பார்த்து இருக்கிறார். மற்றவர்களுக்கு இது விசித்திரமாய் இருந்தது. எல்லாவற்றிற்கும் இங்கு இயந்திரங்கள் இருக்கும் என்கின்ற கற்பனை அவர்களிடம் வளர்ந்தது.

அவர் எல்லோரையும் அழைத்துக் கொண்டு ஒரு உடுப்புக் கடைக்குச் சென்றார். அந்தப் புடவைக் கடைக்காரர் அவருக்கு மிகவும் பழக்கம் ஆனவராக இருக்க வேண்டும். அதிகாரியைக் கண்டவுடன் இன்முகத்தோடு வரவேற்றார்.

அந்தக் கடையின் சொந்தக்காரர் ஒரு பெண். அவரோடு இன்னும் இரண்டு பெண்கள் அங்கே வேலை செய்தார்கள். முதலாளியான அந்தப் பெண் ஐம்பது வயது மதிக்கத்தக்கப் பெண்மணி. கறுப்பான தலைமுடி. பெரிய பழுப்புக் கண்கள். மொத்தமான கை கால்கள். நீலத்தில்

அரைப் பாவாடையும் வெள்ளைச் சட்டையும் அணிந்திருந்தார். கழுத்தில் நீல நிறத்தில் துணி ஒன்றைச் சுற்றிப் போட்டிருந்தார். குதி உயர்ந்த பாதணிகள் அவர் பாதங்களில் குதிரை நடப்பதான சத்தத்தைப் பின்னணியில் உருவாக்கிய வண்ணம் இருந்தது. அகண்ட குலையாகத் தொங்கிய அவர் அமுதளித்த மார்புகள். ஊடுருவும் அவர் பார்வை உன் உள்ளத்தைப் படிப்பேன் என்று சொல்வது போல் இருந்தது.

அவரோடு வேலைக்கு நின்ற இரு பெண்களுக்கும் இருபது வயது இருக்கும். இளமை ஊஞ்சலாடும் கன்னிப் பருவம். இருவருக்கும் ஆணை மயக்கும் நீலக் கண்கள். அதில் ஒருத்திக்குப் பொன்னிறக் கேசம். மற்றைய பெண்ணிற்கு அழகிய கருங்கூந்தல். அவள் அந்தக் கருங்கூந்தலைக் குட்டையாக வெட்டி இருந்தாள். பொன்னிறக் கேசம் உடையவளின் நிர்வாண ஆகாயத்தின் நீலமான கண்களில் பட்டுத் தெறிக்கும் ஒளி இதயங்களைச் சுட்டெரித்துச் செல்லும் வலிமை கொண்டதாக இருந்தது. குத்தி நின்ற மார்புகளின் குதர்க்கமான முறைப்பு. அவள் கறுப்பு "Jeans"ம் வெள்ளைச் சட்டையும் அணிந்து இருந்தாள். கறுப்பு முடிக்காரிக்குப் பூனைக் கண்கள். மார்பு இருக்கிறதா இல்லையா என்கின்ற தோற்றம். காதில் அடுக்காகக் காதணிகள். கறுப்பில் உதட்டுச் சாயம். இதழ்களில் சிரிப்பின் கந்தர்வக் கவர்ச்சி. அவர்கள் பையன்களை இன்முகத்தோடு வரவேற்றார்கள். ஆர்வத்தோடு அதிகாரியை நோக்கிய வண்ணம் நின்றார்கள். இது அடிக்கடி நடக்கும் நிகழ்வாய் இருக்க வேண்டும் என்று "TS" எண்ணினார்.

அதிகாரியும் அந்தக் கடை முதலாளியும் அவர்கள் பாசையில் சிறிது நேரம் கதைத்தார்கள். கடையில் வைத்து இருந்த கதிரைகளில் இருக்குமாறு இளைஞர்களுக்கு அந்தப் பெண்கள் ஆங்கிலத்தில் கூறினார்கள். அந்தப் பெண்களின் அழகிய துடிக்கும் கண்களைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்கின்ற எண்ணம் பரமேசிற்குப் பிறந்தது.

யாழ் மாநகரில் புடவை மாளிகைகளுக்குத் திருநா சென்று வந்திருக்கிறான். அங்கே கடைக்காரர்கள் மனிதரில் நம்பிக்கை கொள்ளாத திணிசாக இருக்கும். அதுவும் சாதிக் கண்ணால் பார்க்கும் கொடுமை சன்னமாய் தாக்கும். மனிதர்களை நம்ப முடியாது "Show case"சுகளும் அலுமாரிகளும் இல்லாத புடவைக்

கடைகளைக் காண முடியாது. குலைத்துக் காட்டுவதும் அடுக்கி வைப்பதுமாக அல்லாடும் கூலிகளும், முதலாளிகளும். யாரும் சுட்டுக் கொண்டு செல்கிறார்களோ என்று அவதிப்படும் பார்வை எப்போதும் வாடிக்கையாளரைத் துலாவும். நூறு ரூபாய் பெறுமதியானதிற்கு முந்நூறு ரூபாயில் இருந்தே பேரம் தொடங்கும். நூற்று ஐம்பது ரூபாய் வந்தவுடன் இதற்கு மேல் என்னால் விட்டுத்தர முடியாது, கட்டுபடி ஆகாது, இதுவே நட்டம் என்று ஐம்பது ரூபாய் விலைக்கு மேலே வைத்து விற்றுவிட்டு நஸ்ரப்பட்டதாய் நடிக்கும் கருணை உள்ள முதலாளிகள் அதிகம்.

இந்தக்கடையில் அலுமாரிகள் இருக்கவில்லை. அனைத்து உடுப்புகளும் சுதந்திரமாகத் தொங்கின. யாரும் சுயமாக அவற்றைப் பார்த்து தெரிவு செய்யலாம். அணிந்து பார்க்கும் அறைக்குள் கொண்டு சென்று அணிந்து பார்க்கலாம். இந்தக் கடையின் விசேடம் என்ன என்றால் இங்கு ஆண்களுக்கான உடுப்புகள் மட்டுமே விற்கப்படும். ஆனால் பெண்கள் மட்டும் அங்கு வேலை செய்தார்கள். ஆண்களுக்கான உடுப்பு மட்டும் விற்பது அந்த அதிகாரிக்கு வசதியாகப் போய்விட்டது. எல்லா உடுப்புகளையும் ஒரே கடையில் வாங்குவதால் அலைச்சல் அவருக்கு இல்லை என்கின்ற நிம்மதி. பணத்தைப் பற்றி அவர் கவலைப்படத் தேவையில்லை.

பகுதி பகுதியாக உடுப்புகள் பெரிய வட்டமான நீட்டான தாங்கிகளில் தொங்கின. அவற்றைப் பார்த்துப் பிடித்ததைத் தெரிவு செய்யலாம். அளவாக இருக்கிறதா என்று அணிந்து பார்க்கலாம்.

ஊரில் பொருட்கள் வாங்க வருபவர்கள் கடையை விட்டு வெளியேறும் வரைக்கும் எதையாவது திருடிக் கொண்டு செல்வார்களோ என்கின்ற ஐமிச்சத்தில் கடைக்காரர்கள் உளர்வார்கள். இங்கு பணம் கொடுக்காது பொருட்களை எடுப்பது பாவம் என்பதை வேத வாக்காக்கியது போன்று அவர்கள் யாரையும் சந்தேகப்பட்டதாகத் தெரியவில்லை. அவ்வளவு நம்பிக்கையாக இருக்க வேண்டும் என்பது திருநாவுக்கு விளங்கியது. அவனுக்கு அது வியப்பாக இருந்தது.

"என்ன பெட்டையளைத் தள்ளிக் கொண்டு போகிற நினைப்புப் போல இருக்குது?" திடீரென சிவா பரமேசைப் பார்த்துக் கேட்டான். எல்லோரது பார்வையும் அவர்கள் மேல் படிந்தது. பலரின் உதட்டில் மென்னகை எட்டிப்

பார்த்தது. அவன் என்ன சொன்னான் என்பது விளங்காது பெண்கள் கண்களால் என்ன என்பது போலக் கேட்ட வண்ணம் நின்றனர்.

"அப்பா... நல்ல காலம் எனக்கு... "TS" அண்ணையோடை அறை கிடைச்சது. இல்லாட்டி இந்தக் கடியால சொறி வந்து இருக்கும்." என்றான் நிமலன்.

""TS" அண்ணையின்ரை அறை என்ன இலங்கையிலேயே இருக்குது? நான் உன்னிட்ட வராமலே விடப் போகிறன்?" என்றான் சிவா.

"வாயை வைச்சுக் கொண்டு நான் சும்மா இருந்து இருக்கலாம்." என்றான் நிமலன்.

"புண்ணானப் பிறகு உனக்கு விளங்கி இருக்குது."

அந்த அதிகாரி இவர்களை நோக்கி வந்தார். பின்பு "TS"சைப் பார்த்து,

"உங்களுக்கு மூன்று ஜீன்ஸ், மூன்று ரீசேட், மூன்று சேட், ஆறு ஜட்டி, ஆறு சோடி சொக்ஸ், சமர் ஜெக்கெற், றெயின்கோட் இவ்வளவும் இங்கே தரப்படும். அந்தப் பெண்கள் அளவு பார்த்து உடுப்பு எடுப்பதற்கு உதவி செய்வார்கள். அணிந்து பார்ப்பதற்கு இரண்டு அறைகள் இருக்கின்றன. அனைவரும் அமைதியாக உங்களின் உடுப்புகளைத் தேர்வு செய்யுங்கள். எனக்கு ஒரு அலுவல் இருக்கிறது. நான் அங்கே போய்விட்டு வருகிறேன்." என்று கூறிவிட்டு யாருடைய பதிலையும் எதிர்பாராது அவசரமாக அவர் வெளியே சென்றுவிட்டார்.

பரமேஸ் பச்சையும் சிவப்பும் கலந்த மேற்சட்டையை எடுத்தான். சிவா அதைக் கவனித்து மனதிற்குள் குமுறிக் குமுறிச் சிரித்தான். முதலில் பேசாது எடுக்கட்டும் என்று காத்திருந்த பின்பு அவன் எடுத்து அணிந்து அளவு பார்த்துக் கொண்டு வரும் போது,

"எம்ஜியார்ற்ர கலர் உமக்கு நல்லாக இருக்கும்." என்றான். அதைக் கேட்ட நிமலனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. திருநா தனது கையில் இருந்த மஞ்சள் ரீசேட்டைப் போட்டு விட்டுக் கோப்பி நிறத்தில் ரீசேட் ஒன்றை எடுத்தான். அவன் தனக்கு கடும் நிறம் இல்லாத உடுப்புக்களாய் தெரிவு செய்தான். சாக்குக் கனத்திலும்,

மொத்தத்திலும் "Denim" இருந்தது. இந்தக் குளிருக்கு அது பொருத்தம் என்பது "TS"சிற்கு விளங்கியது.

பதினொரு பேருக்கும் உதவி செய்ததில் அவ்விளம் கன்னிகள் களைத்துப் போனார்கள். எனினும் எதனாலோ சலித்ததாகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. வித்தியாசமான இந்த ஆண்களோடு கதைப்பது அவர்களுக்குப் பிடித்துக் கொண்டது. நாகரிகமாக விலகி நிற்காது, நளினம் காட்டாது, உதவி கேட்டது அவர்களுக்கு அதனிலும் பிடித்துக் கொண்டது. உதவி செய்யும் போது நான் என்கின்ற ஆணவம் சிறிது விலகிக் கருணை சுரக்கிறது.

பரமேஸ் அந்தக் கருணையில் மயங்கி "உன் நீலக் கண்கள் அழகாக இருக்கிறது." என்று தட்டுத் தடுமாறி ஆங்கிலத்தில் பொன்னிறக் கேசக் காரிக்குக் கூறினான். அவளும் வெட்கப்பட்டு நன்றி கூறினாள். அதைப் பார்த்துக் கொண்டு நின்ற சிவா உடனே,

"ஏன் கறுத்தக் கண்ணைப் பார்த்துச் சலிச்சுப் போச்சுது போல இருக்குது?" என்றான்.

"ஒரு பேச்சுக்கு வாய் திறக்க விடமாட்டியே சிவா?" என்றான் பரிதாபமாகப் பரமேஸ்.

"உந்த வசனத்தை நிமலன் சொல்லி இருக்கலாம். உமக்கு உது ஒத்து வராது எண்டு தெரியாதே?" என்றான் சிவா.

"ஐயோ நான் இனிச் சொல்ல இல்லை. என்னச் சும்மா விடுகிறியா?"

"சிவாவின்ரை கண் எப்பவும் விழிப்பாக இருக்கும்."

"விளங்குது." என்றான் பரமேஸ்.

"என்ன நீங்கள் உங்கடை மொழியில கதைக்கிறியள்?" என்று கறுப்பு முடிக்காரி கேட்டாள்.

"ஒன்றும் இல்லை... அவங்கள் சும்மா தங்களுக்கு உள்ள பகிடி பண்ணுகிறாங்கள்."

"ஒ அப்படியா?" என்றுவிட்டு அவள் நிமலனை அழைத்துக் கொண்டு "Denim" பகுதிக்குள் சென்றாள்.

ஒருவாறு பதினொரு பைகள் நிறைமாதக் கர்ப்பிணிகள் ஆகின. செலவினப் பட்டி அடிக்கப்பட்டு ஒரு பாதி பைகளுக்குள் வைக்கப்பட்டது. மறு பிரதி பத்திரமாக எடுத்து வைக்கப்பட்டது. அதில் மேலும் ஒரு பிரதி தயாரித்து அதிகாரியிடம் வழங்குவதற்குத் தயாராக வைத்து இருந்தார்கள்.

ஐந்து நிமிடம் சென்று இருக்கும்,

"மன்னிக்க வேண்டும்." என்று கூறிய வண்ணம் அதிகாரி கடைக்குள் அவசரமாகப் புகுந்தார். முதலாளியோடு கதைத்துப் பிரதி செலவினப் பட்டியை வாங்கிக் கொண்டு "போகலாமா?" என்றார். எல்லோரும் ஆம் என்ற வண்ணம் தங்களது பைகளைத் தூக்கிக் கொண்டனர். அதன் பின்பு அவர்கள் சப்பாத்துக் கடைக்கும் செல்ல வேண்டி இருந்தது.

அணைக்க முடியாத நெருப்பாக அமிலச் சுரப்பு அனைவரது வயிற்றிலும். மத்தியானம் பதினொரு மணிக்கு மத்தியானச் சாப்பாடு வைக்கப்படும். பிந்தி வந்ததால் அதை அவர்கள் எடுத்து விட்டார்கள். சாப்பிடுவதற்குக் குடலிற்கு குடலைத் தவிர எதுவும் இருக்கவில்லை. களைப்பிற்கும் பசிக்கும் பிராயச்சித்தமாகச் சிலர் பழரசத்தை எடுத்துப் பருகினர். சிலர் தேநீர் தயாரித்துப் பருகினர்.

இவர்கள் நான்கு முறை சாப்பாடு வழங்குகிறார்கள். காலைச் சாப்பாடு ஏழு மணிக்குத் தொடங்கிப் பத்து மணிக்கு முடிந்துவிடும். பின்பு மத்தியானச் சாப்பாடு பதினொரு மணிக்குத் தொடங்கி ஒரு மணி போல முடிந்துவிடும். பிரதான சாப்பாடு நான்கு மணிக்குக் கொடுப்பார்கள். இரவுச் சாப்பாடு ஏழு மணிக்கு வைப்பார்கள். இந்த ஒழுங்கு "TS"சிற்கு ஏற்கனவே பழக்கமானது என்றாலும் பெடியளுக்கு இது புதிதாகவே இருந்தது. மூன்று நேரமே சாப்பிட்டப் பழகியவர்களுக்கு இப்போது நான்கு நேரம் இராஜ போகச் சாப்பாடு கிடைத்தது. உறைப்புப் புளிப்பு இன்னும் அவர்களுக்கு முழுமையாகப் பிடிபடவில்லை. மூன்று நேரம் மட்டும் மூக்கு முட்டியதாக இல்லாது நான்கு நேரம் சிறிய சாப்பாடாய்ப் பிரித்துச் சாப்பிடுவது உடல் நலத்திற்கு நன்மை என்பதால் அவர்கள் அப்படிச் செய்து இருந்தார்கள் என்பதை "TS" அறிந்து வைத்திருந்தார். அதற்காக நான்கு நேரமும் மூக்கு முட்டப் பிடிப்பவர்களும்

சளைத்துவிடவில்லை. "TS" இளைஞர்களுக்கு அதைப்பற்றிக் கூறினார்.

அன்று பசி இருந்ததிற்கு நல்ல சாப்பாடு கிடைத்தது போல இருந்தது. அந்தச் சாப்பாட்டின் பெயர் என்னவோ 'பிக்சா' என்று அவர்கள் மொழியில் கூறினார்கள். அது இத்தாலியரின் பிரபலமான சாப்பாடு. மிகவும் சுவையாக இருக்கும் என்று "TS" இளைஞர்களுக்குக் கூறினார். அந்தச் சாப்பாட்டிலும் உறைப்பு இருக்கவில்லை. என்றாலும் அது நல்ல சுவையாக இருந்தது. இப்படியான சாப்பாடு என்றால் கவலை இல்லாது வாழலாம் என்று பலரும் எண்ணினார்கள்.

சாப்பாடு முடியவும் அந்த அதிகாரி வந்தார். அவர் "TS"சிடம் வந்து,

"நாளை உங்களுக்கு விசாரணை ஆரம்பம் ஆகும். யாருக்கு மொழி பெயர்ப்பாளர் வேண்டும் என்று நீங்கள் கேட்டுச் சொல்ல வேண்டும்" என்று கூறினார்.

"யாருக்கு மொழி பெயர்ப்பாளர் வேண்டும்?' என்று "TS" கேட்டார். எல்லோரும் கை உயர்த்தினார்கள்.

"உங்களுக்கு வேண்டுமா?" என்று அந்த அதிகாரி "TS"ஐப் பார்த்துக் கேட்டார். "TS" சிரித்து விட்டு,

"தேவை இல்லை" என்றார்.

# 9 விசாரணை

பத்து நபர்களும் "TS"சைப் பார்த்த வண்ணம் அந்த அறைக்குள் குழுமி இருந்தனர். "TS" எழுந்து காலதரைச் சிறிது திறந்துவிட்டார். சிவாவிற்கு இந்த மந்திர ஆலோசனை தேவை இல்லை என்கின்ற எண்ணம். உண்மையைச் சொல்ல வேண்டும். உண்மையைவிட உத்தமமானது எதுவும் கிடையாது என்பது அவனுடைய ஆன்மா கூறிய அசைக்க முடியாத தெளிந்த தெளிவு. அவனால் பொய் பேசும் மனிதர்களின் மனச் சாட்சியை விளங்கிக் கொள்ள முடிவது இல்லை. பொய் சொல்வதால் மற்றவர்களை நிரந்தரமாக ஏமாற்றிவிட முடியாது என்பது அவன் ஞானம். குறுகிய காலத்திற்கு உண்மைக்குப் பொய் திரை போடலாம். உண்மை என்பது உக்கிரமான உள்ளத்துக் குமுறல். அது எரிமலை போல, புயலைப் போல, பொங்கும் கடலைப் போல, அது எழுந்து ருத்திர தாண்டவம் ஆடும் போது பொய் திரைகள் சீலம்பாய்களாகக் கிழிந்து போய்விடும். பொய் சொல்லும் மனிதர்கள் தங்களை மேதாவிகள் என்று நினைத்துக் கொள்ளலாம். மற்றவர்களை முட்டாள் ஆக்குவதாய் கற்பனையில் வாழலாம். அது நிரந்தரமற்ற வாழ்க்கை. பொய் நிலையற்ற மாயை என்பதை அறிந்து கொள்ள முடியாதவர்கள் எப்படி மேதாவிகளாய் இருக்க முடியும்? பொய் சொல்லி அதைக் காப்பாற்ற இன்னும் ஆயிரம் பொய் சொல்லி, மானத்தை இழந்த பின்பு, மானம் இருப்பதாய் எண்ணிப் பயந்து பயந்து சஞ்சரிப்பது சிவாவிற்கு அறவே பிடிக்காது. உண்மை சொல்ல வேண்டும். அதுவும் நெஞ்சை நிமிர்த்திச் சொல்ல வேண்டும். எதற்கு இந்த மந்திர ஆலோசனை? பொய் சொல்லுவதற்கா?

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த

நன்மை பயக்கும் எனின்?

என்று எதற்கு வள்ளுவர் சொன்னார்? குற்றமற்ற நன்மையைத் தரும் என்றால் உண்மை சொல்ல வேண்டிய இடத்தில் பொய் சொல்லலாமா? அரிச்சந்திரனின் தியாகத்திற்கும் வள்ளுவரின் அறிவுரைக்கும் எது பாலம்? வள்ளுவர் நடைமுறையைப் விளங்கிக் கொண்ட

தீர்க்கதரிசியா? மேடையில் நடிப்பாக, பொய் சொல்லாதே என்று புத்தி புகட்டுவதான கதை மட்டும்தானா அரிச்சந்திரன் என்கின்ற கதாப்பாத்திரம்?

நன்மைக்காகப் பொய் சொல்லுபவனிடமா, அல்லது நல்லதோர் வாழ்வு போனாலும் பொய் சொல்லேன் என்பவனிடமா நிம்மதி இருக்கும்? இந்தக் காலத்தில் பொய் வாழ்வின் ஒரு அங்கமாகிறது. பொய் சொல்லாத மனிதர்களைத் தேடிப் பிடிக்க வேண்டி இருக்கிறது. அதற்காக உண்மை பேசுவதில் இருக்கும் சுகத்தை, சுதந்திரத்தை, திருப்தியை, துணிவைப் பொய் தந்துவிடாது. யாருக்கும் எதற்கும் நான் பயப்படத் தேவை இல்லை. இந்த விசாரணையில் உண்மை சொல்ல வேண்டும்.

தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்

தன்நெஞ்சே தன்னைச் சுடும்.

என்பது போல நான் பொய் சொல்ல முடியாது. அது மனம் என்னும் புழுவை நெருப்பில் நித்தம் இடும் தவிப்பாகும். ஆறா வேதனையாகும். எனக்கு அந்தத் தவிப்பும் வேதனையும் தேவை இல்லை. உண்மையும் சுதந்திரமும் என்னுடைய ஆன்ம வரப்பிரசாதம். அதை யாரும் என்னிடம் இருந்து பிடுங்கிவிட முடியாது. அதை எதற்காகவும் நான் இழக்கவும் தயாராக இல்லை. என்னை இலங்கைக்கு அனுப்பும் சத்திய சோதனை வந்தாலும் உண்மை மட்டுமே சொல்வது என்பது மாறாது. உண்மை சொல்வதற்கு இங்காவது மதிப்பு இருக்கிறதா என்று பார்த்துவிட வேண்டும் என்பதாகச் சிவா எண்ணினான்.

"அண்ண நாளைக்கு விசாரணையாம். எனக்குப் பயமா இருக்குது அண்ணை. நாங்கள் என்ன சொல்ல வேணும் எண்டு தெரிய இல்லை. பிழையாச் சொல்லிக்கில்லி திருப்பி அனுப்பிப் போட்டாங்கள் எண்டா எங்கடை வாழ்க்கையே முடிஞ்ச மாதிரிப் போயிடும். இங்க என்ன சொல்ல வேணும் ஏது சொல்ல வேணும் எண்டு ஏஜென்சி சொல்ல இல்ல. எதோ நாங்கள் யோசிச்சுச் சொல்ல வேணும்? என்னத்தைச் சொல்லுகிறது எப்பிடிச் சொல்லுகிறது எண்டு தெரியவும் இல்ல." என்றான் றூபன்.

"நாட்டில எப்பவும் பயம் தானே? ஆமி எங்களை எங்க கண்டாலும் சுடுவாங்கள் தானே? அதைவிட நேவி கடலுக்குப் போனா அடிப்பாங்கள், சுடுவாங்கள், வெட்டுவாங்கள். வலையைத் தாறுமாறா அறுப்பாங்கள்.

ஒவ்வொரு நாளும் உயிரோடை இருப்பமோ இல்லையோ எண்டுகிறது தெரியாமல் கடலுக்க இறங்குவம். உயிருக்கு எங்க உத்தரவாதம் இருக்குது? அதுதானே நாங்கள் இங்க வந்திருக்கிறம். எந்தப் பக்கம் திரும்பினாலும் இயமன்களா இருக்கிற நாட்டில எப்பிடி வாழ முடியும்?" என்றான் திருநா.

"ஆமியே எங்கடை பிரச்சனை எண்டது இவங்களுக்கும் தெரியும் தானே? பிறகென்ன விசாரணை வைக்கிறாங்கள்? நாங்கள் ஆமியின்ரை பிரச்சனை இல்லாட்டி நாட்டை விட்டு இங்க வந்து இருப்பமே?" என்றான் பரமேஸ்.

"அப்ப வேலை செய்து காசு அள்ளிக் கொண்டு போகிறது எண்டா வந்திருக்க மாட்டியள்? பொதுவா நாட்டில பிரச்சனை இருக்குது. அதுக்காக நாங்கள் புல்டா விடாமலும் இல்லை." என்றான் சிவா.

"சும்மா இரும் சிவா. உண்மையே சொல்லப் போகிறம். அதைக் கொஞ்சம் மிகைப்படுத்திச் சொல்லப் போகிறம். அப்பதான் திருப்பி அனுப்ப மாட்டாங்கள். திரும்பிப் போனாலும் நாலாம் மாடியில வைச்சுச் சித்திரவதை செய்து கொல்லுவாங்கள் எண்டதை நீர் மறுப்பீரா? அது மாத்திரம் எப்பவும் யாருக்கும் மாறாது." என்றான் பரமேஸ்.

"நாங்கள் பிரச்சனை இல்லாமல் இங்க வரேல்லை. ஆனா... அந்தப் பிரச்சனையை ஒழுங்கா இவங்களுக்கு விளங்கப்படுத்த வேணும். எங்கடை பிரச்சனை இவங்களுக்கு விளங்காட்டி எங்களுக்குப் பிரச்சனை இல்லை எண்டு நினைப்பாங்கள். அதுக்குப் பரமேஸ் சொல்லுகிற மாதிரி கொஞ்சம் இட்டுக்கட்டுகிறது பிழை இல்லை. பொய்யும் நன்மை பயக்கும் எண்டா அதைச் சொல்லலாம் எண்டு வள்ளுவரே சொல்லி இருக்கிறார். நாங்கள் சொல்லுகிற பொய்யால யாருக்கும் பங்கம் வராட்டி அதில தப்பில்லை. எங்களுக்கு இங்க அகதி அந்தஸ்துக் கிடைச்சா நிறையப் பேருக்கு நன்மையா இருக்கும். அப்படிப் பலர் நன்மை அடையக் கொஞ்சம் உண்மைக்கு விஸ்வரூபம் கொடுக்கிறது தப்பில்லை எண்டு நான் நினைக்கிறன்." என்றார் "TS".

"அண்ணை உண்மைக்கு ஏது விஸ்வரூபம்? ஊதிப் பெருக்கிறம் எண்டிட்டு எல்லாரும் தாங்கள் தான் துரையப்பாவைச் சுட்டது எண்டு புல்டா விடப் போகிறாங்கள். ஏற்கனவே கனபேர் துரையப்பாவைச்

சுட்டது எண்டு உரிமை கோரி இன்ரப்போல் தலையைப் பிய்க்குதாம். இப்ப இவையும் சொன்னா அவங்கள் எந்த உலகத்தில உண்மையைத் தேடுவாங்கள்? துரையப்பா ஒரு தியாக புருசன் எண்டு சொல்ல வேணும். எத்தினைபேர் அவரைக் கொண்டு தங்களை வாழ வைக்கிறாங்கள்?" என்றான் சிவா. அதைக் கேட்டுப் பலரிடம் குறுநகை ஒன்று வெடித்து மூடியது. "TS" அதைச் சமாளித்த வண்ணம்,

"அப்பிடி எல்லாம் பெடியள் புழுக மாட்டாங்கள். தாங்கள் பாதிக்கப் பட்டதை தனித்துவமா மெருகு ஏற்றிச் சொல்லுவாங்கள். எனக்கு அந்த நம்பிக்கை இருக்குது. அப்பிடிச் சொல்லுகிறது உத்தமம் எண்டு நினைக்கிறன். நாட்டில மலிஞ்சு கிடந்த சாக்கள், கொலையளை நாங்கள் காணாமல் இல்லை. அதை ஒழுங்காச் சொன்னாலே போதும். திருப்பி அனுப்பினா என்ன நடக்கும் எண்டதையும் சொல்லலாம். அது எல்லாருக்கும் ஒண்டு தான்." எனக் கூறினார்.

"அப்பா, அம்மா, குடும்பம் பற்றி என்ன சொல்லுகிறது அண்ணை? அம்மா, சகோதரங்கள் ஊரில இருக்கினம் எண்டா திருப்பி அனுப்பிப் போடுவாங்களோ தெரியாது. நீங்கள் என்ன சொல்லுகிறியள் அண்ணை?" என்றான் சுபத்திரன்.

"நானும் உங்களை மாதிரி தானே தம்பி? என்னப் பொறுத்த வரையிலும் சில விஷயங்களாவது உண்மையா இருக்க வேணும் எண்டு நினைக்கிறன். அது எதிர் காலத்துக்கும் நன்மையா இருக்கும். ஏன் நாட்ட விட்டு வரவேண்டி வந்தது எண்டதை மாத்திரம் பொலிஸ் பண்ணிப் போட்டு மற்றதுகள் அனேகம் உண்மையைச் சொல்ல வேணும் எண்டு நினைக்கிறன்." என்றார் "TS".

"அண்ணை ஆமி மாத்திரம் எங்களுக்குப் பிரச்சனை இல்லை. எனக்கு அப்பிடிதான். நான் என்ரை பக்கத்து உண்மையைச் சொல்ல வேணும் எண்டு நினைக்கிறன். நீங்கள் என்ன நினைக்கிறியள் அண்ணை?" என்றான் அருளன்.

"ஐயோ தம்பி இதை எல்லாம் என்னிட்டக் கேட்டுக் கொண்டு. நானும் உங்களோடைதான் வந்து இருக்கிறன். உங்கடை மனதுக்கு எது பிரச்சனையாப் படுகுதோ அதைச் சொல்லுங்கோ. நிதானமா யோசிச்சு உறுதியாச்

சொல்லுங்கோ. மற்றது எல்லாம் அவங்கடை கையிலதானே?" என்றார் "TS".

"அங்க தேடுகிறாங்கள். பிடிச்சாக் கொலை செய்து போடுவாங்கள். அதால நாங்கள் நாட்டை விட்டு வெளியேறி வந்தம் எண்டால் அகதி அந்தஸ்து தருவாங்களாம். இல்லாட்டித் திருப்பி அனுப்பினாலும் அனுப்பிப் போடுவாங்களாம் எண்டு எனக்குப் பிறாண்சில இருக்கிற அண்ணா சொன்னார்." என்றான் சொரூபன்.

"ஒவ்வொரு நாட்டில ஒவ்வொரு மாதிரியா இருக்கும். நோர்வே இரக்கமான நாடு எண்டு சொல்லுகினம். அதால பெரிசா நோண்டாமல் அசூல் தருவினமாம்." என்றான் குலம்.

"ரான்சிலேற் பண்ண வாறவரிட்டையும் கேட்கலாம் எல்லோ? அவரும் உதவி செய்வார் எண்டு நினைக்கிறன். ஏற்கனவே படிக்க வந்தவை ரான்சிலேற்றராய் இருக்கினமாம். எப்பிடி எண்டாலும் தமிழருக்குத் தமிழர் உதவி செய்வினம் தானே?" என்றான் ரூபன்.

"அது என்ன? சொல்லப் போகிற பொய்க்குத் தமிழருக்குத் தமிழர் தேசிய உதவி வேறையே? இரண்டு பகுதியாலும் இலங்கையில பிரச்சனை இருக்குது. இரண்டுக்கையும் போகாமல் மதில் மேல் பூனையா சூடு காய்ஞ்சவையும் இதில வந்து இருக்கிறியள். அந்த மதில் மேல் பூனையளுக்கு நிச்சயம் பொய் தேவைப்படும். என்னைப் பொறுத்தவரையிலும் எனக்கு எந்தப் பொய்யும் தேவை இல்லை. நான் ஏன் இங்க வந்தன், எதுக்காக இங்க வந்தன் எண்டதைத் துணிவா எனக்குச் சொல்லத் தெம்பு இருக்குது." என்றான் சிவா.

"அதுக்கு என்ன சிவா? எங்கடை தெளிவு எங்களுக்கு. அதே நேரம் உள்ளதை எல்லாம் வைச்சு வந்தவங்கள் உய்கிறதுக்கு உதவியா இல்லாட்டியும் உபத்திரபம் கொடுக்காமல் இருப்பமே?" என்றான் சொரூபன்.

"யார் இல்லை எண்டுகிறது. யாராவது பிழைச்சுப் போகட்டும். எனக்குப் பொய் சொல்லத் தேவை இல்லை எண்டு மட்டும் நான் சொன்னான்." என்றான் சிவா.

"அது மாத்திரம் இல்லைச் சிவா. உம்ம மாதிரி ஆட்கள் மற்றப் பெடியள் பிழைக்கிறதுக்கும் புத்தியா இருக்க

வேணும். நாடு விட்டு நாடு வந்து இருக்கிறம். இங்க நாங்கள் ஒற்றுமையா இருக்க வேணும். அடம்பின் கொடியும் திரண்டால் மிடுக்கு எண்டுவினம்... அதை மாதிரி ஒற்றுமையா நாங்கள் எல்லாரும் நல்ல முறையில இந்த விசாரணையில இருந்த வெளிய வரவேணும். உம்முடைய சீண்டல் வேறை, உம்முடைய மனசு வேறை எண்டுகிறது எனக்கு நல்லாத் தெரியும். அதே நேரம் உண்மை சொல்ல வேணும் எண்ட உம்முடைய பண்பும் எனக்குப் பிடிக்கும்." என்றார் "TS".

"அண்ணை நீங்கள் ஆகத்தான் என்னத் தூக்கிக் கொப்பில வைக்கிறியள். தலையில கணக்கு இல்லாமல் கொட்டின ஐஸ்சில நான் உறைஞ்சே போயிட்டன். சரி இனித் தனித் தனிய அறைக்கையும் மந்திர ஆலோசனை நடத்தலாம் தானே? நடத்தி நல்லாப் பிழைக்கிற மாதிரிச் சொல்லுவம்." என்றான் சிவா.

"சிவா நான் உம்ம உச்சியில ஏத்த இல்லை. உம்மிட்டை உண்மை இருக்குது எண்டுகிறது எனக்குத் தெரியும்."

"நன்றி அண்ணை."

அதன் பின்பு சிறிது நேரம் கதைத்துக் கொண்டு இருந்துவிட்டு அவரவர் அறைக்குப் போனார்கள். பரமேஸ், குலம், சண்முகம், நிமலன், சுபத்திரன், றூபன், திருநா ஆகியோருக்கு இலங்கை இராணுவத்திலும், கடற்படையிலும் வெறுப்பும், பயமும் இருந்தது. தமிழனாய் பிறந்த ஒவ்வொருவனுக்கும் இருந்த கவலை அது. இலங்கையில் தொடர்ந்து வாழ்ந்தால் அவர்களால் எப்போதாவது ஒரு நாள் உயிர் போகும் என்கின்ற அச்சம் நித்தம் அலைக்கழித்தது. சுற்றி வளைக்கும் போது, தொழிலுக்குப் போகும் போது, அல்லது கெலியில் தேடிக் கொண்டு சுட்ட வண்ணம் போகும் போது, குண்டு விழும் போது, செல் அடிக்கும் போது என்று உயிருக்குத் துளியளவும் உத்தரவாதம் கிடைக்காத பொழுதுகள் ஏராளம். அதற்காகக் குறிப்பாக யாரும் இராணுவத்தால் தேடப்படவில்லை. ஒரு பக்கமும் ஒட்டாது தானும் தன்பாடும் என்கின்ற மதில் மேற் பூனையின் வாழ்க்கையாக இருந்து விட்டதால் இவ்வளவில் உயிர் தப்பி இருக்கிறது. இங்கு அதற்கு நிரந்தர, நிம்மதியான வாழ்வு கிடைக்க வேண்டும் என்றால் தேடப்படுகிறோம் என்று திரித்துக் கூற வேண்டியது அவசியம் ஆகிறது. அதில் எந்தத் தப்பும் இருப்பதாக அவர்களுக்குத்

தோன்றவில்லை. இலங்கை அரசே அப்பாவிகளைக் கொன்றுவிட்டு பயங்கரவாதிகளைக் கொன்றதாக வானொலியில் கதைவிடுவதை எத்தினை தரம் கேட்டு இருக்கிறார்கள். அப்படி ஒரு நாட்டின் அரசே தனது சொந்த மக்களைக் கொன்றுவிட்டு பயங்கரவாதிகள் என்று சொல்லும் போது, எந்தப் பாதகமும் இல்லாத இந்தச் சிறிய திரிபைச் சொல்வதில் எந்தத் தப்பும் இல்லை என்று அவர்கள் எண்ணினார்கள். அதையே உரமாக, உறுதியாகச் சொல்ல வேண்டும் என நினைத்தனர். அதை எப்படிச் செய்வது என்கின்ற எண்ணத்தில் அவர்கள் தங்கள் அறைக்குள் அடைந்து, தப்பியோட வழி தேடிப் பழகிப் போன மூளையை இன்று எதிர்த்துப் பதில் அளிப்பதற்குக் கசக்கல் ஆகினர். நாளைக்கு யாரை விசாரணைக்கு அழைப்பார்கள் என்பது அவர்களுக்குத் தெரியாது. படித்துவிட்டுப் பரிட்சைக்கு காத்திருக்கும் மாணவர்களின் பதட்டத்தில் அவர்கள் பொழுது கலக்கத்தோடு கழியல் ஆகிற்று. இந்தப் பரீட்சையில் வெற்றியைத் தவிர வேறு எதையும் எதிர்கொள்ள முடியாது. அப்படி நடக்காவிட்டால் அசோகவனத்தை அனுமன் காணாதது போல் கதை கந்தலாகி விடும்.

தமிழனாய் பிறந்தாலோ அல்லது சிங்களவனாய் பிறந்தாலோ இலங்கையில் எதிரி இனத்தால் மட்டும் பாதிப்பு என்று இல்லை. சொந்த இனத்தில் பிறந்த சகோதரர்களே தங்களுக்கு அநியாயம் செய்தார்கள் என்று குமுறும் ஒரு பகுதியும் இருந்தார்கள். தங்களுக்கு இராணுவம் அல்லத் துப்பாக்கி தாங்கிய தமிழர்களே ஆபத்தை விளைவித்தார்கள், விளைவிக்கக் காத்து இருக்கிறார்கள். அத்தால் தாங்கள் நாட்டை விட்டு வெளியேற வேண்டியது ஆகிற்று என்கின்ற உண்மையை அவர்கள் கூறப் போகிறார்கள். அவர்கள் நாட்டில் இருந்தால் சகோதரக் கொலைக்கு உள்ளாக வேண்டும் என்பதாலேயே தாய் நாட்டைத் துறந்து, அகதிகளாய் இங்கு வந்ததாய் சொல்லத் தயார் ஆனார்கள். சிங்கள இராணுவத்தால் இருக்கும் ஆபத்து பொதுவானது. சகோதர எதிரி என்பது குறிப்பானது. உங்களுக்கு வாழவோ அல்லது போராடவோ உரிமை இல்லை என்று வகுத்தது மட்டும் இல்லாது, சந்தேகத்தில் உயிரைக் குடிக்கும் சகோதரக் கொலை வேட்டையில் இருந்து தப்புவதற்காய் நாட்டை விட்டு நாடு வந்தோம் என்று கூற அவர்கள் தயாரானார்கள். நீங்கள் பாதுகாப்பாய் கொழும்பில் நிற்கலாம் அல்லவா என்கின்ற கேள்வி வரும் என்பதும்

அவர்களுக்குத் தெரியும். கொழும்பிலும் சகோதரக் கொலை நடக்கிறது. அதே நேரம் இலங்கை இராணுவமும் சந்தேகத்தில் அள்ளிச் சென்று பூசாவில் அடைத்துவிடும் என்கின்ற யதார்த்தமும் அங்கு இருக்கிறது என்பதை அவர்கள் சொல்லத் தயார் ஆனார்கள். இந்தியாவை விட்டு எதற்கு இங்கு வந்தீர்கள் என்று கேட்டால் அங்கும் சகோதரக் கொலை அல்லது சொந்த இயக்கத்தின் நச்சரிப்பு நாளையளவில் ஆபத்தில் சிக்க வைக்கும் என்கின்ற உண்மை விளங்கியதால் சமாதானம் பேசும், சமத்துவம் நிலைக்கும் நாடான நோர்வேயைத் தேடி வந்ததாக அவர்கள் கூறுவதற்குத் தயார் ஆனார்கள்.

சிவாவின் மனதில் பழைய நினைவுகள் வந்து போயின. வருத்தக் காரரின் முகாமைச் சுற்றி வளைத்துச் சுட்டுக் கொன்றது அவன் நெஞ்சை இன்றும் அதே கூர்மையோடு அறுத்தது. இலங்கை இராணுவம் அவன் கண்ணுக்கு எப்போதும் தெரிந்த எதிரி. சகோதரங்கள் என்று நினைத்த இவர்கள் உயிரோடு எரியூட்டுவார்கள் என்று அவன் கனவிலும் எண்ணி இருந்தது இல்லை. அது நடந்த போது அதில் இருந்து தப்பிப்பதற்கு அவன் பட்ட பிரயத்தனம்… நல்ல சில மனிதர்கள், நல்ல சில ஊர்கள் யாழ்ப்பாணத்தில் இருந்ததால் அன்று தனது உயிர் தப்பியது என்பது அவனுக்குத் தெரியும். உண்மை சொல்ல வேண்டும். யாருக்குப் பயந்து இங்கு ஓடி வந்தேன் என்கின்ற உண்மையைச் சொல்ல வேண்டும். அந்த உண்மையை இவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று அவன் நம்பினான்.

சிவாவைவிடச் சொரூபன், அருளன் ஆகியோரும் துருவங்கள் இணைந்தாலும் இணைய முடியாத வெறுப்பைச் சகோதரங்களால் தளத்தில் பெற்று இருந்தனர். பூனைக்கும் எலிக்குமான அந்தப் போராட்டத்தில் அடிக்கடி பூனைக்கும் எலிக்குமான பாத்திரம் மாறிக் கொண்டு இருந்தது. நாடு என்கின்ற யாகத்திற்குச் செல்வதாய் நான் என்கின்ற அகங்காரத்தில் அழிகின்ற கதை. அவர்கள் பூனைகளாக மாறிக் கிழித்த கிழிப்புக்களை மறக்க முடியாது. அது மறக்க முடியாதது மட்டும் அல்ல அதை யாரிடம் ஆவது இறக்கி வைக்க வேண்டும் என்பதற்கு விசாரணை பொருத்தமான இடமாக இருந்தது. வேறு சந்தர்ப்பம் விரைவாக வரப் போவது இல்லை. மற்றவர்களைப் போல இவர்கள் பயப்படவில்லை. தங்கள் உண்மைகள் வலுவானவை என்பதையும், அதை இவர்கள் நம்பித் தங்களுக்கு அகதி அந்தஸ்துத்

தருவார்கள் என்பதையும் அவர்கள் நம்பினார்கள். மனதில் இருப்பதை மற்றைய தமிழர்களிடமும் கொட்ட வேண்டும் என்கின்ற ஆவல். அப்படிச் செய்தால் அதை விளங்கிக் கொள்ளாது வெறும் மனஸ்தாபத்தையே வளர்த்துக் கொள்வார்கள் என்று எண்ணி அடக்கி வாசித்தார்கள்.

அப்படி இருந்தும் சிவா தனது ஆற்றாமையை யாருக்கும் பயப்படாது அடிக்கடி நக்கலாகச் சொல்லிக் கொள்வான். அவனோடு அரிகண்டப்பட மற்றவர்கள் விரும்பாது விட்டாலும் அவர்களிடம் அந்தக் கருத்திற்கு மூர்க்கமான எதிர்க் கருத்து குமுறலாய் இருந்தது. வீர வித்துக்களை, ஈழத்தின் விடுதலைப் போரைக் கொச்சைப் படுத்துவது துடிக்க வைத்தது. தமிழ்த்தேசியம் கோப அனலாக மனதில் இடைவிடாது பொங்கி வெடிப்பதற்குத் தயாராகக் குமுறியது. அது பேசுவது எங்கள் உரிமை என்று எழுந்து நின்றது. இருந்தும், இப்போது அவற்றை அடக்கி வைத்து, வந்த அலுவலைப் பார்க்க வேண்டும் என்பதே எல்லோருடைய பிழைக்கும் எண்ணம் ஆகிற்று. அறைக்குள் அடைந்து கொண்டவர்கள் தமது ஆலோசனையைத் தொடர்ந்தார்கள். சூரியனை மையமாக வைத்துச் சுற்றும் பூமி இரவை விழுங்கிப் பகலை பிரசவிக்கத் துடித்தது.

*

வெள்ளி ஊசிகள் வெண் பனியைத் துளைப்பதாகச் சூரியக் கதிர்களின் சுர் என்கின்ற ஏற்றம். கண்ணைத் திறக்க முடியாது குருடாக்கும் அதன் கூர்மை. கறுப்புக் கண்ணாடி அணிவது ஒருவித கௌரவ மறைப்பு என்று எண்ணும் மாந்தர்கள் பலர். இங்கே சரிந்த வெள்ளி ஊசிகளாக ஏறும் ஆதவக் கதிரை எதிர்ப்பதற்கு மனிதனிடம் உள்ள ஒன்று அது மட்டுமே. ஆதவனின் அந்தப் பிரசன்னத்தால் படுக்கையை விட்டு எழுந்து, அலுப்போடு காலைக் கடனை முடித்து, காலைச் சாப்பாட்டையும் சாப்பிட்ட பின்பு, அவர்கள் பரிட்சைக்காகக் காத்து இருந்தார்கள்.

பரமேசை முதலில் விசாரணைக்கு அழைத்தார்கள். உள்ளே தமிழ் மொழி பெயர்ப்பாளர் இருந்தாராம். கண்ணாடி அணிந்திருந்த அவர் இலங்கை இராணுவத்தால் பிரச்சனை என்பதைப் பற்றிக் கூறுவது உங்களுக்கு நன்மை பயிர்க்கும் என்று அறிவுரை கூறினாராம். பரமேசுக்கும் அதுதான் அனுபவமாக இருந்தது. அதுவே

அவனுக்குச் சரியாகப் பட்டது. தான் தொழிலுக்கு போய் வரும் போது எப்படி கடற்படையினால் பாதிக்கப்பட்டேன் என்று விரிவாகச் சொன்னானாம். மச்சானோடு கள்ளுக் குடித்து விட்டுப் பிரச்சனைப்பட, அவன் வீட்டிற்குச் சென்று பாழைக் கத்தியை எடுத்து வந்து பரமேசின் முதுகில் செல்லமாய் கீறியதை கடற்படை கீறியது என்று இட்டுக்கட்டி உரைத்தானாம். அந்த அதிகாரியும் தழும்பை அவதானமாய் பார்த்தாராம். யாழ்ப்பாணத்தில் தொழில் செய்ய முடியாது. அத்தோடு அங்கு வாழவும் முடியாது என்பதால் இங்கு வந்ததாகவும் கூறினானாம். இப்படியாகத் தான் கூறியதையும் அதிகாரி கேட்டதையும் பெரிய கதையாகச் சொன்னான் பரமேஸ் என்கின்ற பாம்பன். பரமேஸ் தனக்கு பாம்பன் என்கின்ற பட்டப் பெயர் இருப்பது பற்றி யாரிடமும் கூறியது இல்லை. சிறுவயதில் பாடசாலை செல்லும் போது வழியில் கிடக்கும் சாணத்தை உழக்காமல் வளைந்து வளைந்து செல்வானாம். அதைப் பார்த்த சக மாணவர்கள் அவனைப் பாம்பன் என்று அழைக்கத் தொடங்கி விட்டார்கள். பரமேஸ்வரன் என்கின்ற பெயருக்குப் பாம்பன் என்பது சுருக்கம் ஆகவும் பொருத்தம் ஆகவும் அமைந்து விட்டது. என்றாலும் பரமேஸ் தானாக யாரிடமும் வாய்திறந்து அப்படி ஒரு பெயர் இருக்கிறது என்று சொல்வது இல்லை. விசாரணை முடிந்ததில் அவனுக்கு உற்சாகம் திறந்த போத்தலின் நுரையாகப் பொங்கியது. ஏதாவது செய்ய வேண்டும் போல் ஒருவித அவஸ்தை அவனிடம். இனி முடிவு வரும் போதே அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும் என்பது போல அவன் கவலை துறந்து, கலகலப்பு ஆனான். அத்தால் அங்கும் இங்கும் உற்சாகமாக அலைந்து திரிந்தான்.

சாப்பாட்டு அறையில் சில்லி நாட்டுப் பெண் ஒருத்தி ஊர்வசியே பூமிக்கு வந்ததாகத் தந்த பிரசன்னம். அவள் ஐரோப்பிரைப் போலப் பால் வெள்ளையாக இல்லாது மஞ்சள் கலந்த வெள்ளையான நிறமாகப் பார்ப்பதற்கு அழகாகக் காட்சி தந்தாள். அவளது தலை முடியும் கருகரு என்று சுருண்டு அடர்த்தியாகக் கருநாகம் அவள் சந்திர வதனத்தைக் கவ்வியதான தோற்றத்தில். பால் வெள்ளைக் கண்களில் கறுத்த விழிகள், ஒளிக்கும் இருளுக்கும் உலக விளக்கம் இயம்பின. இயற்கையாகச் சிவந்த இதழில் எதுவும் பூசாத எளிமை. கூரிய முகம். வயதை மீறிப் படை எடுத்ததான மார்பு. அவளுக்குப் பதினாறு வயது இருக்கும். சில்லி நாட்டு, ஈரானிய நாட்டுப்

பெண்கள் அழகாய் இருப்பார்கள் என்று பரமேஸ் கேள்விப்பட்டு இருக்கிறான். இன்று அதைக் கண்ட போது அவனால் கண் இமைக்க முடியவில்லை.

அவள் தேநீர் தயாரித்து அருந்தினாள். அதைப் பார்த்த பாம்பன் கவலை இல்லாத சுதியில் அவளது மேசையில் போய் இருந்தான். அவள் சிரித்துவிட்டுத் தேநீரைத் தொடர்ந்தும் அருந்தினாள். பரமேஸ் முதலில் அவளைப் பார்த்துச் சிரித்தான். பின்பு கையைக் கொடுத்து, "பரமேஸ்" என்று தனது பெயரை நவீனமாய் சுருக்கிச் சொன்னான். அவள் அதைக் கேட்டுப் புன்னகைத்தாள். அவள் எதற்குப் புன்னகைத்தாள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவள் புன்னகைப்பது அழகாக இருந்தது. அவளையும் அவளது புன்னகையையும் நாள் முழுவதும் பார்த்துக் கொண்டு இருக்கலாம் என்கின்ற மயக்கம் பரமேசுக்கு. அவன் அவளைத் தொடர்ந்தும் பார்த்தான். அவள் அவனைப் பார்த்துச் சிரித்துவிட்டு, "என் பெயர் அனாகி." என்றாள் ஆறுதலாக. "ஓ அனாகி... நல்ல பெயர்... நல்ல பெயர்..." என்று தனக்குத் தெரிந்த அரை குறை ஆங்கிலத்தில் பரமேஸ் தாளம் போட்டான். அவள் அவனைப் பார்த்து மீண்டும் சிரித்தாள். பின்பு "நீங்கள் எந்த நாட்டைச் சார்ந்தவர்?" என்று தெளிவான ஆங்கிலத்தில் கேட்டாள். அது முதலில் பரமேசுக்கு விளங்கவில்லை. பின்பு அவள் அதைச் சுருக்கி "எந்த நாடு?" என்று கேட்டாள். பரமேஸ் அப்போது அதை விளங்கிக் கொண்டான். உடனே சிறீலங்கா... சிறீலங்கா... என்று அவசரமாகக் கூறினான்.

அவள் தலையை ஆட்டி ஆட்டி மீண்டும் சிரித்தாள். பின்பு "அந்த நாடு எங்கே இருக்கிறது?' என்று கேட்டாள். பரமேசிற்கு முதலில் ஒரு கணம் எப்படி அதை விளங்கப்படுத்துவது என்று தெரியவில்லை. பின்பு தன்னைச் சுதாகரித்துக் கொண்டு இது இந்தியா என்று ஒரு கையை வைத்து மறு கையைச் சின்னதாக இறுக்கிப் பிடித்து இலங்கை எங்கிருக்கிறது என்பதை பூகோளரீதியாக அவளுக்கு விளங்கப் படுத்தினான். அவன் அப்படிச் செய்ததிற்குப் பிரயோசனம் இருந்தது. அவள் விளங்கியதாகத் தலையை பல முறை ஆட்டினாள்.

"நீங்கள் என்ன மொழி கதைப்பீர்கள்?" மீண்டும் அவள் ஆங்கிலத்தில் கேட்டாள். இந்தச் சின்ன வயதில் இவள் எப்படி இவ்வளவு தெளிவாக ஆங்கிலம் கதைக்கிறாள்

என்பது பரமேசுக்கு விளங்கவில்லை. திகைப்பாக இருந்தது. அவளது ஆங்கிலத்தைக் கேட்கும் போது அவனுக்குத் தான் கதைக்கும் ஆங்கிலத்தை எண்ணி வெட்கமாக இருந்தது. அதற்காக அவளோடு கதைக்காமல் இருக்கவும் முடியவில்லை. எவ்வளவு அழகு இவள் என்கின்ற யதார்த்தம் அவனை மலைக்க வைத்தது. இப்படி ஒரு அழகிக்கு அருகே சாதாரணமாக போக முடியாது. இன்று, இங்கு அவளோடு உரையாடும் சந்தர்ப்பமே கிடைத்து இருக்கிறது. அதை இடையில் நிறுத்திக் கொள்வதற்கு அவனுக்கு மனம் வரவில்லை. அவள் கையை பிடிக்க வேண்டும் போன்று அடிக்கடி ஆசை மலையாக மனதில் எழுந்து கனத்தது. அப்படிச் செய்ய முடியாது. செய்தால் பிரச்சனை ஆகிவிடும் என்கின்ற மனித வரை முறைகள் அவனுக்கு ஞாபகம் வந்து தடை போட்டது.

பரமேஸ் மீண்டும் தட்டுத் தடுமாறி "நான் தமிழ்... நீங்கள் என்ன மொழி?" என்று ஆங்கிலத்தில் கேட்டான். அவள் அதற்கும் அழகாகச் சிரித்துவிட்டு "நாங்கள் ஸ்பானிஸ் கதைப்போம்." என்றாள். ஸ்பானிஸ் பற்றிப் பரமேஸ் அதிகம் கேள்விப்பட்டது இல்லை. தமிழ், ஆங்கிலம், சிங்களம், இந்தி, மலையாளம், தெலுங்கு ஆகியவை அவன் அதிகமாகக் கேள்விப்பட்ட மொழிகள். வெளிநாடு போய் வந்த சிலர் பிரஞ்சு, டொச்சு என்று சொல்லி இருக்கிறார்கள். அதைவிட மத்திய கிழக்கிற்குப் போய் வருபவர்கள் அரபிக், உருது, பெர்சியன், துருக்கிஸ்க் கதைப்பதாகச் சொல்லி இருக்கிறார்கள். அதைவிடப் பதினெட்டு விதமான எழுத்துக்களை கள்ளக் கடத்தல்காரர்கள் கொண்டு வந்த இந்திய ரூபாயில் பார்த்து இருக்கிறான். இவ்வளவே அவனுக்கு இருந்த மொழி அறிவு. இப்போதே அவனுக்கு உலகத்தில் அதைவிட நிறைய மொழிகள் இருக்கின்றன என்று தெரிகிறது.

"ஸ்பானிஸ் எப்படி இருக்கும்?" என்று கேட்க வேண்டும் போல் இருந்தது அவனுக்கு. அப்படிக் கேட்பதற்கு முன்பு விசாரணை முடித்து விட்டு "TS" வெளியே வர அவரைச் சுற்றிப் பெடியள் குவிந்தார்கள். அதில் சிவாவும் நின்றான். பரமேசுக்குத் தொடர்ந்து கதைக்க வேண்டும் என்கின்ற ஆசை. சிவாவின் கண்ணில் பட்டால் தேவை இல்லாது நோண்டுவான். எதற்காக இப்போது இருந்தே அவனோடு தொல்லைப் படுவான் என்கின்ற நினைப்பு வந்தது.

"நாங்கள் பிறகு கதைப்பமா?" என்றான் பரமேஸ்.

"ஓ தாராளமா..." என்றாள் அவள்.

"சந்திப்பம்." என்று கூறிவிட்டு அவசரமாக பரமேஸ் அந்த இடத்தை விட்டு "TS" நின்ற இடத்தில் வந்து பௌவியமாக நின்றான். தன்னை யாரும் அவதானிக்க இல்லை என்பதை உறுதிப் படுத்திய பின்பு "TS" என்ன தகவலோடு வந்து இருக்கிறார் என்பதைக் கேட்பதில் அக்கறை காட்டினான்.

"TS" "இவர்கள் விசாரணையிற் கூட ஒரு பெருந்தன்மை இருக்கிறது." என்றார். எதற்காக, எந்த அனுபவத்தை வைத்து அப்படிச் சொன்னார் என்பது சிவாவிற்கு விளங்கவில்லை. இவர்கள் பெருந்தன்மை ஆனவர்கள் என்பது அவனுக்கு விளங்கிவிட்டது. இல்லாவிட்டால் பஞ்சத்தில் அடிபட்டு வரும் எங்களுக்கு அடைக்கலம் தந்து இருக்க மாட்டார்கள். இல்லை அவர்கள் ஐநாவிற்குக் கட்டுப்பட்டே மனிதாபிமானமக எங்களை அகதிகளாய் அங்கீகரிக்கிறார்கள் என்றும் சிலர் சொல்லலாம். ஐநாவுக்குக் கட்டுப்பட்டு எந்த மனிதன் அல்லது நாடு இன்று உண்மையாக ஒழுகுகிறது? தாங்கள் விரும்பியபடி நடப்பதுவே எங்கும் நடக்கிறது. ஐநாவே அமெரிக்காவின் கைப்பொம்மை என்பது பலரின் உரமான கருத்து. இலங்கையில் யார் மனிதத்தைக் காத்தார்கள்? அவன் அதற்கு மேல் அதைப் பற்றிச் சிந்திக்க விரும்பவில்லை. அப்படிச் சிந்தித்தால் சகலமும் அவனுக்குப் பற்றி எரியும். கொடுமைகளைக் கண்டு குமுறும் மனது அவனுடையது. நடந்த கொடுமைகளை நினைத்தால் அவனால் நொடிப் பொழுதும் நிம்மதியாக இருக்க முடியாது. கடந்ததை நினைக்காமல் இருப்பதற்கு அவன் கடும் பாடுபட்டான். என்ன பாடுபட்டாலும் சில வேளை அது சறுக்கி விடுகிறது. சில வேளைப் பைத்தியம் பிடிக்கிறது. இத்தினை அநியாயமான உலகில் ஏன் வாழ வேண்டும் என்று அடிக்கடி எண்ணத் தோன்றுகிறது. தன்னிடம் இருக்கும் இந்த அந்தரங்கங்கள் வெளியே தெரியாது மற்றவர்களை நையாண்டி பண்ணிப் பண்ணிச் சந்தோஷமாய் இருக்க வேண்டும் என்று அவன் முயல்கிறான். "TS" எதற்காக அப்படிச் சொன்னார். அவனுக்கு அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

"ஏன் அப்பிடிச் சொல்லுறீங்க?" என்றான் சிவா. "TS" சிவாவைப் பார்த்துப் புன்னகைத்தார். பின்பு பதில் சொல்லத் தொடங்கினார்.

"எங்கடை நாட்டிலை... இல்லை எங்கடை நாட்டிலை மட்டும் இல்லை நிறைய நாடுகளிலேயே பொலிஸ் விசாரணை எண்டா மனிதனை வதைக்கிறது எண்டுதானே அர்த்தம். இலங்கையில நாலாம் மாடி எண்டாக் கருவில இருக்கிற சிசுவும் நடுங்கும். நாலாம் மாடி வேண்டாம் சும்மா பொலிசில அகப்பட்டாலே அவங்கள் எங்கள் விதியை எழுதும் கடவுள் ஆவார்கள். அவர்கள் எதுவும் செய்யலாம். எப்படியும் சித்திரவதை பண்ணலாம். பொலிஸ் எண்டா நாங்கள் எல்லாம் ஓடி ஒளிச்சம் இல்லையா? அதுக்கு என்ன காரணம்? பிடிச்சுக் கொண்டு போனா என்ன செய்வினம் எண்டு எல்லாருக்கும் தெரியும். அந்தப் பயம் எங்களோடை இங்கையும் நிழலாத் தொடர்ந்து வந்திருக்குது. அது ஒரு நாளில மறந்து போகுமா? அல்லது மறைஞ்சு போகுமா? இல்லை. சாகிற வரைக்கும்கூட அது ஒட்டிக் கொண்டு இருக்கலாம். பலரிட்டை நிச்சயம் இருக்கும். ஆனா, இங்கை அப்பிடி இல்லை. விசாரணை எண்டு சொல்லி யாரையும் பொலிஸ் சித்திரவதை செய்ய முடியாது. சில படங்களைப் பாக்கேக்க இப்பிடி எல்லாம் விசாரிக்க முடியுமோ எண்டு நான் யோசிப்பன். இப்ப தெரியுது அது உண்மையில சாத்தியம் எண்டு. நாட்டில நடக்கிறதே கதையா, படமா வரும். அதால நீங்கள் ஊரில பொலிஸ் விசாரணைக்குப் பயப்பிடுகிற மாதிரி இங்க பயப்பிடத் தேவை இல்லை. வன்முறை இல்லையே தவிரக் கேள்விகள் ஆழம் ஆகவும், அசத்தல் ஆகவும் இருக்குது. நாங்கள் பொய் சொல்லுகிறமா இல்லையா எண்டுகிறதை அவங்களால நிச்சயம் ஊகிக்க முடியும் எண்டுகிற மாதிரி அது இருக்குது. அதே வேளைப் பாதிக்கப் பட்டதை சொல்லேக்க நிறைய அனுதாபம் காட்டினது நெகிழ்வாய் இருந்திச்சுது. மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல் சொல்லேக்க மற்றவை நம்ப வேணும். இல்லாட்டி வேதனையாக இருக்கும். அதோடை அவருக்கு எங்கடை நாட்டைப் பற்றியும் தெரிஞ்சு இருக்குது. கெடுபிடி இல்லாமல் மனிசத் தன்மையோடை உண்மையா இருக்க விடுகிற விசாரணை வியப்பைத் தருகுது. இலங்கையில ஆமி, பொலிஸ், சிங்களக் காடையர்கள் எண்டு அவங்கள் கலவரம் நடக்கேக்க செய்ததை நினைச்சா இது கருணைக் கடவுளின் காதில் விடுக்கும் வேண்டுகோளாக

எனக்குத் தெரியுது." என்றார். அவர் சொல்வதில் இருந்த உண்மை அவனுக்கு விளங்கியது. அவர் பாதியைச் சொல்லி மீதியை விழுங்குகிறாரா என்கின்ற சந்தேகமும் அவனிடம் எழுந்தது.

"இலங்கையில சிங்களவர் மட்டும் அநியாயம் செய்ய இல்லை அண்ணை." என்று வில்லங்கத்தைத் விமர்சையாகத் தொடங்கினான் சிவா.

"எங்கடை பக்கமும் நடந்து இருக்கலாம். அதுக்கு எங்கடை பல்லுாத்தையை நாங்களே குத்திக் காட்டிக் கொண்டு திரிகிறதே? ஆனை எண்டுகிறதைத் துரோணற்ற காதில விழாமல் செய்த மாதிரிச் சில நேரங்களில சில விஷயங்கள் பேசாப் பொருளாகிறதும் ஏற்கப்பட்ட தர்மம் தான்."

"அது எங்களுக்குத் தர்மம் ஆகலாம். பரந்தாமன் செய்தாலும் அது அதர்மம் அண்ணா. என்னப் பொறுத்த வரையில மனிதத்தை மிதிக்கிற வேலை நான் செய்ய விரும்ப இல்லை. அதை யாராவது செய்தா சும்மா விடவும் விருப்பம் இல்லை. நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்று நடக்க வேணும். அப்பதான் மனிதம் வாழும். பண்பு உள்ள மனிதர்கள் வாழ முடியும். கருத்துக்களைப் பரிமாறலாம். விருத்தியான சமுதாயம் உருவாகலாம். நான் சொல்லுகிறது பிழையா? இல்லை நாங்கள் செல்லுகிற பாதை சரியா?"

"எங்கடை நாடு யுத்தத்தைச் சாபமாய் பெற்ற நாடு. அங்க பெரும்பான்மை இனம் ஏகமாய் தமது இராணுவத்தோடு ஆட்சி அதிகாரத்தில இருக்குது. அந்த அரசுக்கு உலக வல்லரசுகள் எல்லாம் போட்டி போட்டு ஆயுதம் ஆயுதமாய் அள்ளிக் குடுக்கிறாங்கள். அவங்கள் தமிழ் அப்பாவிச் சனத்தைக் குறிவைச்சுக் கொல்லுகிறாங்கள். எங்களுக்கு எண்டு எந்த நாடு உதவி செய்யுது? அப்பிடியான நிலைமை இருக்கேக்க, சில வேளை மூர்க்கமாக நடக்க வேண்டி இருக்கும். அநியாயமாய் கொல்ல வேண்டி வரலாம். இல்லாட்டிச் சிங்கள அரசு பயப்பிடாது. மனிதம் மனிதம் எண்டு நாங்கள் ஒண்டும் செய்யாமல், பேசாமல் இருந்தால் இன்னும் ஆயிரம் ஆயிரமாய் அவங்கள் கொல்லுவாங்களே அதுக்கு என்ன செய்கிறது? அதை நிப்பாட்ட பெடியள் சிலவேளை அப்பிடிச் செய்கிறாங்கள். அப்பிடிச் செய்த பிறகு தானே அரசாங்கம் கொஞ்சக் காலம் எண்டாலும் வால் ஆட்டாமல் இருக்குது.

யுத்தத்தில சில வேளை தப்பு நடக்கலாம். அதை நாங்களே பெரிசு படுத்தக் கூடாது."

"அண்ணை உங்களுக்கு எங்கடை அனுபவம் இருந்து இருக்காது. சக தோழரைத் துடிக்கத், துடிக்க அரக்கர் கூட்டம் ஒன்று உயிரோடை எரிக்கிறதை நாங்கள் நேர பார்த்தம். அவங்களைக் காப்பாத்த முடியாமல் பறி கொடுத்துத் துடிச்சம். நீங்கள் நியாயப் படுத்துகிற அந்த வன்முறை சிங்களவனுக்கு மட்டும் இல்லைச் சொந்தச் சகோதரங்களுக்கு எதிராகவும் நடந்தது. அதையும் நீங்கள் நியாயப் படுத்துகிற மாதிரியே இருக்குது. என்னைப் பொறுத்த வரை சர்வாதிகாரமாக் கொல்லுகிறதுக்கு யாரும் யாருக்கும் அதிகாரம் கொடுக்க இல்லை. மனிதாபிமானமே இல்லாமல் செய்த இந்தப் படுகொலைகளை யார் செய்தாலும், எதுக்காகச் செய்தாலும் ஏற்றுக் கொள்ளக் கூடாது. இதை எதிர்க்காமல் விட்டால் அது நான் எங்கடை இனத்திற்கே செய்கிற துரோகமா அமையும்."

"அது உங்கடை இயக்கம் காசுக்கு ஆக ஆட்களைக் கட்டி வைச்சு மயிர் மயிராய் பிடுங்கிச்சுது. இந்தியாவிட்டை அவங்களைக் காட்டிக் குடுக்க முனைஞ்சுது. அதுதான் அவங்கள் அப்படிச் செய்தவங்கள். நாங்களும் நிறையக் கஸ்ரப்பட்டம். தொழிலுக்குப் போகிற நாள் எல்லாம் அடி வாங்கினம். எங்களுக்கு யாரும் மனிதாபிமானம் காட்ட இல்லை. குட்டக் குட்ட குனிகிறவனும் மோடன், குனியக் குனிய குட்டுகிறவனும் மோடன் என்பினம். நாங்கள் குட்டக் குட்ட குனிஞ்சு கொண்டு இருக்க முடியாது. அடிக்கு அடிதான் பதில். அதையே அவங்கள் செய்கிறாங்கள்." என்றான் திருநா. சிவா அவனைப் பார்த்து நக்கலாகச் சிரித்தான். பின்பு அவன் முறைக்க,

"உம்மடை புரிதல் அப்பிடி எண்டால் அதுக்கு நான் என்ன செய்கிறது?" என்றான்.

"எனக்கு உங்கடை அனுபவம் இல்லை. எண்டாலும் தமிழன் எண்ட உணர்வோடை யார் குத்தினாலும் அரிசி ஆனால் சரி எண்டு நினைக்கிறன்."

"உண்மை அண்ணை... யார் குத்தினாலும் அரிசி ஆனால் சரி. ஆலால் எப்பிடிக் குத்தினாலும் அரிசி ஆகுமெண்டு இருக்கக் கூடாது. அது ஒண்டில் அழிவிலை கொண்டு போய் விடும். இல்லாட்டி அவமானத்தில கொண்டு போய்

விடும். எங்கடை போராட்டம் போற போக்கைப் பார்த்தால் இரண்டிலையும் முடியலாம். அப்பிடி ஒரு நிலை வந்தால் எதிர்காலச் சந்ததிக்கு நாங்கள் என்ன பதில் சொல்ல முடியும்?"

"நம்பிக்கையே வாழ்க்கை சிவா. நாங்களும் ஒரு நாளைக்கு எங்கடை நாட்டுக்குக் கௌரவத்தோடை திரும்பிப் போவம். அந்தக் காலம் கெதியா வரும்."

சிவாவைக் கூப்பிடுவதற்காகச் சிரிப்போடு வந்த அருளன், அதை அவனிடம் சொன்னான். அருளன் ஏன் சிரிக்கிறான் என்பது தெரியாது அவர்கள் விழித்தார்கள். சிவா பேருந்தைப் பிடிக்கப் போகும் அவசரத்தில் விசாரணைக்காகச் சென்றான். அருளன் சிரித்த வண்ணம் வந்ததைப் பார்த்த குலம்,

"என்ன சிரிச்சுக் கொண்டு வாறீர்?" என்றான்

"இல்லை அந்தப் பொலிஸ்காரன் நானும் துரையப்பாவைச் சுட்டதோ எண்டு கேட்டார். அதுதான்..."

"அப்ப நீர் என்ன பதில் சொன்னனீர்?" என்றான் குலம்.

"இல்ல நானும் சுடத்தான் நினைச்சனான். அதுக்கு இடையில யாரோ சுட்டுப் போட்டாங்கள். தியாகர் எண்ட ஒரு ஆளை நான் சுட்டனான் எண்டு சொன்னன்."

"பிழைக்கத் தெரிஞ்ச நீர்… துரையப்பாவை யார் உண்மையில சுட்டிச்சினமோ தெரியாது. ஆனாத் துரையப்பாவைச் சுடுகிறது சூரன்போர் போல, வருசா வருசம் இல்லை நித்தமும் உலகம் எல்லாம் வந்து போகுது. ம்… உந்தக் கதைக்கு முடிவு இருக்காது." என்றார் "TS".

"துரையப்பாவைச் சுட்டதால எங்களுக்கு ஏதாவது நன்மை வந்தது எண்டு நீங்கள் நினைக்கிறியளே?" என்றான் அருளன் "TS"சைப் பார்த்து.

"போராட்டம் நடந்த எல்லா நாட்டிலையும் தனிமனிதக் கொலைகள் நடந்து இருக்குது. அதுதான் இலங்கையிலும் நடந்தது. அதால நன்மையா? தீமையா எண்டுகிறதை வரலாறு சொல்லட்டும். நாங்கள் அவசரப்பட்டு யார் மேலையும் முத்திரை குத்தக் கூடாது எண்டு நினைக்கிறன்." என்றார். அருளன் அதைக் கேட்டுச்

சிரித்தான். அவனுக்கு மீண்டும் "TS"சிற்குப் பதில் சொல்ல வேண்டும் போல் இருந்தது. பின்பு சொல்லி என்ன ஆகப் போகிறது என்கின்ற எண்ணம் திடீரென வந்தது. ருத்திர தாண்டவங்களைப் பார்த்த நினைவு நெஞ்சில் வலித்தது. நாங்கள் நாட்டை விட்டு வரவில்லை. எங்களை நாட்டை விட்டு வெளி ஏறுமாறு எங்கள் சகோதரர்களே நிர்ப்பந்தித்தார்கள் என்கின்ற நினைவு அவன் மனதில் அனலாக எழுந்தது. அவன் அதை யாரிடமும் சொல்லாது வெறுப்பாகச் சிரித்துச் சமாளித்தான். பின்பு,

"பசிக்குது. எப்ப மத்தியானச் சாப்பாடு வைப்பாங்கள்?" என்றான்.

*

அச்சம் என்பது மடமையடா என்பதை வாழ்வு ஆக்கிய மீசைக்காரனைப் போன்றவன் சிவா. பயம் அவன் சுபாவத்திற்கு எதிரானது. அவனோடு அது ஒரு போதும் ஒட்டாது. அது இல்லாத காரணத்தால் நியாயம், நீதி என்று அவனால் வாதாட முடிகிறது. அந்தச் சுபாவமே அவனுக்குப் பகையைச் சேர்த்து இருக்கிறது. உண்மை பேசுபவனைத் தேடி உறவுகள் வருவது இல்லை. இருந்தும் அதைக் கண்டு அவன் அஞ்சவில்லை. சொல் என்னும் வாள் கொண்டு நியாயத்திற்கு ஆகப் போராட எப்போதும், எங்கும் தயாராகத் தலைப்பாகை இல்லாது நின்றான். அவன் எந்தப் பயமும் இன்றி விசாரணைக்குத் தயாராகக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். அவன் வரும் துணிவைப் பார்த்து அந்த அதிகாரி அவனை நிமிர்ந்து ஒரு கணம் பார்த்தார். பின்பு முன்னால் இருக்கும் கதிரையில் இருக்குமாறு கேட்டுக் கொண்டார்.

அந்த அதிகாரிக்குக் கறுத்த முடி. தாடியும் மீசையும் வளர்த்து அதைக் குட்டையாகக் கத்தரித்து இருந்தார். அவரது மின்னும் பூனைக் கண்களில் வாளின் நுனியில் பட்டுத் தெறித்ததான ஊடுருவும் சுடர் ஒளி. அவர் ஆறடி உயரம் இருப்பார். நோர்வே நாட்டுக் காவலர்களின் சீருடையில் எம்மைச் சுதந்திரத்திற்கு முன்பு ஆண்ட துரைகள் போலக் கம்பீரமாகக் காட்சி தந்தார்.

ஒரு பக்கத்தில் கண்ணாடி அணிந்த தமிழ் இளைஞர் ஒருவர் மொழி பெயர்க்கக் காத்து இருந்தார். அவர் மீசையும் தாடியும் மழித்துப் புது முகம் காட்டினார். ஐந்தரை அடி உயரம் இருப்பார் என்று சிவாவிற்குத் தோன்றியது. மெல்லிய உருவம். சுருட்டை முடி. வேலி

மட்டையை அடுக்கியது போன்ற நிரையான பற்கள். மீசையும் தாடியும் வழித்த முகத்தைப் பார்க்கப் படிக்க வந்தால் இப்படித்தான் இருக்க வேண்டுமா என்று சிவாவுக்கு எண்ணத் தோன்றியது. ஏற்கனவே படிப்பதற்கு என்று நோர்வேக்கு வந்தவர்களில் சிலரையே மொழி பெயர்ப்பதற்கு அரசு அமர்த்தி இருந்தது. அதில் இவரும் ஒருவர்.

அவரும் சிவாவைப் பார்த்துத் தலையை ஆட்டிச் சிரித்தார். சிவாவும் பதிலுக்குச் சிரித்தான். சொல்வதைச் சொன்னபடி சொல்லுவது இப்போது அவர் கையில் என்பது சிவாவுக்கு விளங்கியது. வேண்டும் என்றால் அவர் திரிக்கலாம். திரித்தால் அந்த உண்மையைக் கண்டு பிடிப்பதற்கு முதல் வாழ்க்கை எப்படியோ மாறிவிடும். துணிந்த பின்பே ஆழ் கடலில் கால் வைத்தேன். அதன் பின்பு ஏன் இப்போது தயங்க வேண்டும் என்று தனக்குத் தானே சிவா உற்சாகம் ஊட்டிக் கொண்டான். எதிராகக் கதைப்பது பற்றிக் கனவுகூடக் காண விரும்பாத பெரும்பான்மைத் தமிழர்கள்... அவர்களுக்கு எதிராக என்ன செய்துவிட முடியும்? அதற்குச் சுயநலமும் பயமும் இடம் கொடுக்காது. இவரும் அவர்களில் ஒருவராக இருக்கலாம். அதற்காகத் தான் சொல்வதை அப்படியே கூறுவாரா அல்லது மாற்றுவாரா என்பதை அவன் அறிய முடியாது. விளங்காத மொழி ஒன்றில் கூறுவதன் அர்த்தம் புரியாத அவஸ்தை. தெரிந்தால் என்ன? தெரியாவிட்டால் என்ன? திரிந்தால் என்ன? திரியாவிட்டால் என்ன? என் நெஞ்சிற்குச் சத்தியமாய் நடந்து கொள்ள வேண்டும். அவ்வளவுதான் என்று சிவா முடிவு செய்து கொண்டான்.

வழமையான விபரங்கள் அறியும் கேள்விகளுக்குப் பின்பு விசாரணை தொடங்கியது. சிவா தனது கதையைச் சொல்லத் தொடங்கினான். அவனுக்கு அதைத் தமிழில் சொல்வதே சாத்தியமாகத் தோன்றியது. சிக்கலான விடயங்களுக்கு வேற்று மொழியில் வசனங்கள் தேடிப் பிடிக்க முடியாது என்பது விளங்கியது.

சிவா சொல்லத் தொடங்கினான். யாழ்ப்பாணத்தில் இலங்கை இராணுவத்திற்கு எதிராகப் போராடியதில் இருந்து அது தொடங்கியது. அது சிறிது சிறிதாகச் சகோதரக் கொலைகளை நோக்கி அவனை இழுத்துக் கொண்டு நகர்ந்தது. மொழி பெயர்ப்பாளர் இதை எதிர்பார்க்கவில்லைப் போலும். தர்மசங்கடமாய் சிவாவையும் அதிகாரியையும் பார்த்துப் புழுவாக

நெளிந்தார். பின்பு அதிகாரி கோப்பி எடுத்துவர வெளியே சென்ற போது,

"இயக்கத்தால பிரச்சனை எண்டும், இயக்கத்தில இருந்தது எண்டும் ஏன் இவங்களிட்டைச் சொல்லுறீங்கள்? அது உங்கடை கேசுக்கு அவ்வளவு நல்லது இல்லை. ஆமிப் பிரச்சனை எண்டு சொல்லுங்க. அப்பதான் அசூல் லேசாக் கிடைக்கும்." என்றார். சிவா சிரித்தான். பின்பு பேசாது இருந்தான்.

"நான் உங்கடை நன்மைக்கு சொல்லுகிறன்." என்றார் அந்தத் தமிழ் மொழி பெயர்ப்பாளர்.

"ஒரு விஷயம் உங்களுக்கு விளங்க இல்லை. நான் இங்க இலங்கை இராணுவத்திற்குப் பயந்து அகதியா ஓடி வர இல்லை. அங்க நிண்டு சொந்தச் சகோதரங்களோடை அடிபட்டு எங்கடை போராட்டத்தை நலிவு படுத்தக் கூடாது எண்டதுக்காக இங்க வந்து இருக்கிறன். என்னைப் பொறுத்த வரையில என் மனச்சாட்சிக்குப் பாதகம் இல்லாமல் நடக்கோணும். அதுக்கு உண்மையா இருக்கோணும். பொய் அல்லது உண்மைக்குப் புறம்பாக் கதைக்க வேணும் எண்ட அவசியம் எனக்கு இல்லை. என்னுடைய உண்மையைக் கேட்டு அசூல் தந்தால் தருகினம். இல்லாட்டித் திரும்பிப் போய் என்னால எங்கடை போராட்டத்திற்கு ஏதாவது செய்ய முடியமோ எண்டு பார்ப்பன்."

"இதுக்கு மேல உங்கடை விருப்பம். நீங்கள் சொல்லுகிறதை நான் அப்பிடியே அவரிட்டைச் சொல்லுகிறன்."

"அதை மட்டும் செய்தியள் எண்டாப் போதும்." என்றான் சிவா.

அந்த அதிகாரி மீண்டும் உள்ளே வந்தார். அவர் ஒரு கப்பில் சிவாவிற்கும் கோப்பி கொண்டு வந்தார். மறக்காமல் சீனிக் கட்டிகளும் எடுத்து வந்திருந்தார். கோப்பியைச் சிவாவிடம் கொடுத்தார். சிவா இதை எதிர்பார்க்க இல்லை. கோப்பியை வாங்கிச் சீனிக் கட்டிகளைப் போட்டுக் கலக்கினான். பின் அந்த அதிகாரி சிவாவைப் பார்த்துக் கதைக்கத் தொடங்கினார். மொழி பெயர்ப்பாளர் அதை மொழி பெயர்த்தார். சரியான தமிழ்ச் சொல்லைச் சொல்ல முடியாத இடத்தில் அதற்குப்

பதிலான ஆங்கிலச் சொல்லைக் கூறினார். சம்பாசனை தொடர்ந்தது.

"நான் பலரை விசாரித்து விட்டேன். எல்லாரும் மனப்பாடம் பண்ணிச் சொல்வது போல தங்களுக்கு இராணுவத்தால் மட்டுமே பிரச்சனை என்று சொல்லுகிறார்கள். ஆனால் நீங்கள் மட்டும் இராணுவத்தை விட மாற்று இயக்கத்தால் அதிக பாதிப்பு என்று சொல்லுகிறீர்கள். எதற்காக இப்படிச் சொல்லுகிறீர்கள்?" என்றார் அவர்.

"நான் உங்களுக்குப் பொய் சொல்ல விரும்பவில்லை. உண்மைகளை மட்டும் சொல்கிறேன். உண்மை உங்களுக்குப் புதினமாக இருக்கிறது. தேசியத்தை நேசிக்கும் யாரும் தேசியத்திற்கு எதிரான உண்மைகளை மறந்தும் சொல்லமாட்டார்கள். நீங்கள் சந்தித்த சாதாரண தமிழர்கள் தேசியத்தைக் கண்மூடித்தனமாக, உயிராக நேசிக்கும் மக்கள். அதனாலேயே அதை அழிப்பது தெரியாது அவர்கள் அழிக்கிறார்கள். நான் தமிழ் தேசியத்தை அவர்களை விட அதிகமாக நேசிக்கிறேன். எங்கள் போராட்டம் ஒரு காலத்தில் எதுவுமே இல்லாது அழிந்து போய்விடுமோ அல்லது ஒரு சர்வாதிகார அரசாய் வீற்றிருக்குமோ என்று பயப்படுகிறேன். விடுதலை என்பதற்காகப் போராடத் தொடங்கி, அந்த விடுதலையைத் தொலைத்து, சுதந்திரம் என்பது இல்லாது, இனித் தமிழருக்கு தமிழரே அடிமையாக இருக்க வேண்டி வருமோ என்று பயப்படுகிறேன். அத்தோடு என்னால் மனச்சாட்சிக்கு விரோதமாய் பொய் சொல்ல முடியாது. அப்படிப் பொய் சொல்வது என் பழக்கமோ, வழக்கமோ இல்லை. பொய் சொல்வது எனக்குத் தர்மமாகப் படுவதும் இல்லை. உண்மை சொல்வதால் ஏற்படும் இடர் பற்றி நான் கவலைப்படுவது இல்லை. என் மனச்சாட்சிக்கு விரோதமாய் நான் நடக்க எத்தனிப்பது இல்லை. அதனால் நீங்கள் இந்த உண்மைகளைக் கேட்கிறீர்கள். அந்த உண்மை உங்களுக்கு வியப்பைத் தருகிறது. உயிர்கள் பறிக்கப்படுகின்ற, எரிக்கப்படுகின்ற கோரத்தில் இருந்து தப்பித்தவன் நான். உண்மையைச் சொல்ல வேண்டாம் என்று என்னைத் தடுக்க யாராலும் முடியாது."

"உங்களை நாட்டுக்குத் திருப்பி அனுப்பினால் உங்களால் இலங்கையில் வாழ முடியாதா?"

"வாழலாம். ஆனால் உயிருக்கு எப்போதும் அச்சுறுத்தல் இருக்கும். கொழும்பில் தமிழர் என்றால் புலிகள் என்றே

பார்ப்பார்கள். அதன் பின்பு உயிருக்கு உத்தரவாதம் கிடையாது. வடக்கில் மாற்று இயக்கம் என்றால் துரோகிகள் என்கிறார்கள். அவர்களுக்கு மரண தண்டனை என்பது அவர்கள் முடிவான முடிவு. நீங்கள் மற்றாசைப் பற்றிக் கேட்கவில்லை. அங்கு இயக்கத்தில் வந்து மீண்டும் இணையுமாறு கேட்கிறார்கள். நீங்கள் திருப்பி அனுப்பி வைத்தால் ஏதாவது ஒரு வழிக்குள் அல்லது வலைக்குள் அகப்படலாம். எங்கு நீங்கள் அனுப்பினாலும் உயிருக்கு உத்தரவாதம் இல்லாது போகும் என்பது தெரியும். அதைப் பற்றித் தீர்மானிக்கும் அதிகாரம் இனி உங்கள் கையில்."

அன்று சிவாவிற்குப் பின்பு யாருக்கும் விசாரணை நடக்கவில்லை. சிவாவிற்கு அதிக நேரமாக விசாரணை நடந்தது. சிவா என்ன கதைத்தான் என்பதை முழுமையாகச் சொல்ல விரும்பவில்லை என்று மற்றவர்களிடம் கூறிவிட்டான். எழுதப்படாத வரலாறுகள், நெஞ்சைப் பிழியும் தனி மனித அவலங்கள், ஈழத்தில் மலிந்து, மனிதத்தைப் பாடை ஏற்றி, மௌனமாக இன்று அது மரித்துப் போகிறது. காலப் போக்கில் இந்த எழுதப்படாத அவலங்கள் சுவடு இல்லாது அழிந்து போய்விடும். அதில் சிவா கூறிய கதைகளும் சிலவாக இருக்கலாம். அல்லது இன்னும் பல ஆண்டுகளுக்குப் பின்பு அந்த ஆவணங்கள் நோர்வேயில் வெளி வந்தால் அதில் இருந்து சில உண்மைகளை உலகம் அறிந்து கொள்ளலாம். புள்ளிகளை மையமாக வைத்துப் புரவியாக கடுகதியில் ஓடும் பிரபஞ்சத்தின் மாயக் கணங்களான காலமே அதற்கு விடையாகும்.

# 10 அழகிய விடுதி

அந்தத் தற்காலிக அகதி முகாமிற்கு முன்பு அன்று காலை ஒரு பேருந்து வந்து நின்றது. அந்த முகாமிற்குப் பொறுப்பான அதிகாரி "TS"சைத் தேடி வந்தார். அப்படி வந்தவர் "உங்களை வேறு இடத்திற்கு மாற்றப் போகிறார்கள். நீங்கள் எல்லோரும் தயாராக இருக்க வேண்டும்." என்று கூறிவிட்டுச் சென்றார். "TS" அதை ஒவ்வொரு அறையாகச் சென்று கூறினார். அதைக் கேட்டவுடன் பரமேசுக்குத் தொண்டை அடைத்தது. இதயம் இடி முழக்கத்தை மிஞ்சுவதாய் அடித்தது. அழகிய உறவு ஒன்று மலர மொட்டாய் நிமிரும் போதே கருகும் கனவு கண்டதாய் அவன் துடித்தான். அனாகியை அதன் பின்பு ஒரு முறை சாப்பிடும் போது கண்டு கதைத்தான். அப்படிக் கதைக்கும் போது அவளது பெற்றோர் அங்கு வர அவசரமாகச் சென்றுவிட்டாள். மீண்டும் அவளோடு கதைக்க வேண்டும் என்று சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்து இருக்கும் போது வேறு இடம் மாற வேண்டும் என்கின்ற செய்தி அவன் தலையில் இடியாக இறங்கியது.

செஞ்சிலுவைச் சங்கத்தின் தற்காலிக மடத்தில் விசாரணை முடிந்த பின்பு அவர்களை வேறு இடங்களுக்கு அனுப்பி வைப்பது வழமையான செயற்பாடு. தொடர்ந்தும் அகதிகள் அந்த முகாமிற்கு வந்த வண்ணம் இருந்தார்கள். இது ஈழத் தமிழ் அகதிகளின் படை எடுப்புக் காலம். இதற்கு முன்பு வேற்று ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றார்கள். கடைசியாக டென்மார்க்கிற்கு ஒரு விமானத்தில் நாற்பது ஐம்பது ஆட்கள் என்று வந்து சேர்ந்தார்கள். எல்லாக் கதவுகளும் மெல்ல மெல்ல சுயநலத்தை எண்ணிச் சாத்திக் கொண்டன. இறுதியாக நோர்வேக்குத் தமிழர்கள் படை எடுத்தனர். அப்படிப் படை எடுத்த தமிழர்களையும், வேற்று நாடுகளில் இருந்து வருவோரையும் விசாரணை செய்து அனுப்புவதற்கு அவர்களுக்கு இடம் தேவைப்பட்டது. அகதிகளை எப்படிக் கையாள்வது என்பதில் பல குழப்பங்கள் இருந்திருக்க வேண்டும். அகதிகளுக்கான கட்டுமானங்கள் பாரிய அளவில் அப்போது நோர்வேயில் இருக்கவில்லை. பல விடுதிகளை அவசர அவசரமாக அகதி முகாம் ஆக்கி வைத்து இருந்தார்கள். அந்த அகதி முகாமிற்குத் தமிழர்களையும் இரண்டு சில்லி நாட்டுக் குடும்பத்தையும்

அனுப்பத் திட்டம் இட்டு இருந்தனர். அந்த இரண்டு சில்லி நாட்டுக் குடும்பத்தில் ஒரு குடும்பத்தில் அனாகியும் ஒரு அங்கத்தவர். அது பரமேசிற்குத் தெரியாது. அவளைப் பிரியும் முன்பு ஆவது ஒரு முறை பார்த்து விட்டுப் போக வேண்டும் என்று பரமேஸ் துடித்தான். அவளைத் தேடி விடுதி எங்கும் பரபரப்பாகச் சுற்றி வந்தான். எங்கும் அவளைக் காணவில்லை. எங்கோ அவள் மாயமாகி விட்டாள். அவள் அறைக்குள் சென்று பார்க்க முடியாது. அங்கு அவளது தாய், தந்தை, சகோதரன் ஆகியோர் இருப்பார்கள். பரமேஸ் வேறு வழி இன்றி அவர்கள் கொடுத்து இருந்த கறுத்தக் குப்பைப் பையிற்குள் தனது பொருட்களை எடுத்து அடைந்தான். புறப்படுவதற்கு அவன் தயார் ஆனான். அவனுக்கு அனாகியை நினைக்க அழுகையே வந்துவிடும் போல் இருந்தது. அவளுக்கும் அவனுக்கும் நீண்டகாலப் பழக்கம் கிடையாது. பார்த்த நாளில் இல்லைப் பார்த்த கணத்தில் இருந்தே அவளைத் தொடர்ந்து பார்க்க வேண்டும் என்கின்ற வெறி அவன் மனதில். அவள் இல்லாத கணங்கள் சூன்னியம் ஆனதாகப் பெரும் வெறுமையை அவனுக்குத் தந்தது. அவன் அவளைத் தேடித் தேடி அடிக்கடி அலைவான். அவள் எப்போதும் தாய் தந்தையோடு அறைக்குள் இருப்பது வழக்கம். அதையும் மீறி வெளியே வரும் போது சிரித்துக் கதைப்பாள். அப்படி அவள் வெளியே வரும் போது பரமேசுடன் யாரும் நின்றால் அவன் கதைப்பது இல்லை. கதைத்தால் அதுவே முகாமில் கதையாகும் என்பதாகத் தவிர்த்தான். அதை எல்லாம் மீறி வந்த ஒரு சந்தர்ப்பத்தில் அவளோடு சில நிமிடங்கள் அவன் கதைத்தான். இப்போது அவளோடு கதைக்காமலே பெயர் தெரியாத ஒரு இடத்திற்குப் போவதை எண்ண இதயம் இடறி இடறி விழுவதாய் வலித்தது.

பெண் என்பவள் வேறு… அவளிடம் இருக்கும் அற்புதமான பெண்மை என்பது வேறு. அது சில பெண்களை அற்புதப் பிறவிகளாக்கும். பெண் இடம் கொட்டிக் கிடக்கும் அழகு பல ஆண்களை மயக்கிவிடும். அந்த அழகில்கூட மயங்காத ஆண்களும் உண்டு. அழகு மட்டும் இருப்பது பெண்ணிற்கு அழகு ஆகாது. பெண்ணிடம் பெண்மையை, அதன் அழகான நளினத்தை எதிர் பார்க்கும் ஆண்களில் பரமேசும் ஒருத்தன். அழகும், பெண்மையும் சேர்ந்ததே அவன் காணும் அற்புதப் பெண். அவனது வாழ்வில் முன்பு ஒரு தேவதை அப்படிக் கிடைத்தது இல்லை. காலமும் சூழ்நிலையும் பெண்களை ஈழத்தில் ஆண்களாக வாழ

நிர்ப்பந்தித்து இருந்தது. அவன் வாழ்வில் குறுக்கிட்டவள் அப்படிப்பட்ட அற்புதப் பிறவி அல்ல என்பது பரமேசின் அப்போதைய குறை ஆகியது. இப்போது அவளை மறந்தாகிற்று. மறந்த அந்த மனதில் இவள் வந்து உரமாகக் குடியேறி விட்டாள்.

எல்லாப் பெண்களிடமும் பெண்மை பொங்கி வழிவது இல்லை. பெண்மையின் நளினம் தோகை விரித்த மயிலாக நர்த்தனம் ஆடும் போது ஆண்மை அதில் மயங்கிக் கிடக்கும். அத்தால் இயற்கை கொடுக்கும் மோகத்தில் காதல் கொள்ளும். கர்வமாகும். கள் வெறி கொள்ளும். கவிதை பாடும். அவளிடம் பெண்மை அளவுக்கு அதிகமாகக் கொட்டிக் கிடந்தது. அவளது ஒவ்வொரு அசைவும் அவனைக் கிறங்கடித்தன. அவளின் அசைவுகளைப் பார்த்த வண்ணமே வாழ்ந்து விடலாம் என்று பரமேசுக்குத் தோன்றியது. அவன் தனது பையைச் சாப்பிடும் அறையில் வைத்து விட்டு மீண்டும் அவளைத் தேடினான். அவளை எங்கும் காணவில்லை. அறைக்குள் இருப்பாள் என்பது விளங்கியது. கதவைத் திறந்து பார்ப்பதற்கான அதர்மத் துணிவு அவனிடம் இருக்கவில்லை. அது அத்துமீறலாய் போய்விடும் என்பதும் நிச்சயமாக அவனுக்கு விளங்கியது. அவன் மீண்டும் தோல்வியோடு சாப்பாட்டு அறைக்கு வந்தான்.

வெள்ளை மாட்டிற்கு நீலக் குறி சுட்டது போலப் பேருந்து ஒன்று வந்து செஞ்சிலுவைச் சங்கத்தின் அலுவலகத்திற்கு முன்பு நின்றது. பதினொரு பெயருக்கு ஏன் இந்தப் பெரிய பேருந்து என்பது பரமேசுக்கு முதலில் விளங்கவில்லை. பின்பு அது தங்களுக்கு மட்டும் அல்ல என்பது விளங்கியது. தங்களோடு வேறு யார் யார் வரப் போகிறார்கள் என்பதும் அவனுக்குத் தெரியவில்லை.

ஒவ்வொருவராகச் சாப்பாட்டு அறைக்குத் தங்களது பைகள், சில குப்பை போடும் கறுப்புப் பைகள் சகிதம் வந்து சேர்ந்தார்கள். சிலர் இறுதியாகப் பழரசம் அருந்துவதில் அவசரம் காட்டினார்கள். போகும் இடத்திலும் இப்படிப் பழரசம் கிடைக்குமா என்பது அவர்களுக்குத் தெரியாது. எங்கே போகிறோம் என்பதே அவர்களுக்குத் தெரியவில்லை. அருகில் உள்ள இடத்திற்கு மாற்றுவதாக "TS"சிடம் அந்த அதிகாரி கூறியதாக பரமேசிடம் அவர் சொன்னார். அருகில் என்றால் வந்து போகலாம். எப்படி வந்து போவது என்பது பரமேசுக்கு விளங்கவில்லை. அவனுக்கு இந்த நாட்டு

மொழி தெரியாது. ஒரு சில ஆங்கிலச் சொற்கள் மட்டுமே தெரியும். அதைக் கொண்டு தொடராக வசனம் அமைப்பது முடியாத காரியம். பேருந்தில் வந்து போவது என்றால் பணம் தேவைப்படும். அதை யார் தருவார்கள்? இந்த இன்பமான கனவு இத்தோடு கருகிவிடும் என்பது மாத்திரம் பரமேசிற்கு விளங்கியது. அதை எண்ண மீண்டும் இதயம் வலித்தது. பார்த்ததும் காதலா என்பது பரமேசுக்குப் விளங்கவில்லை. ஒரே ஒரு முறையே காதல் வரும் என்று சொல்வதின் அர்த்தமும் விளங்கவில்லை. அவளுக்கும் காதல் வந்ததாத்தான் பனை மரத்தின் கீழே நின்று கதைத்தாள். அவள் முதலில் முயற்சித்துப் பாடுபட்டு கொஞ்சம் வெட்கம் காட்டினாள். அல்லது காட்டியதாய் நடித்து இருக்க வேண்டும். பின்பு யாரிக்கு யாரி நின்றாள். எப்படி என்றாலும் வெறியில் பரமேசு வென்றான். அவள் கருவுற்றாள். நம்பித் தன்னிடம் இருந்ததையும் கொடுத்தாள். எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு வெளிநாடு வந்து விட்டான். இங்கு வந்த பின்பு அவளை எண்ணுவது மனதிற்குள் சுகிக்கவில்லை. அவள் தன்னை வெளிநாட்டிற்குப் பரமேஸ் அழைப்பான் என்று காத்து இருக்கிறாள். பரமேசுக்கு அவளை அழைப்பது பற்றி எந்த அக்கறையும் இல்லை. மனம் மாறி விட்டது. நாட்டுக் கட்டையோடு கொட்டிலில் வாழ்ந்த வாழ்வு இப்போது பிடிக்கவில்லை. இங்கு எடுத்து அதே பிடாரியுடன் நான் வாழ வேண்டுமா என்று அடிக்கடி அவன் எண்ணிப் பார்க்கிறான். அது அவசியமாக அவனுக்குப் படவில்லை. அவள் விடுவாளா என்பதும் விளங்கவில்லை. அவளால் அங்கிருந்து என்ன செய்ய முடியும் என்கின்ற துணிவு இருந்தது. போகப் போக என்ன நடக்கிறது என்று பார்த்துக் கொள்வோம் என்று பரமேஸ் எண்ணினான். அப்போது இவள் கண்ணில் பட்டாள். கதைக்கத் திருப்பிக் கதைத்தாள். இனிக்க இனிக்கக் கதைத்தாள். இவள் அல்லவோ பெண் என்று பிரமிக்க வைத்தாள். அதன் பின்பு பதினாறும் பதினேழுமாகத் தொடங்கியதை முடித்துப் புது வாழ்வு தொடங்க வேண்டும் என்று நினைத்தான். இன்று அது கனவாகப் போய்விட்டது என்பதை அவனால் தாங்க முடியவில்லை. அவனுக்குப் பழரசம் குடிப்பதோ மற்றவர்களோடு கதைப்பதோ இப்போது பிடிக்கவில்லை. நெஞ்சு சுள்ளென வலித்தது. தலை கனத்து இடித்தது. இது அவளின் நினைவில் உண்டான பிரமையா என்று எண்ணினான். இல்லை. இதயம் அடிப்பது அவன் காதிற்குக் கேட்டது. இருப்பதே தெரியாத இதயம் இன்று பிளப்பதாய் கூக்குரல் இட்டது.

எதனால்? பரமேஸ் சோர்வோடு ஒரு மேசையில் தலையை வைத்துப் படுத்தான். வாழ்வு பற்றிய கற்பனைகள் பல வேளைகள் கற்பனைகளாகவே போய் விடுகிறது என்று எண்ணினான்.

*

நிமலன் கறுத்த நிறக் குப்பை போடும் பையுடன் அவசரம் ஆகத் தங்கள் அறைக்குள் புகுந்த போது "TS" பதட்டத்தோடு அதைத் தனது கைப்பையில் வைத்தார். புகைப்படமா அல்லது கடிதமா ஏதோ ஒரு பக்கம் வெள்ளையாக இருந்தது. எதையோ இவர் மறைக்கிறார். எதையோ மற்றவர்கள் அறியாது மனதிற்குள் மறைத்து வைத்து மருகி மருகி உருகிய வண்ணம் எங்களோடு வாழ்கிறார். இவ்வளவு விஷயம் விளங்கிய இந்த மனிதன் ஏன் எங்களோடு அதைப் பகிர்ந்து பாரத்தைக் குறைத்துக் கொள்ளக் கூடாது? எங்களோடு பகிர முடியாத விடயங்கள் நிறைய இருக்கலாம். அப்படி எங்களோடு பகிர முடியாத விடயமாக அது இருக்குமா? என்னிடம் அதைக் காட்டுவதற்குப் பயப்படுவதைப் பார்த்தால் நாட்டில் ஏதும் செய்து இருப்பார் போலத் தோன்றுகிறது. ஏதாவது செய்து இருப்பாரா? கடவுளுக்கே வெளிச்சம் என்று அவன் எண்ணினான்.

நிமலன் இப்படித் திடீரென வருவான் என்று "TS" எதிர் பார்க்கவில்லை. அவசரமாக அதைத் தனது கைப்பையில் வைத்து விட்டுப் பதட்டத்தோடு நிமிர்ந்து பார்த்தார். நிமலன் தான் அதைப் பார்த்தது ஆகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. என்றாவது ஒரு நாள் அதைப் பார்த்துவிட வேண்டும் என்று மனதிற்குள் அத்து மீறலாய் எண்ணிக் கொண்டான். பின்பு நிலைமையைச் சகஜம் ஆக்குவதற்கு,

"பஸ் வந்திட்டுது அண்ணை… நீங்கள் றெடியே?" என்றான்.

"ஓ நான் றெடி." என்றார் "TS". தனது குப்பைப் பையையும், தனது கைப் பையையும் எடுத்துக் கட்டில் மேலே வைத்தார். நிமலனும் தனது பொருட்களை அவசரமாக அள்ளி அடைந்தான். பின்பு குளியல் அறையில் ஏதாவது தவற விட்டேனோ என்று பரிசோதித்தான். எல்லாம் திருப்தி தரும் அளவிற்கு வெறுமை ஆகக் கிடந்தது. இனிப் புறப்பட வேண்டியதே என்று எண்ணியவன்,

"போவமே அண்ணை?" என்றான். "TS" யோசனையோடு அவசரமாக

"ஓம்... ஓம்..." என்றார்.

நிமலனும் "TS"சும் சாப்பாட்டு அறைக்கு வந்த போது எல்லாத் தமிழரும் அங்கு வந்து விட்டார்கள். சிறிது நேரத்திற்குப் பின்பு அவர்களுக்குப் பொறுப்பான அதிகாரியும் அங்கு வந்தார். அவர் ஆட்களைச் சரி பார்க்க அவர்கள் பெயர் விபரம் அடங்கிய பட்டியல் ஒன்றைக் கையில் வைத்து இருந்தார். அவர் அதைச் சரி பார்த்த பின்னர் சாரதியிடம் அதைக் கொடுக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்யாமல் அவர் யாருக்காகவோ காத்துக் காத்து, கைக் கடிகாரத்தை பார்த்துப் பார்த்து, அதனால் சலித்து, உச்சுக் கொட்டினார். பின்பு,

"கொஞ்சம் பொறுங்க." என்றுவிட்டு அறையை நோக்கிச் சென்றார். அவர் சென்ற பின்பு எல்லோரும் சலிப்போடு கதிரைகளில் அமர்ந்தனர். அவர்களால் அப்படி அதிக நேரம் அமர்ந்து இருக்க முடியவில்லை. சென்ற அதிகாரி அந்த இரு சில்லி நாட்டுக் குடும்பத்தையும் அழைத்துக் கொண்டு மீண்டும் வந்தார். அவர்களும் அதே முகாமிற்கு வருகிறார்கள் என்பதை அப்போது தெரிந்து கொண்ட பரமேசால் சந்தோஷத்தைத் தாங்க முடியவில்லை. ஐயோ என்று வாய் விட்டுக் கத்த வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அப்படிச் செய்தால் பைத்தியக்காரன் என்று நினைப்பார்கள் என்று எண்ணி அவன் அமைதி காத்தான். அவன் கண்கள் அனாகியின் கண்களைப் பார்த்தன. அவன் கண்களில் இருந்த ஏக்கம் அவள் கண்களைத் தேடிச் சந்தித்த போது அவள் கண்களில் ஈரமாக அது படர்ந்தது. அதற்கு மேல் அங்கு அவ்வளவு ஆட்களுக்கு முன்பு எதுவும் செய்யக் கூடாது என்பதற்காக அவன் யதார்த்த வாழ்வின் இழுப்பிற்குள் வந்தான். ஒவ்வொருவராகப் பேருந்தில் ஏற அதிகாரி அவர்களைச் சரி பார்த்து தனது படிவத்தில் அடையாளம் இட்டார். எல்லோரும் ஏறி முடிய அவரது கணக்குச் சரியாக இருந்தது. அத்தால் அவர் பேருந்து புறப்படுவதற்குப் பச்சைக் கொடி காட்டினார். பேருந்து புறப்பட்டது.

பேருந்து நெடுஞ்சாலையில் ஏறிய பின்பு ஒரு மலைப் பகுதி ஊடாக வேகமாகப் பயணித்தது. பனி கரையாது எங்கும் வெண்மை இயற்கைக்கு வெண் நரையாக. ஊசி இலை மரங்கள் கடும் பனிக்கும் அஞ்சாது பச்சை காட்டிய

வண்ணம் நிமிர்ந்து இயற்கைக்குச் சவால் விட்டு நின்றன. அந்தப் பாதையின் கிழக்குப் பக்கத்தில் நீளமான ஏரி ஒன்று பேருந்தைத் தொடர்ந்து பின்னால் ஓடி வந்தது. இயற்கை எங்கும் பொங்கிக் கொழிக்கும் இந்த நாட்டின் மனிதனின் நவீனப் பாதைகளைப் பார்க்கும் போது "TS"சிற்கு மலைப்பாக இருந்தது. இப்படி எங்கள் நாடுகளும் நவீனம் அடைய முடியுமா என்கின்ற ஏக்கமான கேள்வி பிறந்தது. அது விடை தெரியாது பரிதாபமாகத் தவித்தது. பாதையின் கரை ஓரங்களில் பகலில் கரையும் பனி இறுகி வழுக்கும் திட்டுக்களாய் நீண்டு இருந்தன. நல்ல வேளையாகப் பனிக் காலம் முடியும் போது இந்த நாட்டிற்கு வந்து இருப்பது "TS"சிற்கு ஆறுதலாக இருந்தது. கோடைக் காலம் துவங்கப் போகும் இந்தக் காலத்திலேயே குளிர் தாங்க முடியாமல் இருக்கிறது. பனிக் காலத்தில் வந்து இருந்தால் பெரும் அவஸ்தைப் பட்டிருக்க வேண்டும் என்பது அவருக்கு விளங்கியது.

பேருந்தின் முன் இருக்கையில் அனாகி அவளது தகப்பனோடு அமர்ந்து இருந்தாள். அவளது தகப்பன் ஆறடி உயரம் இருப்பார். பொன் நிறமாகத் தகதகக்கும் உடம்பு. கருமையான அடர்ந்த கேசம். ஐயர் போல முகத்தைப் பளபளக்க வழித்து இருந்தார். அவரின் பூனைக் கண்களில் எப்போதும் ஒரு ஐயம் தெறிக்கும் பார்வை. அதைச் சந்திக்கும் வலு பரமேசுக்கு இருக்கவில்லை. தகப்பனுக்கு மரியாதை கொடுத்தாலும் பெரிதாகப் பயப்படுவதாய் அனாகி காட்டிக் கொள்ளவில்லை. அது பரமேசிற்கு வியப்பை உண்டு பண்ணியது. அவளோடு பழகும் போது அவர்களின் கலாச்சார சுதந்திரம் பற்றி பரமேசால் விளங்கிக் கொள்ள முடிந்தது.

அனாகியின் இருக்கைக்குப் பின்னால் நான்கு இருக்கைகள் தள்ளிப் பரமேஸ் இருந்தான். யாருக்கும் தெரியாமல் அவளது முகத்தைப் பார்த்துவிட வேண்டும் என்று அவன் மனது கிடந்து துடித்தது. அவளது தகப்பனுக்கோ கூட இருக்கும் தமிழருக்கோ தெரியாது தான் அவளைப் பார்ப்பது சாத்தியமாக அவனுக்குப் படவில்லை. சலிப்போடு அவன் சோர்ந்து போய் இருந்த போது அனாகி திரும்பி அவனை எட்டிப் பார்த்தாள். அவள் திரும்பும் போதே அவள் பார்வையில் நீ எங்கே என்று பரமேசைக் கேட்டது போன்று இருந்தது. பரமேஸ் அடங்கா ஆவலோடு அவளைப் பார்த்தான். அது சீதா இராமக் காதலாக

அவளும் நோக்கினாள் அண்ணலும் நோக்கினார் என்பதாக அமைந்தது. இதயம் பிளக்கும் விழிகளின் ஒளிகள் அவர்கள் மொழி ஆகின. பத்து நாளைக்கு அது போதும் என்பதான திருப்தி பரமேசிற்கு ஏற்பட்டது.

பேருந்து ஏரிக் கரையால் ஓடியது போதும் என்பதாக ஒரு சிறு பாதையில் இறங்கிக் கடற் கரையை அண்டி இருந்த விடுதியின் முன்பு பதுமை போல நின்றது. அந்த விடுதிக்கும் செஞ்சிலுவைச் சங்கத்தின் அலுவலகத்திற்கும் அதிக தூரம் இருக்காது என்பது அப்போது பரமேசுக்கு விளங்கியது. கிட்டத்தட்ட இருபது நிமிடத்தில் அந்த விடுதிக்கு வந்தாகிவிட்டது. அந்த விடுதி ஒதுக்குப் புறமாக, நீலப் பளிங்கான குடாவை ஒட்டி இருந்தது. அந்த விடுதியில் நின்று பார்க்கும் போது நீல வைர விரிப்பான கடல் அனைவருக்கும் பிரமிப்பைத் தந்தது. அங்கிருந்து வெளி இடத்திற்குப் போவதற்கு பேருந்தைத் தவிர வேறு வசதிகள் அருகே இருப்பது போலத் தோன்றவில்லை.

அது சுற்றுலாப் பயணிகளுக்கான விடுதி ஒன்று. அவசரத்திற்கு, அகதிகளைத் தங்க வைக்க நோர்வே அரசாங்கம் அங்கு இடம் பிடித்து இருக்க வேண்டும். அந்த விடுதிக்கு வெள்ளைப் பூச்சு அடித்து இருந்தார்கள். அந்த விடுதியின் முன்பு வாகனங்கள் நிறுத்துவதற்கான தரிப்பிடம் பரந்து கிடந்தது. கடற்கரை ஓரங்களில் பனி கரைந்து பச்சை தலை காட்டியது. மற்றைய இடங்களில் இன்னும் வெண்மையை வெல்ல முடியாத சூரியனின் திருப்பி அடிக்கும் வெள்ளிக் கதிர்களின் அதிரடிப் பாய்ச்சல். பேருந்தால் இறங்கிச் சூரியனின் அந்த வீச்சைப் பார்க்கப் பலருக்கும் கண்கள் கூசின. பேருந்தின் கறுப்புக் கண்ணாடி கொடுத்த சுகம் இப்போது போய்விட்டது பலருக்குத் தொல்லை ஆகியது.

அந்த விடுதிக்கும் ஒரு பெண்ணே பொறுப்பாளராக இருந்தார். அவர் வந்து பேருந்துச் சாரதியிடம் அந்தப் பட்டியலை வாங்கிய பின்பு கலோ என்று தன் வரவை எல்லோருக்கும் அறிவித்தார். இறங்கி நின்ற அனைவரும் என்ன என்பதாக அவரை அவதானிக்கத் தொடங்கினார்கள்.

"நான் இந்த விடுதியின் பொறுப்பாளர். என் பெயர் இன்கிறி லார்சன். நீங்கள் வரவேற்பு அறையில் உள்ள படிவத்தை முதலில் நிரப்பித் தர வேண்டும். அதன் பின்பு உங்களுக்கான அறை தரப்படும். ஒவ்வொரு வியாழக் கிழமையும் உங்களுக்குச் செலவுக்கான பணம் நூற்று

ஐம்பது குரோணர்கள் தரப்படும். முதலில் நான் உங்களுக்கு விடுதியைச் சுற்றிக் காட்டுகிறேன். உங்கள் பொருட்களை வரவேற்பு அறையில் வைத்து விட்டு உங்கள் "Wallet"ஐ மாத்திரம் எடுத்துக் கொண்டு என்னோடு வாருங்கள்." என்று கூறிவிட்டு அவர் அதன் இரட்டைக் கண்ணாடிக் கதவைத் திறந்து உள்ளே சென்றார். அவர் பின்னே மற்றவர்களும் உள்ளே சென்றனர். பரமேஸ் அனாகிக்கு முன்பு சென்றான். அவசரமாக அவளைத் திரும்பிப் பார்த்துச் சிரித்தான். அவளும் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

உள்ளே சென்ற சிவாவிற்குத் திகைப்பாக இருந்தது. ஐந்து நட்சத்திர விடுதியில் அவன் தங்கியது இல்லை. இது ஐந்து நட்சத்திர விடுதியாக இருக்காவிட்டாலும் ஒரு நான்கு நட்சத்திரமாவது கொடுக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. உள்ளே மரத்தால் பிறை வடிவான அரைச் சுவரால் வரவேற்புப் பகுதிக்கான கூண்டு செய்யப்பட்டு இருந்தது. மற்றைய பகுதிக்குக் கீழ் சுவர் மரத்தால் அமைந்து இருக்க மேல் சுவருக்கு அழகான காகிதம் ஒட்டி இருந்தது. தரைக்கு "Parquet" என்கின்ற மரத்தகடு பதிக்கப்பட்டு இருந்தது. இதமான வெப்பம் இலங்கையில் நிற்பதாகக் கணகணப்பைத் தந்தது. குப்பைப் பைகளை இடம் பார்த்து வைத்து விட்டு எல்லோரும் சுற்றிப் பார்ப்பதற்கு தயாராக நின்றார்கள்.

இன்கிறி அவர்களை அழைத்துக் கொண்டு சுற்றிக் காட்டப் புறப்பட்டார். அவர் முதலில் அதே தளத்தில் இருந்த மண்டபத்தைச் சுற்றிக் காட்டினார். அதற்குள் நூறு பேருக்கு விருந்து கொடுக்கலாம் என்றும் கூறினார். பல தொழிற்சாலைக் கூட்டங்கள் அங்கு நடைபெறும் என்றும், அதற்கு உணவும் இருப்பிட வசதியும் தாங்கள் வழங்கி வந்ததாகவும் அவர் கூறினார். அது தற்போது தற்காலிகமாக நிறுத்தப்பட்டு இருப்பதாயும் அதற்குப் பதிலாக உங்களுக்கு இருப்பிட வசதி தந்து இருப்பதாகவும் அவர்களைப் பார்த்து அவர் கூறினார்.

அதன் பின்பு அவர் சமையல் அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கு மூன்று நபர்கள் வேலை செய்தார்கள். அது ஒரு பெரிய சமையல் அறை. அங்கு இருந்த கருவிகளை இதற்கு முன்பு சிவா எங்கும் பார்த்தது இல்லை. இலங்கையில் உள்ள ஓப்பரே ஹொட்டலில் அப்படி இருக்குமா என்பது அவனுக்குத் தெரியாது. அதற்குள் போகும் சந்தர்ப்பம் ஒரு போதும் அவனுக்குக்

கிடைத்ததும் இல்லை. ஓப்பப்றே தேவன் என்கின்ற ஒரு விடுதலைப் போராளி இருந்ததையும், அவனைச் சுட்டுக் கொன்றதையும் மட்டும் அவன் அறிந்து இருந்தான். பெரிதான ஒரு எவர்சில்வர் அலுமாரி போன்ற போரணையில் பல முழுக் கோழிகள் சுற்றிச் சுற்றி வெந்து பொன் நிறம் ஆகின. ஊரில் ஒரு கோழி ஒரு குடும்பத்திற்கு. அது சேவலாகவும் இருக்கலாம் பேடாகவும் இருக்கலாம். அவ்வளவு கோழிகள் இப்படி வேகுவதை இப்போதே சிவா முதன் முதல் பார்க்கிறான். ஐரோப்பியர்கள் வித்தியாசமானவர்கள். அவர்களுக்குக் கிடைத்த வசதியும் அப்படியாக இருக்கிறது என்கின்ற நினைப்போடு இங்கிரி சொல்வதைக் கேட்டான்.

ஆறடி உயரத்திலும், மூன்றடி அகலத்திலும் இருந்த அந்த மனிதனைக் காட்டி "இவர்தான் இங்கே சமைக்கும் பிரதான சமையல்காரர். இவருக்குப் பெயர் அஸ்பியோன்." என்றார். அந்த மனிதர் உருவத்தை மறந்து குழந்தை போலச் சிரித்தார். "உங்களுக்காக உணவு செய்கிறேன்." என்று வேகும் கோழிகளைக் காட்டினார். அந்தக் கோழிகள் வெந்து வெந்து பொன் நிறம் ஆகின. அதன் வாசனையை அறிந்த மூளை வயிற்றின் உள் தாராளமாய் அமிலம் சுரப்பதற்குக் கட்டளை இட்டது. அஸ்பியோனிற்கு பெரிய மொத்தமான கைகள். விரல்கள் ஒவ்வொன்றும் மெலிந்த வாழைப் பழத்தின் மொத்தத்தில் இருந்தன. அவரோடு இரண்டு பெண்கள் உதவியாளராக வேலை செய்தார்கள். ஒரு பெண் நடுத்தர வயதை உடையவள். அவளுக்குக் கெலேனா என்று பெயர். மற்றைய பெண்ணிற்கு இருபது வயதிருக்கும். அவளது பொன் நிறக் கேசமும் நீலக் கண்களும் அவள் இந்த நாட்டின் வாரிசு என்பதில் சந்தேகம் வேண்டாம் என்பது போலப் பறைசாற்றியது. அங்கு வந்தவர்கள் கண்கள் தவிர்க்க முடியாது அவள் மேல் மேய்வதால் அவள் நெளிவது போல சிவா உணர்ந்தான். அப்படி இருந்தும் அவனுக்கு அவளைப் பார்க்க வேண்டும் போன்ற அடக்க முடியாத மனித இச்சை. அது அவனை அலைக்கழித்தது. பார்த்தால் கண்ணைத் திரும்பப் பெற முடியாத அழகு அவளிடம் இருந்தது. ஒரு சமையற்காரியாக வேலை செய்கிறாளே என்கின்ற எண்ணமே அருளனை இம்சித்தது. அவளைக் கைப்பிடித்து, காலிற்குப் பூப்போட்டு, பல விருந்து நிறைந்த குடும்பம் நடத்தலாம் என்கின்ற கற்பனை அவனிடம் எழுந்தது. அவளுக்கு மாயா என்பது பெயர். அவள் ஆண் இனத்திற்கு மாயாவாக அவனுக்குத்

தோன்றினாள். அவள் மன்மதனையே மயக்கும் மாய மானைப் போன்ற அழகில் அந்தச் சமையல் அறையை விட்டுப் பலரையும் போக விடாது பிடித்து வைத்து இருந்தாள்.

"அவளையும் அறிமுகம் செய்து வைத்த இன்கிறி இனி நாங்கள் கீழே சென்று முக்கியமான பகுதி ஒன்றைப் பார்ப்போம்." என்று கூறிவிட்டு நடக்கத் தொடங்கினார். பலருக்கும் தற்போது சமையல் அறையை விட்டு நகர மனம் இல்லாது இருந்தது. மாயாவை விட்டு மறைவது உலக மாயையை அறுக்கும் என்கின்ற ஞானத்தில் அங்கேயே நிற்க அவன் ஆசைப்பட்டான். அதைவிட வயிற்றைக் கிளறி விட்ட சாப்பாட்டின் மணம் அந்தச் சமையலைச் சுவைத்துச் சாந்தி தா என்று குளறியது. அந்த அவஸ்தைகளை இங்கிரி சென்ற வேகம் பின் தள்ள அனைவரும் அவசரமாக அவர் பின்னே சென்றார்கள். அவர் வேகமாகப் படிகளால் இறங்கி கீழ்த் தளத்திற்குச் சென்றார். அந்தத் தளத்தில் உள்ள பெரிய அறையில் பல கழுவும் இயந்திரங்களும் காயப் பண்ணும் இயந்திரங்களும் இருந்தன. அவற்றை எப்படிப் பாவிப்பது என்று இங்கிரி பெரியதொரு விளக்கம் கொடுத்தார். அவர் ஆங்கிலத்தில் கூறியவற்றில் அதிகம் பலருக்கும் விளங்கவில்லை. திருநாவிற்கும் பல விடயங்கள் விளங்கவில்லை. பின்பு "TS"சிடம் அந்தச் சந்தேகங்களைக் கேட்க வேண்டும் என்று அவன் எண்ணிக் கொண்டான்.

அதன் பின்பு தேகப் பயிற்சி செய்வதற்கும் விளையாடுவதற்கும் பாவிக்கும் மண்டபத்தை இங்கிரி காட்டினார். அதன் விஸ்தீரணம் பலரையும் திகைக்க வைத்தது. இங்கு ஒரு விடுதி என்றால் இந்த வசதிகள் எல்லாம் தேவைப் படுகிறது. குளிர் காலத்தில் வெளியே நின்று விளையாட முடியாது. உள்ளே நின்று விளையாட வசதி இல்லாது விடுதி நடத்த முடியாது போலும் எனச் சொரூபன் எண்ணினான்.

அதன் பின்பு மீண்டும் அனைவரையும் மேல் தளத்திற்கு இங்கிரி கூட்டிக் கொண்டு வந்தார். மீண்டும் வரவேற்பு அறைக்கு வந்த இங்கிரி எல்லோரிடமும் ஒவ்வொரு படிவத்தைக் கொடுத்து நிரப்புமாறு கூறிவிட்டு எங்கோ சென்று விட்டார். எல்லோரும் படிவத்தை நிரப்புவதில் மும்மரம் ஆகினர். "TS" தனது படிவம் நிரப்பி முடிந்ததும் பலருக்கும் உதவி செய்தார். எல்லோரும் நிரப்பி முடியவும் இங்கிரி திரும்பி வரவும் சரியாக இருந்தது.

இங்கிரி படிவங்களை வாங்கிச் சரி பார்த்தார். பின்பு அறைச் சாவிகளை எடுத்துக் கணக்குப் பார்த்து விட்டு ஒரு கொப்பியை எடுத்து முன்னுக்கு வைத்தார். பின்பு எல்லோரையும் பார்த்து,

"இங்கு ஒரு அறையில் இருவர் தங்க வேண்டும். நீங்களாகவே விரும்பிய இருவர் இருவராக வந்தால் உங்கள் அறைகளுக்கான சாவியைத் தருவேன்." என்றார். அதை அடுத்து ஏற்கனவே செஞ்சிலுவைச் சங்கத்தில் இருந்தது போல இருவர் இருவராகச் சென்று சாவிகள் வாங்கினார்கள். அந்தச் சில்லி நாட்டுக் குடும்பம் இரண்டு சாவிகளை வாங்கிக் கொண்டது. சாவிகளை வாங்கிய பின்பு எல்லோரும் தங்களது பைகளைத் தூக்கிக் கொண்டு அவரவர் அறைக்குச் சென்றார்கள். சிவாவோடு தங்குவதற்குப் பரமேசுக்கு விருப்பம் இல்லை என்றாலும் அவன் அதை வெளியே சொல்ல வில்லை. சொன்னால் அவன் அதை வைத்தே கிண்டல் அடிப்பானோ என்று பரமேசுக்குப் பயமாக இருந்தது. தங்களது அறை அந்தச் சில்லிக்காரியின் அறைக்கு அருகாக வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்கின்ற கற்பனை அவனிடம்.

அறைக்குச் சென்ற போது சில்லிக்காரியின் அறை பக்கத்தில் இருப்பது போலத் தோன்ற வில்லை. எங்கும் தமிழ் கேட்டது. தேனிலும் இனியது தமிழ் என்பார்கள். இன்று பரமேசுக்குத் வேப்பிலும் கொடிதாய் தமிழ் கசந்தது. தேனிலும் இனியது தமிழ் அல்ல ஸ்பானிஸ்... என்று அவன் எண்ணினான். அவன் எண்ணுவதோடு மட்டும் அதை வைத்துக் கொண்டான். தப்பித் தவறி சிவாவிடம் ஏதாவது கூறினால் அவன் துளைத்து எடுத்து, உரித்துத் தொங்கப் போடுவான் என்பதில் அவனுக்குச் சிறிதளவும் சந்தேகம் இல்லை.

சிவா அறைக்கு வந்த உடன் குளிக்கச் சென்றான். பரமேஸ் இந்த ஊட்டில் அனாகி எந்த அறையில் இருக்கிறாள் என்பதை அறிந்து வரத் தனது திறப்பை எடுத்துக் கொண்டு வெளியே சென்றான்.

"TS"சிற்கு மாறி வந்ததில் உண்டான களைப்பு, பசி ஆகிய இரண்டும் ஒன்று சேர அப்படியே கட்டிலில் காலை, கையை அகல நீட்டிக் கண் அயர்ந்து போனார். நிமலன் சிறிது நேரம் அவரைப் பார்த்துக் கொண்டு இருந்தான். இப்போது மெதுவாக அந்தப் பையை எடுத்துப் பார்த்தால் என்ன என்கின்ற எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது.

தற்சமயம் விழித்தால் என்கின்ற பயம் உடனே எழுந்தது. அவன் தனது எண்ணத்தை அந்தக் கணமே கைவிட்டான். அப்படியே அறையில் இருக்க அவனுக்குப் பிடிக்க வில்லை. கீழே மண்டபத்திற்குச் சென்றால் தொலைக்காட்சியில் ஏதாவது பார்க்கலாம் என்று எண்ணினான். அவன் தனது சாவியை எடுத்துக் கொண்டு கீழே வரவேற்பு அறையை நோக்கிச் சென்றான்.

கீழே சென்ற நிமலன்; சிறிது நேரம் தொலைக்காட்சி பார்த்தான். அது நோர்வே மொழியில் ஏதோ சொல்லியது. அவனுக்கு எதுவும் விளங்கவில்லை. விளங்குவதற்கு எவ்வளவு காலம் செல்லும் என்பதும் தெரியவில்லை. அங்கு வந்த ஈரானியன் ஒருவன் அதை "Sky News"க்கு மாற்றி விட்டான். அதன் பின்பு அரை குறை ஆங்கில அறிவில் ஒரு சில வசனங்கள் மட்டுமே அவனுக்கு விளங்கியது. சிறிது நேரம் இருந்து அதைப் பார்த்தவனுக்கு அலுப்பு அடித்தது. அவன் எழுந்து மீண்டும் தனது அறைக்கு வந்தான். வீட்டிற்குத் தான் இடம் மாறியது பற்றித் தொலை பேசியில் தொடர்பு கொண்டு சொல்ல வேண்டும் என்பது அவனுடைய முதல் விருப்பம். அதற்கு அவனிடம் பணம் இருக்க வில்லை. வியாழக் கிழமையே பணம் தருவார்கள். அதன் பின்பே இலங்கைக்குத் தொலை பேசியில் தொடர்பு கொண்டு அறிவிக்கலாம் என்று எண்ணினான். அது வரைக்கும் அவர்கள் என்ன நடந்தது என்கின்ற தவிப்பில் இருப்பார்கள் என்பதை எண்ண அவனுக்குப் பரிதாபமாய் இருந்தது. "TS"சிடம் காசு இருக்கலாம். என்றாலும் அவரைக் கேட்பதற்குக் கூச்சமாக இருந்தது. இன்னும் ஒரு நாளில் என்ன வந்து விடப் போகிறது? இவர்கள் பணம் தந்த உடன் இலங்கைக்குத் தொடர்பு கொள்ளலாம் என்று தன்னைத் தானே சமாதானம் செய்தவனாய் மீண்டும் கதவைத் திறந்து உள்ளே வந்தான்.

"TS" எழுந்து முகம் கழுவி விட்டு வெளியே போவதற்குத் தயாராக இருந்தார். அவன் வருவதைப் பார்த்து விட்டு,

"வெளிக்கிடும்... ஐஞ்சு மணிக்குச் சாப்பாடு எண்டவை. இன்னும் பத்து நிமிசமே இருக்குது. சாப்பிடப் போவம்." என்றார். நிமலனுக்கும் பசி பூமி விட்டு விண்ணில் தாவும் விண்கலத்தின் பின் பாயும் அனல் போல வயிற்றுக்குள் எரித்தது. அந்த எரிப்பில் இருந்து தப்பித்துக் கொள்வதற்காக அது வயிற்றை விட்டு தானும் வானுக்குத் தாவ எண்ணிக் குமுறியது. குடல் நிரந்தரமாகப் பிணியில்

இருந்து விடுபடுவதற்குப் பிரண்டு பிரண்டு தவித்தது. அதற்குக் கிடைப்பது கிடைத்தால் அது அமைதி அடையும் என்பது அவனுக்கு நன்கு விளங்கியது. அவன் அவசர அவசரமாய் சென்று முகம் கழுவினான். பஞ்சை விஞ்சும் மென்மை உடன் இருந்த துவாயால் முகத்தைத் துடைத்துக் கொண்டான். அவன் வெளிக்கிட்டு வந்த போது "TS" போவதற்குத் தயாராக எழுந்து நின்றார். அவனைக் கண்ட உடன்,

"மற்றவைக்கும் சொல்லிப் போட்டுப் போக வேணும்." என்றார்.

*

மேசைகளுக்கும் ஆடை அணிவித்து அதன் மேல் கண்ணாடிக் குவளைகள், தட்டுக்கள், கத்திகள், முள்ளுக் கரண்டிகள், கை துடைப்பதற்குக் கடுதாசி ஆகியன வைக்கப்பட்டு இருந்தன. குடிப்பதற்குக் குளிர் நீரும், பல வண்ணங்களில் பழரசமும் வைக்கப்பட்டு இருந்தன. அனைத்துப் பழரசக் குவளைகளுக்கு உள்ளும் ஆலம் கட்டிகள் மிதந்தன. இந்தக் குளிரிலும் இவர்களுக்கு குளிரின் மேல் இருந்த ஆசை சொரூபனுக்கு வியப்பை உண்டு பண்ணியது.

"இந்தக் கத்தி, கரண்டியால எப்படிச் சாப்பிடுகிறது? இந்தக் கோதாரி பெரிய வில்லங்கமா இருக்குமோ? கையால வடிவாச் சாப்பிடோணும் எண்டு ஆசையா இருக்குது... அப்பிடிச் செய்தா ஒரு மாதிரிப் பாப்பாங்கள் எண்டு யோசிக்கிறன்." என்றான் சண்முகம்.

"மற்றவை சாப்பிடுகிறதைப் பார்த்து மெது மெதுவாச் சாப்பிடப் பழகுவம்." என்றான் பக்கத்தில் இருந்த சுபத்திரன். அவனுக்கு தொலைபேசியில் அப்பாவைத் தொடர்பு கொண்டு புதினம் சொல்லவில்லை என்று கவலையாக இருந்தது. எங்கு நின்று அவர் மரத்தோடு மாரடிக்கிறாரோ என்கின்ற நினைவு அவனைக் கடுமையாக வாட்டியது. நாட்டுப் பிரச்சனை தீர்ந்தால் உழைத்துக் கொண்டு போகும் காசில் இயந்திர மரக்காலை போட்டு அதில் ராஜா மாதிரி இருக்க வேண்டும் என்று அவன் நினைத்தான்.

முதலில் பொரித்த கோழிகளைப் பெரிய வெள்ளித் தட்டில் கொண்டு வந்து ஆளுக்கு பாதிக் கோழியாக "கெலேனா"

வைத்துக் கொண்டு சென்றாள். பாதிக் கோழியை ஊரில் இதுவரை யாரும் சாப்பிட்டது இல்லை. பிரியாணி சாப்பிடும் போது ஒரு கோழிக் கால் வருவது உண்டு. ஊரில் ஒரு கோழி சமைத்தால் ஆறுபேர் அல்லது எட்டுபேர் பங்கு போடுவார்கள். இந்தியாவில் நிற்கும் போது கோழி வாங்கி உருளைக் கிழங்கும் போட்டுச் சமைத்தது றுபனுக்கு நினைவு வந்தது. இப்படிப் பாதிக் கோழியைச் சாப்பிடுவது பலருக்கு இதுவே முதன் முறை. பாதிக் கோழி தட்டில் பரிதாபமாய் கிடக்க வேண்டியதே விதியோ என்பதாகச் சண்முகத்தின் பொறுமை தொலைந்து ஏக்கம் அவஸ்தையாகத் தொடர்ந்தது. கரண்டி கத்தியால் எப்படி இதைச் சாப்பிட முடியும் என்பது அவனுக்கு பெரும் மலைப்பைத் தந்தது.

அதன் பின்பு தோலுரித்து அவித்த முழு உருளைக் கிழங்குகள் பெரிய கும்பா போன்ற பாத்திரத்தில் வந்தன. விரும்பிய அளவு எடுத்துக் கொள்ளலாம். அநியாயம். பொரித்த உருளைக் கிழங்கும் பிட்டும் சண்முகத்திற்கு நினைவு வந்தது. இருந்தும் சண்முகம் பயந்து பயந்து இரண்டு கிழங்குகள் எடுத்தான். அதை அடுத்துச் "Salad" வந்தது. அது எங்கள் சாப்பாட்டிற்குப் புதிது. "உந்த இலை குழையள யார் சாப்பிடுகிறது?" என்ற வண்ணம் சண்முகம் அதை எடுக்கவில்லை. "TS" கொஞ்சம் எடுத்தார். அவருக்கு அதைச் சாப்பிட்ட அனுபவம் உண்டு. சிவாவும் கொஞ்சம் எடுத்தான். மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று அவதானமாய் பார்த்தார்கள். "TS"ஐயும் சிவாவையும் விடச் சில்லி நாட்டவர்களும் சில ஈரானியர்களும் அதை எடுத்தார்கள்.

அவர்கள் எல்லாம் எடுப்பதைப் பார்த்து விட்டு அருளனும் குலமும் எடுத்தார்கள். அருளனும் குலமும் எடுப்பதைப் பார்த்துக் கொண்டு இருந்த நிமலனும் சுபத்திரனும் எடுத்தார்கள். மற்றவர்கள் அதை எடுப்பதாக உத்தேசிக்காததைத் தொடர்ந்து கிழங்கு, கோழிப் பொரியலுடன் சேர்த்துச் சாப்பிடுவதற்கு கறுத்தத் திரவமான கறி அனுப்பப் பட்டது. எல்லோரும் கொஞ்சம் கொஞ்சம் விட்டுக் கொண்டார்கள். றுபனுக்கு இந்தக் கோழிகளை வெட்டி தூள் போட்டுக் குளம்பு வைத்துச் சோறும் சமைத்து இருந்தால் வயிறு ஆறச் சாப்பிட்டு இருக்கலாம் என்று தோன்றியது. அப்படிக் கிடைக்க வில்லை. கிடைத்ததை எப்படி இந்தக் கத்தி கரண்டியால்

சாப்பிடுவது என்பது அவனுக்கு விளங்காமல் சினம் ஏற்பட்டது.

அனாகியைப் பார்த்துப் பார்த்து பரமேஸ் எல்லாவற்றையும் எடுத்து இருந்தான். அனாகி எல்லாவற்றையும் எடுத்த பின்பு ஐரோப்பியர் போல வெட்டி வெட்டிச் சாப்பிட்டாள். பரமேஸ் அப்படிச் சாப்பிட முயற்சி செய்தான். உயிர் உள்ள மீன் மாதிரிக் கத்தியும் முள்ளுக் கரண்டியும் கையை விட்டுப் பாய்வேன் என்று பயம் காட்டின. அந்தப் பயத்தில் அவனுக்குக் கைகள் நடுங்கின. கோழிப் பொரியலை வெட்டக் கத்தி சறுக்கித் தட்டில் விழுந்து டொங் டொங் என்று சத்தம் எழுப்பியது. பலரிடம் இருந்து அந்த டொங் டொங் சத்தத்தைக் கேட்ட அனாகி சிரிப்பதும் பரமேசைப் பார்ப்பதுமாய் இருந்தாள். அனாகி அப்படிச் செய்தது பரமேசுக்கு மேலும் நடுக்கத்தை உண்டு பண்ணியது. பெண்கள் எதற்காக அடிக்கடி சிரிக்கிறார்கள் என்பது அவனுக்கு விளங்கவில்லை.

இந்த டொங் டொங் சத்தத்தைக் கேட்டு ஒருவித நளினப் புன்னகையோடு மாயா உள்ளே சென்றுவிட்டாள். அவள் சாப்பிட்டு முடித்ததும் இரண்டாவது சாப்பாடாக ஐஸ்கிறீம் கொடுப்பதற்கான ஆயுத்தம் செய்தாள். அது கோண் ஐஸ்கிறீம் என்பதால் குளிர்சாதனப் பெட்டியில் உள்ளதை எடுத்து வந்து கொடுத்தால் சரி என்பதை விளங்கிக் கொண்டு அவள் அதன் பின்பு யாருக்கு ஆவது குடிப்பதற்குக் கோப்பி தேவைப் பட்டால் கொடுக்க வேண்டும் என்பதை நினைவில் இருத்தி அதைத் தயாரித்தாள். தொடர்ந்தும் சாப்பாட்டு அறையில் இருந்து டொங் டொங் சத்தம் வந்து கொண்டு இருந்தது.

திடீரென ஈரான்காரன் ஒருவன் கோழியின் காலை கை துடைக்கும் கடுதாசியால் பிடித்துக் கடித்துச் சாப்பிட ஆரம்பித்தான். அதைப் பார்த்த சண்முகன் உடனடியாக தானும் அப்படிச் செய்தான். அவனைப் பார்த்துப் பலரும் கத்தி கரண்டியை வைத்து விட்டுக் கோழியை ஒரு கை பார்த்தார்கள்.

உள்ளே நின்ற மாயாவுக்கு அதிசயமாக இருந்தது. திடீரென டொங் டொங் சத்தமே இல்லாமல் போய் விட்டதே என்று வியப்பாக இருந்தது. என்ன நடக்கிறது என்பது அவளுக்கு விளங்கவில்லை. அதைப் பார்த்து வர வேண்டும் என்ற எண்ணத்தோடு அவள் மீண்டும் சாப்பாட்டு அறைக்கு வந்தாள். கோழிக் காலில் கடுதாசியைச் சுற்றிப் பிடித்து பலரும் அதைக் கடித்துக் குதறினர். சிலர்

நெஞ்சுப் பகுதியையும் பேப்பரால் பிடித்து கடித்துக் காலி செய்தனர். உருளைக் கிழங்கு சாப்பிடத் தொடங்க மீண்டும் டொங் டொங் சத்தம் உண்டாகியது. மாயா உள்ளே சென்று பழரசம், நீர் ஆகியவை எடுத்து வந்தாள். அனாகி இந்தச் சாப்பாட்டைச் சாப்பிட்ட அழகின் பின்பு பரமேசுக்குத் தன்னைப் பற்றி என்ன நினைப்பாளோ என்கின்ற கவலையாக இருந்தது.

சாப்பிட்டு முடிந்ததும் 'கோண் ஐஸ்' கொடுத்தார்கள். அதிர்ஷ்டவசமாக அதை ஊரில் சாப்பிட்டுப் பழக்கம் இருந்ததால் பலருக்கும் ஒருவித நிம்மதி உண்டாகியது. இருந்து சாப்பிட நேரம் இல்லாதவர்கள் அதனுடன் எழுந்து தங்கள் அறைக்குச் சென்று விட்டார்கள்.

# 11 அவன் நினைவு

வியாழக் கிழமை சிறு செலவிற்கான பணம் கொடுக்கப் பட்டது. வெள்ளிக் கிழமை காலைச் சாப்பாடு சாப்பிட்டு முடிந்ததும் எல்லோருமாகப் புறப்பட்டு, கிட்டத்தட்ட நான்கு கிலோ மீற்றர் தூரம் நடந்து, அந்தத் தபால் அலுவலகத்திற்குச் செல்வதாகத் திட்டம். அங்கே கடிதம் அனுப்புவதற்கு முத்திரைகள் வாங்கலாம். அத்தோடு இலங்கைக்குத் தொலைபேசியும் அங்கே இருந்து கதைக்கலாம். பதினொரு தமிழரில் பத்து நபர்கள் அங்கு வருவதாக ஏற்கனவே கூறிவிட்டார்கள். பரமேஸ் மாத்திரம் அதைப் பற்றி எதுவும் கதைக்கவில்லை. அவனுக்கு சகுந்தலை போன்ற மனைவி ஊரில் இருந்தாள். தற்போது அவன் பிள்ளையை அவள் பிரசவித்து இருக்க வேண்டும். அதைப் பற்றிப் பரமேஸ் கவலைப் படுவதாய் தோன்ற வில்லை. அவன் தொலைபேசி கதைப்பதற்கு வருகிறேன் அல்லது இல்லை என்று சொல்லாததின் அர்த்தம் "TS"சிற்கு ஓரளவு விளங்கினாலும் அதை ஊர்யிதம் பண்ணிவிட்டுப் பெடியளோடு வெள்ளிக் கிழமை காலைச் சாப்பாட்டின் பின்பு நடந்து போவதாய் திட்டமிட்டு இருந்தார். பரமேஸ் ஒன்றும் சொல்லாததை அடுத்து "TS" அவனது அறைக்குச் சென்றார். "TS" சென்ற போது சிவா குளித்துக் கொண்டு நின்றான். பரமேஸ் கதவு அருகில் நின்றான். "TS"சைக் கண்டதும் ஒரு விதமாக நாணிக் கோணி சமைந்த பெண்ணான சாயலோடு சிரித்தான். இவன் ஏன் இப்படிச் சிரிக்கிறான் என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. இவன் போக்குச் சில நாட்களாகவே ஒரு மாதிரி இருக்கிறது என்று அவர் எண்ணினார்.

"அண்ண சொல்லிவிட்டு இருந்தா நானே வந்து இருப்பனே?" என்றான் பெரிய மரியாதை கொடுக்கும் தோரணையோடு.

"அது பருவாய் இல்லை. நீர் எங்களோடை நாளைக்கு போஸ்ற் ஒபீஸ் வாறீரா?" என்றார் "TS".

"போஸ்ற் ஒபீசுக்கு வந்து நான் என்ன செய்கிறது?"

"ஊருக்குப் போன் கதைக்க இல்லையா? கடிதம் போடே இல்லையா?"

"அதுக்கு இப்ப என்ன அவசரம்? அவள் கொஞ்சம் வெயிற் பண்ணட்டும். குறை நினைக்காதேங்க அண்ணை. நான் வர இல்லை." என்றான் பரமேஸ்.

"சரி." என்று விட்டு "TS" திரும்பி விட்டார். "TS"சிற்குக் கவலையாக இருந்தது. கட்டிய மனிசிக்குக் கடிதம் போடுவதைச் சுணக்குவது என்றால் அவர்களுக்குள் ஏதாவது பிரச்சனையாக இருக்க வேண்டும். உங்களுக்குள் ஏதாவது பிரச்சனையா என்று அவனைக் கேட்க வேண்டும் போல் அவருக்கு இருந்தது. ஆனாலும் அவனது குடும்பம் பற்றித் தெரியாமல் அப்படிக் கேட்பது முறையல்ல என்று நினைத்துத் திரும்பி விட்டார். எந்த அனுபவமும் இல்லாது அலமலக்கமான பதினேழு பதினெட்டு வயதில் திருமணம் செய்து இருப்பார்கள். சிறிய சிறிய பிரச்சனைகளைப் புரிந்துணர்வு இல்லாது பூதாகாரப் படுத்தி இருப்பார்கள். யாராவது புரியும்படி எடுத்துச் சொன்னால் அவர்கள் பிரச்சனையைத் தீர்த்து வைக்கலாம். அப்படி என்னால் புத்திமதி சொல்ல முடிந்தாலும் அதை இவன் ஏற்றுக் கொள்வானா என்பது அவருக்குத் தெரிய வில்லை. இப்போது அவனோடு எதுவும் கதைக்க முடியாது. முறையாகச் சந்தர்ப்பம் வரும் போது அதைப் பற்றிக் கதைப்போம் என்று எண்ணிய வண்ணம் "TS" திரும்பித் தனது அறைக்கு வந்து விட்டார்.

ஒன்பது மணி போல எல்லாரும் புறப்பட்டு விட்டார்கள். பரமேஸ் அறையில் இல்லாததைப் பார்த்து விட்டுச் சிவா, பரமேஸ் ஏற்கனவே புறப்பட்டு விட்டான் என்று எண்ணினான். அவனும் புறப்பட்டு வெளியே வந்தான். வெளியே வெள்ளிக் கதிர்களாகத் தகதகக்கும் சூரியனின் சுதர்சனம். குளிரை அறுத்து அவன் கதிர்கள் இதம் தந்தன. நடந்தால் ஏற்படும் இயக்கத்தில் உற்பத்தியாகும் சூட்டில் குளிர் ஒரு பொருட்டாகத் தெரியாது இருக்கும் என்று சிவா எண்ணிக் கொண்டான். "Adidas" பாதணிகளைப் பற்றிக் கனவு கண்ட காலங்கள் உண்டு. இங்கே கோடைக் காலத்தில் அணிவதற்கு அந்தப் பாதணிகள் வாங்கிக் கொடுத்து இருந்தார்கள். ஐரோப்பிய உடையே ஆள் பாதி ஆடை பாதி என்பதை நிறைவு செய்தன. பல உடுப்புகள் ஆசியாவில் இருந்து ஐரோப்பாவிற்கு வந்தாலும் இங்கு வரும் உடுப்புகளின்

தரம் ஆசியாவில் விற்பதை விடத் திறமாக இருக்கிறது. அதைவிட மற்றைய ஐரோப்பிய நாடுகளிலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் செய்யப்படும் ஆடைகளின் தரம் அதை அணிபவருக்கு ஒருவித கவர்ச்சியைத் தருகிறது.

"TS"சிற்கு ‘மற்றாஸ்’ விமான நிலையத்தில் பார்த்த இளைஞர்களுக்கும் இப்போது புறப்பட்டு உள்ள இளைஞர்களுக்கும் உலகப் புரட்சியே நடைபெற்று இருப்பதாகத் தோன்றியது. சிவாவும் வந்து சேர எல்லோரும் மெதுவாக நடக்கத் தொடங்கினார்கள். அப்போது சிவா "TS"சிற்கு அருகாக வந்து, "பரமேசைக் காணம்? அவனை விட்டிட்டுப் போகிறதே?" என்று தனது ஆட்சேபத்தைத் தெரிவித்தான்.

"நான் அவனை ஏற்கனவே கேட்டிட்டன். அவன் வரேல்லையாம். நாங்கள் போட்டு வருவம்." என்றார் "TS".

"வர இல்லையாமோ? எங்க போயிட்டான்? அவற்றை போக்கு இப்ப ஒரு மாதிரியே இருக்குது." என்றான் சிவா.

"அவை அவையின்ரை சுதந்திரம் அது. இந்த நாட்டின் சட்டமும் நடை முறையும் அது. நாங்கள் என்ன அண்ணனோ தம்பியோ அதட்டிக் கேட்க? கேட்டுப் பார்த்தன். அவர் வர இல்லையாம். அவருக்கு என்ன பிரச்சனை இருக்கு எண்டு எங்களுக்குத் தெரியாது தானே? அப்ப நாங்கள் அதுக்கு ஒரு முடிவும் காண முடியாது."

"நீங்கள் சொல்லுகிறதும் உண்மை. ஆனா, அவருக்கு என்ன பிரச்சனை எண்டு எனக்கு ஒரு ஊகம் இருக்குது. சரியாகத் தெரிஞ்ச பிறகு அதைப் பற்றிக் கதைக்கலாம். ஊரில மனிசி கற்பமா இருக்கேக்க அவளை விட்டிட்டு வந்தவன். இப்ப குழந்தை பிறந்திச்சோ இல்லாட்டி அதுகள் செல்லடிக்குப் பயந்து எங்க போச்சுதுகளோ எண்டு விசாரிக்காமல் இருக்கிறது எண்டா இவன் எப்பிடி ஆனவன்?"

"அவையின்ரை ஊரில ரெலிபோன் இருக்காது போல இருக்குது." என்றார் "TS".

"ரெலிபோன் இல்லாட்டிக் கடிதம் ஆவது போடலாம் தானே?"

"ம்…" என்றார் "TS". அதில் நாங்கள் என்ன செய்ய முடியும் என்கின்ற இயலாமை ஒளிந்து இருந்தது.

பாதையில் இப்போது பனிச் சறுக்குக் கிடையாது ஆதவனால் அது வதைக்கப்பட்டு தெரு சுத்தமாகத் தெரிந்தது. இடை இடையே மலையில் கரையும் பனி நீராகத் தெருவை இடை அறுத்துச் சென்றது. மலைகளில் இருந்து சிறு சிறு அருவிகள் ஆங்காங்கு ஆதவனின் அன்பான அரவணைப்பில் பனிநீர் சொரிந்தன. பச்சைத் துளிர்விடும் காலம் வந்ததான பூரிப்பில் இயற்கை எங்கும் முக்காடு போட்ட கன்னியைப் போல. மெல்லிய குளிர் இன்னும் தனது பிடியை விட விரும்பாது துரத்துவது போன்ற உணர்வு சில கணங்கள்.

சாம்பல் நிற ‘ஜீப்’வண்டி அவர்கள் நடக்கும் திசைக்கு எதிர்த் திசையில் சென்றது. அதன் சாரதி இவர்களைக் கடந்து போகும் போது கையை அசைத்துக் காட்டி விட்டுச் சென்றார். இவர்களும் பதிலுக்குக் கை அசைத்து முடித்த பின்பு தொடர்ந்து நடந்தார்கள். இந்தத் தெருவில் அதிக போக்கு வரத்து இருக்கவில்லை. அது அவர்கள் சுதந்திரமாக நடப்பதற்கான தயிரியத்தைக் கொடுத்தது. தெருவின் ஒரு பக்கத்தில் ஏரி ஒன்று நீண்டு கொண்டே வந்தது. அந்த நீர்ப் பரப்பில் இருந்த ஆலம் உடைந்து சிறுசிறு வெள்ளைப் பாளங்களாக வைரம் நீரில் மிதப்பது போல் மிதந்தன. அந்த நீர் மிகவும் குளிராய் இருக்கும் என்பது சொல்லாமலே விளங்கியது.

நிமலனுக்கு நடக்க அலுப்பாய் இருந்தது. இப்படி எவ்வளவு தூரம் நடப்பது என்கின்ற சலிப்பு ஏற்பட்டது. அவன் "TS"சைப் பார்த்து,

"என்ன அண்ணை பாதை இப்பிடியே நீட்டுக்குப் போய்க்கொண்டு இருக்குது?" என்றான்.

"நிமலன்... பாதை எண்டா அப்பிடிதான் நீட்டுக்குப் போய்க்கொண்டு இருக்கும்." என்று சொல்லி விட்டு அவர் நடந்தார். சிவா ஒரு விதமாக நிமலனைப் பார்த்தான். "TS" அண்ணையும் என்னை நக்கல் அடிக்கிறாரோ என்கின்ற வெப்பியாரம் நிமலனுக்கு வந்தது.

"நான் உண்மை ஆகவே கால் நோவில கேட்க்கிறன். நீங்க பகிடி விடுறீங்கள் அண்ணை?" என்றான் நிமலன்.

"நான் பகிடி விடேல்லை. நீர் பகிடி விடுகிறீர். ஊரில நடந்து திரியேல்லையே?"

"இல்லை எண்டு யார் சொன்னது அண்ணை. அது வெறுங் காலோடை எவ்வளவு தூரம் எண்டாலும் நடக்கலாம். இந்தச் சூவைப் போட்டுக் காலை வெட்டிப் போட்டுது. எப்பிடி நடக்கிறது சொல்லுங்க அண்ணை?" என்றான் நிமலன்.

"அதுக்கு அங்க சந்தியில பிளாஸ்ரர் இருக்கும் வாங்கிப் போடுவம். வா..." என்றார் "TS".

ஒருவாறு சந்தியை வந்து அடைந்தார்கள். சந்தியைத் தாண்டி நெடுஞ்சாலை ஒன்று சென்றது. அந்த நெடுஞ்சாலையில் இரண்டு பெட்டி பூட்டிய பாரவூர்திகள் மிகவும் வேகமாக ஓடின. அதை விடக் கார்கள், பேருந்துகள் எனப் பல வாகனங்களும் விட்டதைப் பிடிக்க வேண்டும் என்கின்ற வேகத்தில் சட்டெனப் பாய்ந்தன. அந்தப் பாதையில் ஊரைப் போல குண்டு குளிகள் இருக்கவில்லை. பாதை சீமேந்துத் தளம் போல அழுத்தமாகப் போடப்பட்டு இருந்தது. வாகனங்களை எந்தக் குலுங்கலும் இல்லாமல் தொண்ணூறு கிலோ மீற்ரர் அல்லது அதற்கு மேற்பட்ட வேகத்திலும் ஓட்டலாம். ஓடின. இந்தப் பெரிய வாகனங்கள் இந்த வேகத்தில் ஓடுவதை அவர்கள் இலங்கையில் கண்டது இல்லை. இங்கு அதைப் பார்க்கப் பார்க்க எல்லோருக்கும் வியப்பாக இருந்தது.

அந்தச் சந்தியில் சில கடைகளும் ஒரு தபால் அலுவலகமும் இருந்தன. வந்த அலுவலை முதலில் செய்து முடிக்க வேண்டும் என்பது எல்லோருடைய அவாவும் ஆகியது. அவர்கள் தபால் அலுவலகத்திற்குள் சென்றார்கள்.

தபால் அலுவலகம் வித்தியாசமாக இருந்தது. நிரையில் நிற்பதற்குப் பதிலாக அதற்கான சீட்டை ஒரு இயந்திரத்தில் அழுத்தி எடுத்துக் கொள்ள வேண்டி இருந்தது. அந்தச் சீட்டில் உள்ள எண் ஒரு மின் பலகையில் மின்னும் போது குறிப்பிட்ட எண்ணில் இருக்கும் அலுவலகர் உடன் கதைக்கலாம். "TS" அனைவர் சார்பாகவும் கதைப்பதற்குத் தயாரானார். அருளன், நிமலன், சொரூபன் ஆகியோர் கொழும்பில் உள்ள தங்கள் உறவினருடன் தொலை பேசியில்

தொடர்பு கொள்ள வேண்டும் என்றார்கள். அவர்கள் அதற்கான எண்ணைக் கையில் வைத்து இருந்தார்கள். மற்றவர்கள் தங்களுக்கு முத்திரையும், தபால் உறையும் வேண்டும் என்றார்கள். "TS" அந்த அதிகாரியோடு கதைத்தார். அந்த அதிகாரி தொலை பேசியில் தொடர்பு கொள்வது என்றால் அதிக பணம் செலவாகும் என்று விளங்கப் படுத்தினார். அப்படி இருந்தும் ஒவ்வொரு நிமிடம் என்றாலும் தாங்கள் கதைக்க வேண்டும் என்று அருளன், நிமலன், சொரூபன் ஆகியோர் கூறினர். அப்படியே அவர்கள் தொலை பேசியில் தொடர்பு கொண்டார்கள். பின்பு எல்லோரும் முத்திரையும், தபால் உறையும் வாங்கிக் கொண்டார்கள்.

தபால் அலுவலகத்தில் அலுவல் முடியப் பக்கத்தில் இருந்த கடைக்குச் சென்றார்கள். அந்தக் கடையில் இலங்கையில் பார்த்திராத விதம் விதமான பொருட்கள் கவர்ச்சியான பொதிகளில் விற்பனைக்குத் தயாராக இருந்தன. பல பொருட்களை வாங்கும் ஆசை பலருக்கும் துள்ளி எழுந்தது. ஆசைக்கு ஏற்ப கையில் பணம் இல்லை என்பதும் அவர்களுக்கு விளங்கியது. இப்போது ஏதாவது சாப்பிட்டுக் குடிப்பதற்கு வாங்கிக் கொண்டு செல்ல முடிவு செய்தார்கள். அதற்கான பணத்தைப் பங்கீடு செய்யலாம் என்று "TS" அறிவுரை கூறினார். அதன் படி இரண்டு நானூறு கிராம் உருளைக் கிழங்குப் பொரியல் பொதி வாங்கினார்கள். அதில் "Maarud" என்று எழுதி இருந்தது. அதை விட ஒன்றரை லீற்ரர் "Solo" என்கின்ற மஞ்சள் நிற நோர்வேத் தயாரிப்பான குளிர் பானமும், ஒரு ஒன்றரை லீற்ரர் "Coca-Cola"வும் வாங்கினார்கள். நிமலனுக்குப் பிளாஸ்ரர் வேண்டுமா என்று கேட்ட போது கடையில் மென்மையான காகிதம் எடுத்துப் பாதணிக்குள் வைத்துக் கொண்டதாகக் கூறினான். அவன் பிரச்சனை அப்படி முடிந்ததால் அனைவரும் கடையை விட்டு வெளியே வந்தார்கள். சிறிது தூரம் சென்று நெடுஞ்சாலை நன்கு தெரிகின்ற இடத்தில் நின்று அதைப் பார்த்த வண்ணம் உருளைக் கிழங்குப் பொரியலைச் சாப்பிட்டுக் குளிர் பானத்தையும் குடித்தார்கள்.

உருளைக் கிழங்குப் பொரியல் மொர மொர என்று ஊரில் பக்கோடக்காரன் கொண்டுவரும் மரவள்ளிக் கிழங்குப் பொரியலைவிட பப்படம் போல் முறுகலாகவும், பருமன் குறைந்தது ஆகவும் உப்புச் சுவையாகவும் இருந்தது. கூரிய தகட்டின் மொத்தத்தில் வட்டமாக எப்படி

இவர்களால் அதை வெட்ட முடிந்தது என்பது ஒருவருக்கும் விளங்கவில்லை. இந்த உருளைக் கிழங்குப் பொரியலைவிட ஊரில் பக்கோடா வண்டிக்காரன் கொண்டு வரும் மரவள்ளிக் கிழங்குப் பொரியல் பத்துமடங்கு மொத்தமாக இருக்கும் என்பதாக நிமலனுக்குத் தோன்றியது. உருளைக் கிழங்குப் பொரியலில் உப்பு சுவையோடு சாதுவான புளிப்புச் சுவையும் கலந்து இருந்தது பிரமாதமாய் சுவை தந்தது.

"Solo" என்கின்ற நோர்வே நாட்டுச் சொந்தத் தயாரிப்பான குளிர் பானம் தோடம்பழச் சுவை கொண்டது. இலங்கையில் குடிக்கும் நெற்றோ, பார்லி போன்றவற்றில் இருந்து வித்தியாசமான சுவை கொண்டது.

அனைவரும் உருளைக் கிழங்குப் பொரியலையும் சாப்பிட்டுக் குளிர் பானத்தையும் குடித்தார்கள்.

நெடுஞ்சாலையைப் பார்க்கப் பார்க்க மீண்டும் மீண்டும் வியப்பாக இருந்தது. இப்படி வாகனங்களை இலங்கையில் அவர்கள் பார்த்தது இல்லை. இ.போ.ச வின் கடகடத்த கண்ணாடிகள் வெடவெட என்று உதறும் பேருந்துகளும், சந்தைப் பக்கம் நின்று சரக்கையும், மனிதர்களையும் ஒன்றாக ஏற்றும் தட்டி வான்களும், "Ashok Leyland" பாரவூர்திகளும், ‘ஏபோட்டி’ கார்களும் அவர்களின் நினைவில் நின்ற வாகனங்கள். இங்கு அவற்றைச் சுத்தமாகக் காணவில்லை. காண்பவை எல்லாம் நவீனமாக, அழகாக, மின்னல் வேகத்தில் கண்ணைப் பறித்துக் கொண்டு ஓடின. அது பார்க்கப் பார்க்க அதிசயமாக இருந்தது. தாங்களும் அப்படியான கார்களை வாங்கி ஓட்ட வேண்டும் என்கின்ற ஆசை அவர்கள் மனதில் எழுந்தது. அது எப்பொழுது சாத்தியம் ஆகும் என்று எண்ணிய கணம் பெருமூச்சு அவசரமாகச் சிலரிடம் விடை பெற்றது.

"TS" இப்படியான வாகனங்களை மத்திய கிழக்கில் விரிந்த பாலைவனத்தில் பரந்து கிடக்கும் நெடுஞ்சாலைகளில் பார்த்து இருக்கிறார். அவருக்கு அவற்றை அதிக நேரம் பார்த்துக் கொண்டு நிற்பது சுவாரசியமாக இருக்கவில்லை. மத்திய கிழக்கில் இல்லாத இயற்கை அழகு இங்கு இறைவன் செயலால் எங்கும் மலிந்து கிடக்கிறது. அது அவரது மனதைக் கவர்ந்தது. இந்த வாகன இரைச்சலில் இருந்து விலகிச் சென்று மலை அடிவாரத்தில் நின்று சிற்றருவிகளைப் பார்க்கலாம் என்று அவருக்குத்

தோன்றியது. அவர் தனது எண்ணத்தைச் சிறிது தாமதப் படுத்தினார். இளைஞர்களின் ஆசையை இப்போதே குழப்ப வேண்டாம் என்று மேலும் ஒரு அரை மணித்தியாலம் காத்திருந்தார். பின்பு,

"இனி நாங்கள் போவமே?" என்றார்.

"இன்னும் கொஞ்ச நேரம் நிக்கலாம் அண்ணை." என்றான் நிமலன்.

"ஏன் உனக்கு இஞ்சையே சாப்பாடும் கொண்டு வந்து தரச் சொல்லவே?" என்றான் சிவா. "TS" சிரித்தார்.

"ஐயோ சாமி உந்தக் கடி வேண்டாம். நாங்கள் போய்ச்சேருவம்." என்றான் நிமலன். அதை யாரும் மறுக்கவில்லை. எல்லோரும் அசையத் தொடங்கினார்கள்.

# 12 தோணிகள் ஓட்டி

என் நிர்வாணத்தின் நிறம் நீலம் என்பதாக வானம் நாணம் துறந்து, வெள்ளாடையான மறைப்பைத் தூரே எறிந்து, அம்மணக் கோலம் காட்டியது. குளிரின் பிடி தளர்வதில் பீரிட்டு ஓங்கிய கதகதப்பு. மெல்லிய காற்றிற்கு ஏற்பத் தாளம் போடும் சிறு அலைகள். வானத்தின் அம்மணத் தோற்றத்திற்கு ஏற்ப நீல வண்ணத்தைத் தரையில் காட்டுவேன் என்கின்ற பிடிவாதம் போன்ற அந்தக் குடாவின் தோற்றம். கரையில் கிடக்கும் சிறு கற்களை முத்தம் இட்டு, மறைந்து, மீண்டும் திரும்பி வந்து அவசரமாக முத்தம் இட்டு சரசமாடிக் கரைகண்டு மரித்துப் போகும் அலைகள். மரிப்பில் மரணம் அல்ல ஜனனம் எழுதும் அதன் புது வரிகள். அதன் சரச ஆட்டத்தில் பொங்கி வழிந்த வெண் நுரை. மீனைக் குறி வைத்த புள்ளினம், விமானங்கள் இடம் மாறி நீரைப் பிளந்து செல்வது போலத் தலை கீழாக நீரை ஊடறுத்த வேகம். கௌவ்விய மீனோடு மீண்டு ஏவுகணைகளாக மேல் எழும்பும் அவற்றின் வெற்றிக் களிப்புகள். குஞ்சின் இருப்பிடம் நோக்கி, அலகில் கொண்ட மீனோடு பறக்கும் அவற்றின் அவசரம். பாசத்திற்கும் நேசத்திற்கும் ஆறறிவு தேவை இல்லை என்கின்ற இயற்கையின் அற்புதம். தூரத்தில் மலை மலையாய் நிமிர்ந்து நிற்கும் தீவுகள். குளிர் காலம் அடைந்து கிடப்பதும், கோடைக் காலம் வெளியில் ஆடித் திரிவதும் சுதேசிகளின் ஆதிகாலம் தொட்ட வழக்கமாக. அதை வந்தேறு குடிகளும் தத்து எடுத்ததாய் மாற்றங்களில் வந்த சிறிய தடுமாற்றம். அவசரம். ஆனந்தம். தோணிகள் ஓட்டி விளையாடிடுவோம் என்ற முண்டாசுக்காரனுக்கும் துள்ளி ஓடும் அவாவைத் தந்திடும் அற்புத இயற்கை.

அந்தக் கரையில் சிறிய தோணிகள் கட்டும் தளம் இருந்தது. அது பொழுது போக்கிற்கான தோணிகள் கட்டும் தளம். அந்தத் தோணியில் நான்கு ஐந்து ஆட்கள் இருந்து துடுப்பால் வலித்துச் செல்லலாம். இயலும் என்றால் கடலுக்குள் மலையாக எழுந்து நிற்கும் தீவுவரை செல்லலாம். அங்கே பறவைகளின் சுதந்திர இராச்சியம் எப்படி இருக்கிறது என்று பார்த்து வரலாம்.

கடலில் தோணி ஓட்டும் அடங்கா ஆசையை முதலில் தெரிவித்தவன் பரமேஸ். அவன் சொன்னதைக் கேட்ட பின்பு குலமும், திருநாவும் அவனோடு சேர்ந்து

கொண்டார்கள். அவர்கள் தங்களோடு எல்லோரையும் வருமாறு கேட்டு வற்புறுத்தினார்கள். எல்லோருக்கும் அப்படி உல்லாசமாக நீரில் மிதந்து விட்டு வருவதற்கு ஆசையாக இருந்தது. அதில் சிலருக்கு அறவே நீந்தத் தெரியாது. இவர்களை நம்பிப் போய் இடையில் ஏதாவது நடந்து விட்டால் என்கின்ற தயக்கம் சிலருக்கு இருந்தது.

அந்த மூவரின் ஆர்ப்பாட்டத்திற்கும் ஆக்கினைக்கும் அடிபணிந்து எல்லோரும் அந்தச் சிறிய துறைமுகத்திற்குச் சென்றார்கள். இரண்டு வள்ளங்கள் அங்கு நின்றன. அவை எட்ட நின்றதில் கடல் நீர் காலிற் படாது வள்ளங்களில் ஏறுவதற்கு யாராவது உதவி செய்ய வேண்டும் என்கின்ற நிலை.

"யாராவது ஒரு ஆள் இறங்கோணும். இறங்கி வோட்டைத் தள்ளினால் மற்றவை நனையாமல் வோட்டுக்க ஏறலாம்." என்றான் பரமேஸ்.

யாரிடம் இருந்தும் சத்தம் வரவில்லை. "TS"சிற்கு ஒரு மாதிரி இருந்தது. தான் இறங்கித் தள்ளிவிட எண்ணினார்.

"இதுதான் தமிழர்... பாருங்க அண்ணை... யாராவது அசையிறாங்களோ எண்டு?" என்று "TS"சைப் பார்த்துக் கூறிய வண்ணம் தனது பாதணிகளைக் கழற்றி நிமலனிடம் கொடுத்து விட்டு, ஜீன்சை முழங்காலுக்கு மேலாக மடித்து விட்டான் சிவா. அவன் இறங்குவதைப் பார்க்க "TS"சிற்குக் கவலையாக இருந்தது.

"கவனம் சிவா குளிர் காலைத் தின்னும்." என்றார்.

"ம்." என்ற வண்ணம் அவன் இறங்கினான்.

"ஐயோ ஐயோ என்ற வண்ணம் துள்ளித் துள்ளி அவசரமாக வள்ளத்தைத் தள்ளிப் பிடித்தான். விறைச்சுப் போட்டுது... விறைச்சுப் போட்டுது... கெதியா ஏறுங்கோ." என்று கத்தினான். அவன் கத்தலையும் துள்ளலையும் பார்த்த மற்றவர்கள் அவசரமாக வள்ளத்தில் ஏறினார்கள். சிவாவிற்கு விறைப்புத் தாங்க முடிய வில்லை. அவன் வள்ளத்தில் ஏறினான். பரமேஸ் வள்ளத்திற்கும் துறைக்கும் இடைவெளி பெரிதாகாது கையால் துறைமுகக் கட்டைப் பிடித்தான். திருநாவும் ஏற்கனவே புத்தியாக அப்படியே பிடித்து இருந்தான். வள்ளத்திற்கு உள் ஏறிய பின்பு சிவா ஐயோ ஐயோ என்றான்.

"அண்ணை அந்த இயமனின் உலகத்தில எத்தினையோ விதம் விதமான தண்டனை இருக்குதாம். இப்பிடிக் குளிர் தண்ணியில நிற்க விடுகிற தண்டனையும் இருக்குதே அங்க அண்ணை? அப்பிடி அது இல்லாட்டி அதை நாங்கள் இயமதர்ம ராஜாவுக்கு அறிமுகம் செய்து வைக்க வேணும். சில வேளை சந்தோஷத்தில நேரடியா எங்களைச் சுவர்க்கத்திற்கு அனுப்பி வைச்சிடுவார் எண்டு நினைக்கிறன்." என்றான்.

"நான் இறங்கி இருக்க வேணும். உம்மை விட்டிட்டன்." என்றார் "TS".

"சீ அது இல்லை அண்ணை... ஆனா, மயக்கம் வாற மாதிரி விறைப்பு ஏறுது. இன்னும் கொஞ்ச நேரம் நிண்டா விறைச்சே செத்துப் போயிடுவன்." என்றான் சிவா.

"இப்படிக் குளிரில விறைச்சு இங்க, அமரிக்காவில சனங்கள் சாகிறதும் உண்டு." என்றார் "TS".

"நரகம் எண்டா அதாகத்தான் இருக்கும்." என்றான் சிவா.

"ம்... நெருப்பில வெந்தாலும் குளிரில விறைச்சாலும் நரகமே." என்றார் "TS".

இரண்டு வள்ளங்களிலும் ஐந்து ஆறு என்பதாக ஏறினார்கள். ஒன்றில் மூன்று மிதக்கும் மேல் அங்கிகள் இருந்தன. அடுத்ததில் நான்கு மிதக்கும் மேல் அங்கிகள் இருந்தன. "TS" ஒரு மேல் அங்கியை எடுத்து மாட்டிக் கொண்டு,

"இதில யாருக்கு நீந்தத் தெரியாதோ அவை முக்கியமா இதைப் போடுங்கோ..." என்றார்.

"எனக்குத் தேவை இல்லை. நான் சூப்பரா நீந்துவன்." என்றான் அருளன்.

"என்ன சூப்பரா நீந்தினாலும் இந்தக் குளிருக்க ஐஞ்சு நிமிசத்தில கை கால் மரமா விறைச்சுப் போயிடும். அதுக்குப் பிறகு ஆண்டவன் வந்தாலும் காப்பாத்த முடியாது. கை கால் விறைச்சு மரத்துப் போன பிறகு இதில ஒண்டும் வீரம் பேச முடியாது. ஆனா... எல்லாருக்கும் மேலங்கி இல்லாததால ஆரும் நீந்தத் தெரிஞ்சவை அந்த றிஸ்க் எடுக்க வேணும். சிவா

இப்பவே விறைச்சுப் போயிட்டான். அவனை விட்டிட்டு வேற யாரும் அந்த றிஸ்க் எடுக்க வேணும்." என்றார் "TS".

"அதை நான் எடுக்கிறன். உதைக் கட்டுகிறதிலும் பிறீயா கையக் காலை நீட்டி இருந்தாத்தான் வோட்டில போய் வாற சுகம் தெரியும்." என்றான் அருளன்.

"சரி நீர் அதைச் செய்யும்." என்றார் "TS". சிவா அருளனைப் பார்த்துச் சிரித்தான். ம்... ம்... நான் அசைய மாட்டேன் என்பது போல அருளன் இருந்தான். பரமேசும் குலமும் ஒவ்வொரு கரைக்கு இருந்து துடுப்புப் போட்டார்கள். மற்றைய வள்ளத்தில் திருநாவோடு திருநாவிடம் பயிற்சி பெற்ற பின்பு றுபனும் துடுப்பு வலித்தான். வள்ளங்கள் சிறு அலைகளைக் கிழித்த வண்ணம் அந்த மர்ம மலைத் தீவை நோக்கிச் சென்றன. அந்த மலைத் தீவின் அழகை, அங்கு வாழும் பறவைகளைப் பார்க்க வேண்டும் என்கின்ற அவா எல்லோரிடமும் அலை மோதியது. அந்த மலைத் தீவு இந்தத் துறைமுகத்தில் இருந்து இரண்டு கிலோ மீற்ரர் தூரம் தள்ளி இருந்தது. பரமேசிற்கும் குலத்திற்கும் பழக்கம் இருந்ததால் ஒரு சீராக வள்ளம் சென்றது. றுபனுக்கு இதில் பழக்கம் இல்லை. அவன் கடுமையாக முயற்சித்தான். வள்ளம் வளைந்து நெளிந்து கடும் முயற்சியின் பின்பு நிமிர்ந்து, மிண்டும் வளைந்து என்று அவர்கள் நகர்வு பாம்பு நகர்வாக அலை மோதியது. அவர்களுக்காகப் பரமேசும் குலமும் தங்களது வள்ளத்தின் வேகத்தைக் குறைக்க வேண்டியது ஆகிற்று.

அரை மணித்தியாலத்தில் மலைத் தீவிற்குப் போய் விடலாம் என்று நினைத்த பரமேசிற்கு இப்போது ஒரு மணித்தியாலத்திற்கு மேல் அதற்குத் தேவைப்படும் என்பது விளங்கியது. றூபன் தன்னால் பயணம் மினக்கெடுவதாய் எண்ணி அவதி அவதியாக வலிக்க அது மேலும் பாம்பு ஓட்டம் ஓடியது. "அவசரப்படாதையும்." என்று திருநா பல முறை சொல்லிப் பார்த்தான். றூபன் கேட்பது போலத் தெரியவில்லை. அவன் மேலும் மேலும் அவசரமாகப் பலமாகத் துடுக்கை வலித்தான். திருநாவுக்கு அவன் வலிப்பதைப் பார்க்க பயமாக இருந்தது. பழக்கம் இல்லாதவர்களோடு வந்தால் இதுவே பிரச்சனை என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டான்.

திடீரெனப் பெரிய அலை ஒன்று வள்ளத்தை நோக்கி வந்தது. மேடாகத் திருநாவின் பக்கம் மோதியது.

வள்ளத்தை அலை தன் முதுகு மீது தூக்கிப் பள்ளமான றூபன் பக்கம் அமிழ்த்தியது. றூபன் வள்ளம் நேராகப் போகின்றது இல்லையே என்கின்ற ஆக்ரோசத்தோடு அவன் பக்கம் சரிந்த போதும் பலமாக நீரைக் குத்தி வலிக்க முயன்றான். நீரில் துடுப்பு விழும் தூரம் பாதாளமாக, றூபன் தலை குத்துக்கரணமாக விழுந்தான். எல்லோரும் திகைத்துப்போய் விட்டார்கள். இப்படி விழுவான் என்று எவரும் எதிர் பார்க்கவில்லை. றுபனுக்குக் கொஞ்சம் நீச்சல் வரும். விழுந்தவன் மிதந்தான். மற்றவர்களை வள்ளத்திற்குள் குந்தி இருக்கச் சொல்லி விட்டுத் திருநா தனது மேலங்கியைக் கழற்றி ஒரு கையின் தொங்கலைப் பிடித்துக் கொண்டு மறு கரையை வீசினான். றூபன் அதைப் பிடித்தான். றுபனின் கையைத் திருநா எட்டிப் பிடித்தான். எதிர்க் கரைக்கு அரங்கி இருக்குமாறு மற்றவர்களுக்குத் திருநா கண் பாசை காட்டினான். றூபனை இழுத்து வள்ளத்திற்குள் போட்டான். றூபன் குளிரில் நோய்க் கோழி போல நடுங்கினான். உதறல் அவனை தூக்கித் தூக்கிப் போட்டது. அவனைப் பார்க்க மற்றவர்களுக்குப் பயமாக இருந்தது. எல்லோரும் மேல் அங்கிகளைக் கழற்றி அவனைப் போர்த்தனர்.

திருநா துடுப்பை எடுத்தான். வள்ளத்தைக் கரையை நோக்கித் திருப்பினான். தனியே தான் மட்டும் துடுப்பை வலிக்கத் தொடங்கினான். அவன் பின்பு மற்றைய வள்ளமும் வந்தது. றூபன் குளிரில் தொடர்ந்து நடுங்கினான். அவனது கையை எடுத்து தனது கையால் சொரூபன் உரசினான். சுபத்திரன் அவனைப் பார்த்து காலைச் சூடாக்க உரசினான். றுபனின் துள்ளல் குறைந்தாலும் நடுக்கம் தொடர்ந்தது. திருநா துடுப்பை வேகமாக வலித்தான். அவனுக்கு முதலே பரமேசும், குலமும் கரைக்குச் சென்று விட்டார்கள். "TS" நிமலனைப் போர்வையை எடுத்து வருமாறு அனுப்பி வைத்தார். அவன் ஓடிப் போய் அதை எடுத்து வந்தான். இவர்கள் கரையை அடையவும் நிமலன் வரவும் சரியாக இருந்தது.

இரண்டு நாட்கள் பயத்தில் அந்தப் பக்கம் ஒருவரும் போகவில்லை. மூன்றாம் நாள் ஆதவன் பூமிக்கு இறங்கி வந்ததாக வெயில் கொளுத்தியது. "TS", பரமேஸ், குலம், சிவா, திருநா ஆகியோர் மலைத் தீவுக்கு மீண்டும் போனார்கள். "TS"சிற்கு அந்தத் தீவில் ஒரு வீடு கட்டிக் குடும்பமாக வாழ வேண்டும் என்கின்ற பாரதியின் ஆசை மனதில் எழுந்து நின்று கூத்தாடியது. ஆசைகள் ஆயிரம்

இருக்கலாம். ஆவது எது என்கின்ற யதார்த்தம் அவருக்கு விளங்கத் தொடங்கியது. அந்த அற்புத இயற்கையின் அழகை விட்டு வர அவருக்கு மனது ஒப்பவில்லை. மற்றவர்களுக்குப் பசிக்கத் தொடங்கி விட்டது. மனம் இல்லாது வள்ளத்தில் ஏறி இக்கரை வந்தார். அவர் அன்று சாப்பிடப் போகவில்லை. அறைக்கு உள்ளேயே அடைந்து கிடந்தார். இவருக்கு என்ன கஷ்டம் என்பது நிமலனுக்கு விளங்கவில்லை. "TS" சாப்பிட வரவில்லை என்பது சிவாவுக்கும் வியப்பை உண்டு பண்ணியது. அவரவர் மனதில் ஆயிரம் கவலைகள் இருக்கும். எல்லாவற்றையும் பிறத்தியாரிடம் சொல்ல முடியுமா என்று சிவா எண்ணினான். அவரது அறைக்குச் சென்று அவரோடு கதைக்க வேண்டும் என்று எண்ணினாலும் அது அவரது அமைதியைக் கெடுப்பதாக இருக்கும் என்று எண்ணியவன் தனது அறைக்குச் சென்றான்.

# 13 அனாகி

இயற்கை பல மில்லியன் ஆண்டுகள் பரிசோதனை செய்ததின் விளைவு இன்றைய உலகமும் அதில் வாழும் உயிரினங்களும். உயிர் இனங்களைப் பெருக்கி தனது செழிப்பை பார்த்துக் கொள்ள அந்த இயற்கைக்குப் பலமும், திறமும் உண்டு. உயிர் இனங்களை ஆண், பெண் என்று பிரித்து, அவற்றிற்குத் தாங்க முடியாது தவிக்கும் காமத்தை உள்ளே உணர்வாகக் கொடுத்து, இச்சையில் விழ வைத்து, சந்ததி பெருக்கும் காரியத்தை அது வீரியமாகச் செய்கிறது. ஆறு அறிவு படைத்த மனிதனாற்கூட, இல்லை அவனைப் படைத்த கடவுள்களாற்கூட வெல்ல முடியாத வல்லமை கொண்டதாக அது இருக்கிறது. பெண்களிடம் என்ன இருக்கிறது? ஆண்களிடம் அதற்கு மாறாக என்ன இருக்கிறது? ஏன் பெண் ஆணை விரும்புகிறாள்? ஏன் ஆண் பெண்ணை விரும்புகிறான்? ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகக் கேட்கப்படும் கேள்வி இது. தெரிந்தும் தெரியாததும் ஆகிய விடையின் குழப்பமான கோர்வை.

விரும்புதல் ஒரு வகை. வித்துப் பரப்ப காதலாகிப் பித்து ஆகுவது இன்னொரு வகை. போதை தரும் போதைப் பொருள் நேரத்தோடு தீர்ந்து போகலாம். காதல் காலை முதல் மாலை வரை கணங்கள் யாவும் நிறைந்த இன்பமாக… வேதனையாக… அதன் இலக்கை அடையும் வரை… அடைந்த பின்பும்… சந்ததி உருவாக்க… அது வெறி கொள்ள வைக்கிறது. அத்தோடு அனேகரில் அதன் வலுச் செத்துப் போய் விடுகிறது. அந்த வலுச் சாகும் வரையும் நிலைத்து இருந்தால் அது வரமாகிவிடும். வரங்களோ சாபங்களோ இயற்கை கொடுக்கும் கட்டளை ஒன்றே. இனவிருத்தி என்கின்ற இயற்கையின் மீறமுடியாத பணிதான். அதை நீ காதல் என்றும் சொல்லலாம். காமம் என்றும் சொல்லலாம். கலியாணம் என்றும் சொல்லலாம். தெய்வீகம் என்றும் சொல்லலாம். உணர்ச்சியின் முறுக்கு. அந்த முறுக்கில் உண்டாகும் இயக்கம். இயக்கத்தின் இறுதி விளைவின் பயணம். பயணத்தின் இலக்கு ஒன்று இரண்டாகும். தாய் வாழையின் கிழங்கிலேயே குட்டி உருவாகும். அதுவும் குலை போட்டபின் அதன் காலில் குட்டி உருவாகும். மில்லியன் மில்லியன் ஆண்டுகளாக இயற்கையை வெல்ல முடியாத உயிரினம். சந்திரனுக்குச் செல்லலாம். செவ்வாயில் வீடு கட்டலாம். சுந்தரிகளுக்கும்,

சுந்தரர்களுக்கும் சுகமான இந்தத் தவிப்பு மாத்திரம் என்றும் மாறாது.

போதை ஏறும் போது அன்றாட வாழ்வில் புத்தி என்கின்ற சமுதாயத்தின் விஷப் பாடத்தின் வித்தியாசங்களும், வேறுபாடுகளும் தற்காலிகமாய்க் கரைந்து போய்விடும். காதல் என்பது மனித மூளையை முற்றாக மயக்கும் போதை. கனவில் நினைக்க முடியாததும் காதலில் இமைப் பொழுதில் நடந்தேறும். அது காதல் வெறியின் உக்கிரம்.

காதல் எப்போது வரும்? எவர்மீது வரும்? என்பது யாருக்கும் தெரியாது. அது எதற்காக வருகிறது என்பது புரிகிறது. பேதங்கள் தாண்டிக் காதல் வருவதாய் மனிதர்கள் எண்ணுகிறார்கள். அந்தப் பேதங்களின் கலப்பே வீரியம் என்பதை எண்ணிய இயற்கை தரும் மாயை அது என்பதை அவர்கள் மறந்து போய் விடுகிறார்கள். பேதங்கள் தாண்டி அல்ல, வீரியம் தேடும் இயற்கைக்குப் பணிந்து நடக்கும் ஜாலங்கள். மனிதன் இருக்கும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு கணத்திலும் இயற்கையின் இந்த ஜாலம் நடக்கிறது. எங்கள் இலக்கியங்களில் அது உருபிலாதவன் வேலை ஆகச் சித்தரிக்கப் படுகிறது. இந்த உணர்ச்சிக்கும் உருபில்லை. எந்த உருவத்தையும் கிறங்கடிக்கும் வலு அதற்கு இருக்கிறது.

ஊரை நினைப்பதற்கே மனது சலித்தது. ஊரில் உள்ளவர்களை நினைப்பதற்கும் மனது அதைவிடச் சலித்தது. முகவரி இல்லாது இவர்களோடு தொலைந்து போய்விட வேண்டும் என்று தோன்றியது. இங்கும் தனித்து வரவில்லை. தமிழர்களோடு வந்தாகிற்று. நளனைத் தலையில் சுமந்த தமயந்தி போல யாழ்ப்பாணத்துக் கலாச்சாரத்தைப் பௌத்திரமாகச் சுமந்து வந்தவர்கள் மத்தியில் வாழ்வது யதார்த்தம் ஆகிறது. அதனால் ஒளிவு மறைவு இன்றிக் காதல் செய்யும் துணிவு எங்கும் வருவது இல்லை. தமிழர்களின் சீழ் வடியும் கலாச்சாரம் ஒரு புறம். அவளின் அப்பா இன்னொரு புறம். இரண்டும் தாண்டி அவளை எங்கே கண்டு எப்படிக் கதைப்பது என்பது அவனுக்கு விளங்கவில்லை. சந்தர்ப்பம் கிடைத்தாலும் கதைக்க முடியாதபடி மொழி தடை போடுகிறது. யார் இவ்வளவு மொழிகளையும் கண்டு பிடித்தார்கள்? இயற்கை ஏன் அதில் கோட்டை விட்டது? தனது வீரியத்தைப் பெருக்கத் தடையாகும் மொழிக்கு எப்படி அது இடம்

கொடுத்தது? மனிதன் இயற்கையை மொழியால் வென்று விட்டான். ஆயிரம் ஆயிரம் மொழிகளை உருவாக்கி அதன் வீரியத்தைக் குறைத்து விட்டான். தேசங்களைப் பிரித்து இன்னும் துரோகம் செய்து விட்டான்.

எப்படி என்று விளங்க இல்லை. எப்படி என்றாலும் பார்த்தாக வேண்டும் என்று மனது கிடந்து இடை விடாது புழுவாய் துடித்தது. பரமேஸ் அறைக்குள் இருக்கப் பிடிக்காது அலைந்து திரிந்தான். அவளைக் காணவில்லை. தனது அறைக்கு முன்னே உள்ள ஒரு கதிரையில் இருந்து எதையோ யோசிப்பது போலப் பாவனை செய்வோம் என்று எண்ணினான். அவன் பாவனையிற்கூட அவளே ஏகமாக வந்தாள். அவள் உருவம்... அவள் நடை... அவள் பேச்சு... அவனால் அதில் இருந்து விடுதலைப் பெற முடியாது என்பது விளங்கியது.

துரோகமா? உரிமையா? என்று அவனுக்கு விளங்கவில்லை. இப்போது பிள்ளை பிறந்து இருக்கும். எப்போது எடுப்பேன் என்று எதிர் பார்ப்பாள். அவளோடு வாழ்ந்து சலித்து விட்டது. ஏதோ ஒன்று அவளிடம் இருந்து விடுபடு என்கிறது. இவளா? இவள் அழகா? இளமையா? மனிதனின் அற்புத உணர்வுகளான காமமும் காதலுமா? அதுவே அவன் சத்திராதியாகத் தோன்றியது. பரமேஸ் கதிரையில் இருந்து பலவாறு எண்ணினான்.

அவனுக்கு அவளது அறைக்கே செல்ல வேண்டும் போல் வெறி எழுந்தது. தாய் தகப்பன் கண்டால் கலவரம் ஆகலாம். கைகலப்பில் முடியலாம். சமாதானத்திற்கு "TS" தொடக்கம் எல்லோரும் ஓடி வரலாம். அவனுக்கு அது அவமானம் ஆகிவிடும். இழிநிலையாகப் பார்க்க வழிவகை செய்துவிடும் என்பது விளங்க மீண்டும் பரமேஸ் குழம்பினான்.

பரமேஸ் எழுந்தான். நடந்து அவளது அறைக்கு முன்னே வந்து நின்றான். இரு முறை செருமினான். பின்பு அவசரமாக அவளது அறையை விட்டு தூரே போய் நின்றான். கதவு திறந்தது. பரமேஸ் மறு பக்கம் திரும்பிப் போவது போல நடந்தான். நடக்கும் போது மீண்டும் திரும்பிப் பார்த்தான். அவள் கதவைத் திறந்து பார்த்துக் கொண்டு நின்றாள். நான் கீழே போகிறேன் என்று கைப் பாசை காட்டினான். அவள் ம்... ம்... என்று தலையை ஆட்டினாள்.

இப்படி அதிர்ஷ்டம் அடிக்கும் என்று அவன் எதிர்பார்க்க இல்லை. அதன் பின்பு அவன் அவளை நினைவில் வைத்துப் புற உலகை மறந்தான். அவள் கண்கள். அதன் நளினம். கண்ணின் மின்னல் ஒளி. பற்களின் பவளப் பளிங்கு. பார்வையில் இருக்கும் இறைஞ்சலும் கெஞ்சலும். காதல் செய்ய வேண்டும். காதல் செய்து காலம் பூராகவும் அவளோடு வாழ வேண்டும் அல்லது அவள் கண்களைப் பார்த்த வண்ணம் மாள வேண்டும் என்று பரமேசிற்கு தோன்றியது.

பரமேஸ் நடந்தான். படிகளால் இறங்கிக் கீழே சென்றான். விளையாட்டு அறைக்குள் ஈரானியர்கள் நின்று விளையாடினார்கள். வழமையாக நிமலனும் சொரூபனும் நின்று "Table Tennis" விளையாடுவார்கள். இப்போது அவர்களைக் காணவில்லை. இடைக்கிடை கடுதாசி விளையாடுவதும் அவர்கள் வழக்கம். இப்போது என்ன செய்கிறார்கள்? எப்போது இங்கு வருவார்கள் என்பது அவனுக்குத் தெரியவில்லை. அவர்கள் வராமலே இருந்துவிட வேண்டும். அதுவே தனக்கும் அவளுக்கும் நல்லது என்று அவனுக்குத் தோன்றியது.

கழுவும் இயந்திரங்கள் நிரையாக நின்றன. காயவைக்கும் இயந்திரங்கள் அவற்றிற்கு மேல் குந்தி இருந்தன. அதன் பின்னால் ஒரு அறை இருந்தது. அதற்குள் புடவை அழுத்தும் இயந்திரம் இருக்கிறது. மொத்தமான உடுப்புக்களைக் கொடுத்தால் சுழலும் வெப்பமான குழாய்கள் துணியை அழுத்திக் கொடுக்கும். அதற்குள் ஆட்கள் அதிகம் வருவது இல்லை. கழுவும் இயந்திரத்திற்கு முன்னால் மேசையும் இரும்புப் பெட்டிகளும் உண்டு. அனேகர் அதில் தங்கள் அலுவலை முடித்துக் கொண்டு செல்வார்கள்.

பரமேஸ் நினைத்தது சரியாய் இருந்தது. அவள் துவைக்க வேண்டிய உடுப்பை எடுத்துக் கொண்டு கீழே வந்தாள். பரமேஸ் இரண்டு நாட்களுக்கு முன்பு உடுப்புத் துவைத்தான். அது நீல நிறக் காற்சட்டை, மெல்லிய பச்சைச் சட்டை, வெள்ளைக் காலுறைகள், வெள்ளை உள்ளாடை ஆகிய எல்லாவற்றையும் ஒன்றாகப் போட்டுக் கழுவும் துளைக் கொட்டி அதை இயக்கி விட்டான். கழுவி முடித்து, அது உதறி ஓய்ந்து நின்ற பின்பு அந்த இயந்திரத்தின் கதவைத் திறந்து பார்த்தான். வெள்ளை உடுப்பு கழுவிய பின்பு அளவுக்கு அதிகமான நீலத்தில் தோய்த்து எடுத்ததாக நீலம் பாய்ந்து கிடந்தது.

சட்டையின், கால் உறைகளின், உள்ளாடையின் சில பகுதிகள் நீலமாகவே மாறி விட்டது. அதன் பின்பு வெள்ளை, நீலம் என்று தனித் தனியே பிரித்து முதலில் இரண்டு அல்லது மூன்று முறை கழுவிய பின்பு ஒன்றாகப் போட்டுக் கழுவலாம் என்று "TS" சொன்னார். எத்தினை தரம் கழுவினாலும் வெள்ளை உடுப்புகளைத் தனியே கழுவுவதே உத்தமம் என்றார்.

அவள் பெண்களுக்கான வெள்ளை உள் ஆடைகள், வெள்ளைத் துவாய் போன்றவற்றை அந்தக் கூடையில் கொண்டு வந்தாள். பரமேசைப் பார்த்துச் சிரித்தாள். என்ன என்பதாக மூஞ்சையை உயர்த்தி அசைத்தாள். பின்பு ஒரு கழுவும் இயந்திரத்தைத் திறந்து அவள் அந்த உடுப்புகளை அடைந்தாள். இடைக்கிடை பரமேசைப் பார்த்துச் சிரித்தாள். பரமேஸ் அருகே சென்று அவள் பின்னால் நின்றான். அவள் உடுப்பு அடைந்து முடிந்ததும் வெள்ளைத் தூளைப் பெட்டியில் கொட்டி இயந்திரத்தை இயக்கினாள். இயந்திரத்தை இயக்கிவிட்டுத் திரும்பிய போது பரமேஸ் இன்னும் அருகாக வந்து விட்டான். அவள் என்ன என்பதாக முகத்தை மீண்டும் உயர்த்தி அசைத்தாள். பரமேசை அவள் அப்போதும் மொழியாற் தெண்டாட வைக்க விரும்ப வில்லை. பரமேஸ் தட்டுத் தடுமாறி தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் கதைக்கத் தொடங்கினான்.

"நீ அழகாய் இருக்கிறாய்." என்று கூறி வழிந்தான்.

"நன்றி. அதைச் சொல்வதற்கு இவ்வளவு தயக்கமா? இதற்காகவா இவ்வளவு நேரம் எனக்குப் பின்னே காத்து நின்றீர்கள்?"

"இல்லை... இல்லை..."

"வேறு எதற்கு?"

"நான் உன்னோடு தனியாகக் கதைக்க வேண்டும்."

"இங்கே வேண்டாம். அந்த அறைக்குள்." என்றாள்.

பரமேஸ் அவள் கையைத் திடீரெனப் பற்றிப் பிடித்து இழுத்த வண்ணம் அந்த அறைக்குச் சென்றான். அப்பிடிச் செய்த பின்பே அவனுக்குத் தான் செய்த பிழை விளங்கியது. தற்சமயம் விரும்பாது திமிறி இருந்தால் அல்லது கத்தி இருந்தால் பிரச்சனை எப்படிப் போயிருக்கும் என்பதை நினைக்க வயிற்றில் வதியும்

குடல் வாயால் வரும் அவஸ்தை உண்டாகியது. அவள் கத்தவில்லை. அவனோடு அவசரமாக உள்ளே வந்தாள். பின்பு நிதானமாக அங்கு இருந்த மேசை மீது ஏறி இருந்தாள். பரமேசைக் களியோடு அடிமையைப் பார்ப்பது போலப் பார்த்தாள். அவளுக்குப் பரமேஸ் அடிமையாகத் தென்பட்டான். காதல் அடிமை இவன் என அவள் மனதில் கர்வம் கொண்டாள்.

தென் அமரிக்காவில் அடிமைகளின் வாரிசுகளோடு வாழ்ந்தவர்கள் அவர்கள். இவர்களின் மூதாதையர் ஸ்பெயினில் இருந்து சென்று செவ்விந்தியரின் நாட்டை ஆக்கிரமித்தனர். காலப் போக்கில் அடிமைகளும் எசமானர்களும் கலந்த நாடாகப் போயிற்று சில்லி. எனினும் இவளின் உருவத்தைப் பார்க்கும் போது ஸ்பெயின் பெண் போலவே தோன்றினாள். கலப்பு இல்லாத தங்கத்தில் வார்த்து எடுத்ததான தகதகப்பு அவளிடம். என் காலைப் பிடித்துப் பிச்சை கேள் என்கின்ற திமிர்த்த பார்வை. நிமிர்ந்து முறைக்கும் மார்புகளும், ரோஜாவாய் துடிக்கும் மெல்லிய உதடுகளும், நெஞ்சைப் பிளக்கும் அவள் விழி ஒளியும், கோழையையும் வீரனாக்கும் தனிமையும் பரமேசை இப்போது பந்தாடின.

"நீ தனியே என்னுடன் என்ன கதைக்க வேண்டும்…?" என்கின்ற அவள் கேள்வியில் திமிர் இருந்தது.

"நிறையக் கதைக்க வேண்டும்."

"அப்படியா? மத்தியானச் சாப்பாடு சுவையாக இருந்ததா? " அவள் ஏதோ கதைத்தாள். எதற்காகவோ கதைத்தாள்.

"தெரியாதது போல என்னைக் கேட்கிறாயா?" பரமேஸ் கோபத்தோடு கேலியாகக் கேட்டான்.

"தெரிந்தால் நான் ஏன் உன்னிடம் கேட்கிறேன்?"

"விளையாடாதே அனாகி."

"நீங்களா... அல்லது நானா விளையாடுவது? சரி நான் விளையாட வில்லை. சொல்லுங்கள்… ஏன் என்னை இங்கு இழுத்துக் கொண்டு வந்தீர்கள்?"

"உன்னோடு கதைக்க வேண்டும் என்பதற்காக... அது உனக்குத் தெரியும்..."

"தெரிந்து இருக்கலாம். உங்கள் வாயாலே அதைச் சொல்லுங்கள்."

"எனக்கு உன்னைப் பிடித்து இருக்கிறது."

"எனக்கும் உங்களைப் பிடித்து இருக்கிறது. அதில் என்ன அதிசயம் இருக்கிறது?"

"நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை."

"அப்போது எந்த அர்த்தத்தில் சொன்னீர்கள்? அப்படி என்றால் என்னைப் பிடிக்க இல்லையா?"

"பிடித்து இருக்கிறது. பிடித்து இருப்பதற்கு மேலாகவே பிடித்து இருக்கிறது. நான் உன்னை விரும்புகிறேன் அனாகி."

அவள் பெரியதொரு பகிடியைக் கேட்டதாக விழுந்து விழுந்து சிரித்தாள். பரமேசிற்கு முடியைப் பிய்த்து எறிய வேண்டும் போன்று வெட்கமாகப் போய் விட்டது. அவளைப் பார்க்க முடியாத அவமானமாய் இருந்தது. அவள் சிரித்துக் கொண்டே நின்றாள். இடை விடாது சிரித்ததில் அவளுக்கு மூச்சு வாங்கியது. கண்களில் நீர் கட்டிக் கொண்டது. இறுதியாகச் சிரித்து முடித்தவளாக,

"ஓ..." என்றாள். அதில் வழிந்த ஏளனத்தில் அவன் மாண்டான். பின்பும் அவளோடு வாழ வேண்டும் என்கின்ற அவா அடங்காது மீண்டு எழுந்தான்.

"என்னை உனக்கு எத்தனை நாள் தெரியும்?" என்று அவள் கேட்டாள்.

"சில நாட்களாக."

"அதற்குள் என்னைப் பற்றி முழுமையாக அறிந்துவிட்டாயா? பார்த்த உடன் உங்களுக்குக் காதல் வருமா? திரைப்படம் மாதிரியா? நாங்கள் அப்படி அல்ல. பார்த்து, நீண்ட காலம் பழகி, காதலித்து, கத்தோலிக்க முறைப்படி தேவாலயத்தில் திருமணம் செய்து கொள்வோம்."

"நான் உன்னைக் காதலிக்கிறேன்."

"ம்... பார்த்த உடன்?"

"ஓ..."

"எது வரை? இருவரும் ஒன்றாகப் படுத்தால் அது தீர்ந்து விடுமா? அது வரைக்குமா இது?" அவளது அந்தக் கேள்வி அவனுக்கு அதிர்ச்சியைத் தந்தது. என்றாலும் அது அவர்கள் கலாச்சாரம் என்பதை உணர்ந்தவனாக,

"இல்லை இறுதி வரைக்கும். என் உயிர் உள்ள வரைக்கும்."

அவள் மீண்டும் சிரித்தாள். விழுந்து விழுந்து சிரித்தாள். பின்பு சிரிப்பை நிறுத்தி விட்டு,

"உனக்குப் பயித்தியமா? எனக்கு இன்னும் பதினெட்டு வயதே ஆகவில்லை. அதற்குள் கலியாணமா?"

"அது வரைக்கும் என்னால் பொறுத்து இருக்க முடியும்."

"உண்மை ஆகவா? ம்... எதற்காக என்னைக் காதலிக்கிறாய்?"

"சொல்லத் தெரியவில்லை. என் இதயத்தின் துடிப்பு போல உன் நினைவு என்னோடு பிரியாது வாழ்கிறது. நிறுத்தினால், நிறுத்தப் பட்டால் நான் வாழ மாட்டேன் என்பது விளங்குகிறது."

அனாகி மீண்டும் பெரிதாகச் சிரித்தாள்.

"நீ நன்றாக வசனம் பேசுகிறாய்."

"அவை என் இதயத்தில் இருந்து வரும் வார்த்தைகள்."

"ஓ அப்படியா? இதற்கு முன்பு காதலித்தது இல்லையா?"

"இல்லை."

"உடலுறவு?"

பரமேஸ் எச்சில் விழுங்கும் அவஸ்தையோடு,

"இல்லை. நீ?" என்று திருப்பிக் கேட்டான்.

"வயது வராதவரை எங்கள் நாட்டில் கலியாணம் செய்ய முடியாது. உடலுறவு நான் வைத்துக் கொள்ளவில்லை."

"மன்னிக்கவும். உனக்கு வயது வரும் வரைக்கும் நான் காத்திருப்பேன்."

"உண்மை ஆகத்தான் சொல்லுகிறாயா?"

"சத்தியமாக."

"எனக்கு உன்னைத் தெரியாது. நான் உன்னைத் தெரிந்து கொள்ள வேண்டும். எனக்குப் பிடித்தாலும் எனது குடும்பத்திற்கு உன்னைப் பிடிக்குமா என்று தெரியாது. என்னுடைய காதலனை நானே தெரிவு செய்வேன். அந்த உரிமை எனக்கு மட்டுமே இருக்கிறது. இருந்தும் தேவை இல்லாது எனது பெற்றோரை காயப்படுத்த நான் விரும்பவில்லை. ஆறு மாதங்கள் நாங்கள் ஒன்றாக இருந்தால் அப்போது பார்ப்போம். அதற்கு இடையில் நாங்கள் ஒருவரை ஒருவர் விளங்கிக் கொள்ள முடியும்."

"என்னை உனக்குப் பிடித்து இருக்கிறதா?"

"பிடித்ததால் மட்டுமே உன்னோடு இவ்வளவு நேரம் தனிமையில் கதைக்கிறேன். நாங்கள் கத்தோலிக்கர். கடவுளை நம்புபவர்கள்."

"நன்றி."

"எதற்காக? கடவுளை நம்புவதற்காகவா?"

"கடவுளை நம்புபவர்கள் நியாயமாக நடப்பார்கள். அதற்காகவும் என்னை விரும்புவதற்கு ஆகவும்."

"உனக்கு எங்கள் நாட்டைப் பற்றி என்ன தெரியும்? கடவுளை நம்புபவர்கள் நியாயமாக நடப்பார்களா?"

"நடக்க மாட்டார்களா?"

அவள் மீண்டும் சிரித்தாள். பின்பு நிதானமாக,

"கடவுளை நம்புவதாய் காட்டிக் கொண்டு ஏமாற்றுபவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள். சில பாதிரி மாரே தவறாக நடப்பார்கள். எனக்குப் பதினான்கு வயது இருக்கும் போது இராணுவத்திற்குப் பயந்து நாங்கள் ஒரு ஊரில் தஞ்சம் புகுந்து இருந்தோம். அதற்கு அங்கு ஒழுங்கு செய்தவர் ஒரு பாதிரியார். இராணுவம் தேட வரப் போகிறது என்றவுடன் அப்பாவை மலைப் பகுதிக்குப் போகுமாறு அனுப்பி வைத்தார். அதன் பின்பு நானும் அம்மாவும் இருந்தோம். அப்போது அந்தப் பாதிரியார் வந்து என்னை இரகசியமாகத் தனது வீட்டிற்கு வருமாறு சொன்னார். எனக்கு அவர் பரிசு தருவதாக ஆசை காட்டினார்."

"அப்படியும் பாதிரிமார் செய்வார்களா?"

"அதைப் பற்றி எனக்குப் பொதுவாகத் தெரியாது. அவர் வருமாறு சொன்னார். நான் அம்மாவிடம் சொன்னேன். அதன் பின்பு நாங்களும் அப்பாவிடம் மலைக்குப் போய் அங்கிருந்து அவசரமாக வேறு இடம் சென்றோம். நாங்கள் சென்ற பின்பு இராணுவம் அங்கே வந்ததாக எங்களுக்குத் தகவல் கிடைத்தது."

"மோசமான மனிதர்கள்."

"எனக்கு மோசமான மனிதர்களைப் பிடிக்காது."

"இதயம் உள்ள யாருக்கும் மோசமான மனிதர்களைப் பிடிக்காது."

"சரி நான் போகப் போகிறேன். அப்பா தேடி வந்தாலும் வருவார்."

"நாங்கள் இனி எப்போது சந்திப்பது?"

"உங்களுக்குத் துணிவு இருந்தால் பின்னேரச் சாப்பாட்டின் போது சந்திக்கலாம்."

"நான் உன் அப்பாவின் முன் கதைப்பேன்."

"நன்றாகக் கதைக்கலாம். அப்பாவிற்கு நாங்கள் மரியாதை கொடுப்போம். பயப்படுவது இல்லை. கதைப்பது எங்கள் கலாச்சாரத்தில் கண்டிக்கப்படும் பாவச் செயல் அல்ல."

"எங்கள் கலாச்சாரத்தில் அது பாவச் செயல். அதனால் உன்னோடு தனிமையில் கதைக்க வேண்டும் என்றேன்."

"அப்படி என்றால் அடுத்த முறை தனிமை வரும் போது பார்த்துக் கொள்வோம்."

"அதுவரை எனக்குக் கண்களால் பேசத் தெரியும்."

"எனக்கும் கண்களால் பதில் சொல்லத் தெரியும். இப்போது நான் போகிறேன். பின்பு கண்களால் பேசுவோம்."

என்று கூறியவள் அதற்கு மேல் அவன் பதிலுக்குக் காத்து இருக்காது புறப்பட்டுச் சென்றாள். அவளோடு சேர்ந்து போவதற்கு பரமேசிற்கு ஆசையாக இருந்தது. யாரும் கழுவும் இயந்திரங்கள் இருக்கும் அறைக்குள் நின்று விட்டால் கையும் களவுமாகப் பிடிபட்டது போல ஆகிவிடும் என்கின்ற உண்மை உறைத்தது. அத்தால், அவன்

ஏக்கத்தோடு அவள் போவதைப் பார்த்த வண்ணம் நின்றான்.

பெண்களின் பின் அழகுதான் எத்தினை விதமாக இருக்கிறது? அதுவும் இனத்திற்கு இனம் அதன் மாறுபாடுகள் முனைப்புக் காட்டுகின்றன. கண்ணைப் பார்த்துக் காதல் வருகிறது. பின்னே பார்த்தால் காமம் வருகிறது என்பதை யாரும் மறுப்பார்களா? மறுக்கலாம். மனிதன் இயற்கையின் விதிக்கு உள்பட்ட மிருகம் இல்லை எனலாம். அதைப் பற்றி இப்போது அவனுக்குக் கவலை இல்லை. பரமேசிற்கு அவளைப் பின்னே பார்க்கும் போது காதலோடு காமம் ஏகமாய் பீரிட்டது.

அவள் போய் ஐந்து நிமிடம் சென்ற பின்பு இனி ஆபத்து இல்லை என்கின்ற எண்ணத்தோடு பரமேஸ் அந்த அறையை விட்டு வெளியே வந்தான். வெளியே; ஒரு கழுவும் இயந்திரத்திற்குள் உடுப்புகளைத் திணித்து, அதை இயக்கிவிட்டு, அதையே பார்த்த வண்ணம், சிவா நின்றான். பரமேசிற்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை. சிவா ஏதாவது கேட்காவிட்டால் நிம்மதியாக இருக்கும் என்று தோன்றியது. அவன் அப்படி விடுவான் என்பதிற்கு எந்த உத்தரவாதமும் கிடையாது. பரமேசின் அந்த முடிவு சரியாய் போயிற்று.

"அவனவன் மாமா, மாமி, பெரியம்மா, பெரியப்பா எண்டு எல்லாம் கடிதம் எழுதுகிறாங்கள்... நீ உன்ரை மனிசிக்குக் கடிதம் எழுத இல்லையே?" என்று சிவா கேட்டான். அவன் கேட்ட விதம், சிரித்த சிரிப்பு எல்லாம் சுறாவிற்கு இறால் போடும் தந்திரம் என்பது பரமேசிற்கு விளங்கியது. எங்கோ அடி போடுவதற்கு எதையோ தடவுகிறான் என்பதில் பரமேசிற்கு ஊமைக் கோபம் வந்தது.

"இப்ப என்ன அவசரம் அதுக்கு? போடுகிற நேரம் போடுவன். என்ன சொந்தத் தங்கச்சி மாதிரி உனக்கு இவ்வளவு அக்கறை?"

"பிறண்டின்ரை மனிசியத் தங்கச்சியா நினைக்கிறதுதான் என்ரை பழக்கம். நான் நினைச்சா நினைச்சதுதான். அதிலதான் எனக்கு உந்த அக்கறை. கற்பமா இருக்கிறாள். பிள்ளை பிறந்திடும் எண்டு பிளைற்றுக்க சொன்னாய். இப்ப எல்லாரும் கடிதம், போன் எண்டு தவண்டை அடிக்கிறாங்கள். நீ யாரோ எவரோ எண்ட மாதிரிக் கதைக்கிறாய்."

"அது எங்கடை விஷயம் சிவா. பிளீஸ் நீர் இதிலை தலையிடாதையும்."

"ஓ… எனக்கு இங்கிதம் தெரிய இல்லை. எனக்கு இங்கிதம் தெரியுதோ இல்லையோ என்ரை மனதுக்கு நியாயம் எண்டு படுகிறதைச் சொல்லுவன். அதைச் சொல்லுகிறதில எதுக்கும், யாருக்கும் நான் பயப்பிடமாட்டன்."

"சரி... சரி... சிவா எனக்கு நித்திரை வருகுது. நான் போய் படுக்கப் போகிறன்."

என்று கூறிவிட்டு அவன் சிவாவின் பதிலுக்குக் காத்திராது சென்று விட்டான். ஊரிலும் மதில் மேல் பூனையாக வாழ்க்கை நடத்திவிட்டு, இங்கே சந்தர்ப்பம் கிடைத்த உடன் நம்பி இருப்பவளை எப்படிக் காய் வெட்டுகிறான் என்பதை எண்ணச் சிவாவிற்கு வியப்பாக இருந்தது. இப்படிக் கண்ணிற்கு முன்னே அநியாயம் நடப்பதைப் பார்க்க அவனால் சகிக்க முடியவில்லை. அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

*

பின்னேரம் சாப்பிட்ட போது அனாகியைப் பரமேஸ் அடிக்கடி மோகத்தோடு பார்த்தான். அவள் அவன் பக்கமே திரும்பவில்லை. அவளுக்கு என்ன நடந்தது என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவள் தொடர்ந்தும் அவனைப் பார்க்காது இருக்க இருக்க அவனுக்குக் கோபம் கோபமாய் வந்தது. பாண் துண்டைக் கையில் எடுத்துச் சாப்பிட முடியாதவாறு கோபத்தில் கைகள் நடுங்கின. தன்னை மற்றவர்கள் நளினமாகப் பார்ப்பது போலப் பிரமை தட்டிற்று. பிற்பகல் நன்றாகக் கதைத்தவளுக்கு இப்போது என்ன வந்து விட்டது? தாய் தகப்பனோடு இருந்து சாப்பிடும் அவளிடம் இப்போதே போய் அதைக் கேட்க வேண்டும் போல் அந்தரமாக இருந்தது. இருந்தும் அதற்கான துணிவு அவனிடம் இருக்கவில்லை. அவள் ஒரு முறைகூட அவனைப் பார்க்கவில்லை. என்ன விந்தை என்பது அவனுக்குத் தெரியவில்லை. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்கின்ற அந்தரமாய் இருந்தது. யார் என்ன சொல்லி இருப்பார்கள்? சிவா ஏதாவது சொல்லி இருப்பானா? நீ எதாவது சொன்னாயா என்று அவனைக் கேட்க முடியாது. அவன் ஏதாவது வில்லங்கமாகக் கதைப்பான். அவளிடமே

கேட்க வேண்டும். அவளது இந்த மாற்றத்திற்கு என்ன காரணம் என்று அவளிடமே கேட்க வேண்டும் என்று பரமேஸ் எண்ணினான். அவனால் அதற்கு மேல் அங்கிருந்து சாப்பிட முடியவில்லை. அவன் எழுந்து தனது அறைக்குச் சென்றான். அவன் எழுந்து போகும் போது அவன் போவதைக் கவலையோடு அவன் கவனிக்காத வண்ணம் அவள் பார்த்தாள். ஆனால் அவள் கவலையோடு பார்ப்பதைச் சிவா அவதானித்தான்.

*

அடுத்த நாள் காலை அவளது தாய், தகப்பன், சகோதரன் ஆகியோர் வள்ளத்தில் ஏறி உல்லாசச் சவாரிக்குப் போவதை தற்செயலாகப் பரமேஸ் கண்டுவிட்டான். அவன் இதுவே சந்தர்ப்பம் என்று ஓட்டமும் நடையுமாக அவளது அறைக்குச் சென்றான். அவனுக்கு ஓடி வந்ததில் மூச்சு வாங்கியது. முதலில் தன்னை ஆசுவாசப்படுத்தித் தலை முடியை நன்கு அழுத்தி விட்டுச் சட்டைக் கொலரைச் சரி செய்தான். பின்பு அழைப்பு மணியை அழுத்தினான். சிறிது நேர அமைதிக்குப் பின்பு கதவு தயக்கத்தோடு திறந்தது. அவளின் முகத்தில் இருந்த புன்னகை எங்கோ களவு போனதைப் பரமேஸ் கவலையோடு கவனித்தான். இதயம் நொந்தது. உலக இருப்பே இல்லாது நழுவிப் போனது போல நெஞ்சாங் கூட்டிற்குள் என்னவோ செய்தது. ஏன்? யாரால்? என்பது அவனுக்கு விளங்கவில்லை.

அவள் தான் பெற்ற ஞானத்தால் "என்ன வேணும்?" என்றாள்.

"என்ன?" அவனிடம் மிகை மிஞ்சிய அதிர்ச்சி.

"என்ன வேணும்?" அதே கேள்வி மீண்டும். அவள் முகத்தில் எந்தப் பரிவும் இல்லை. எதனால்? விடை இல்லாக் கேள்விகள் விஜயனின் கணைகளாய் பரமேசைத் துளைத்தன.

"நான் உன்னோடை கதைக்க வேணும்."

"ம்… எனக்கு உன்னோடை கதைக்க இப்ப எதுவும் இல்லையே?"

"பிளீஸ்..."

அவள் அதற்குப் பின்பு எதுவும் சொல்லவில்லை. கதவைத் திறந்தாள். பரமேஸ் வேகமாக உள்ளே

வந்ததும் அதைப் பூட்டாமற் சாத்தினாள். பின்பு பரமேசைப் பார்த்து வெறுப்போடு,

"என்ன கதைக்க வேணும்?" என்று கேட்டாள்.

"ஏன் நீ இப்போது என் மீது வெறுப்பாய் இருக்கிறாய்? இப்பிடிக் கோவப்படுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. தண்டிக்க முன்பு தண்டிப்பதற்கான காரணத்தையாவது சொல்லக் கூடாதா?"

"நீங்கள் எனக்குப் பொய் சொல்லி இருக்கிறீர்கள்."

"எப்போது? எதற்கு?"

"உங்களுக்குத் தெரியும்... எப்போது, எதற்கு என்று உங்களுக்கு விளங்கும்."

"இல்லை எனக்கு விளங்கவில்லை. என்ன என்று சொல்லி விடு."

"உங்களுக்குத் திருமணம் ஆகிவிட்டது. அதை மறைத்துப் பொய் சொன்னீர்கள். இலங்கையில் மனைவி இருக்கிறாள். நீங்கள் விவாகரத்துப் பெறவில்லை. அவளைப் புறக்கணிக்கிறீர்கள்."

"நான் விவாகரத்துப் பெற்று விடலாம்."

"எனக்குப் பொய் கூறிய பின்பு நீங்கள் இனி என்ன செய்தாலும் அது பற்றி எனக்குக் கவலை இல்லை."

"இனி நான் உனக்குப் பொய் சொல்லவில்லை."

"உங்கள் தண்டனைக்கான காரணம் சொல்லி ஆகிற்று. இனி என் தீர்ப்பில் எந்த மாற்றமும் இருக்காது."

"தயவு செய்து என்னை மன்னித்துவிடு."

"மன்னிக்கிறேன். அத்தோடு உன்னை மறந்தும் விடுகிறேன்."

"தயவு செய்து அந்த முடிவை மாற்றிக் கொள்."

"நாங்கள் ஒரு முறை மறைமுகமாகச் சொன்னாலே அதைப் விளங்கிக் கொள்வது மற்றவர்களின் பண்பு."

"இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?"

"தயவு செய்து வெளியே போங்கள்."

"அனாகி?"

"தயவு செய்து எனது பெயரை இனிச் சொல்ல வேண்டாம்."

பரமேஸ் வெளியே வந்தான். கண்கள் குளமாகக் கலங்கி இருந்தன. கோபத்தில் வேகமாக நடந்து தனது அறைக்குச் சென்றான். அறையில் சிவா இல்லை. அது நல்லதாகவே தோன்றியது. அவன் படுக்கையில் வீழ்ந்தான். அடக்க முடியாது தேம்பித் தேம்பி அழுதான். அப்படியே உறங்கிப் போய்விட்டான்.

*

அடுத்த நாள் காலைச் சாப்பாட்டிற்குப் பரமேஸ் எழுந்து வரவில்லை. பதினொரு மணிக்குக் காதல் விரதத்தைப் பசி உடைக்க மத்தியானச் சாப்பாட்டிற்குச் சென்றான். அங்கு அனாகியோ அவளது குடும்பமோ வரவில்லை. மத்தியானம் அவர்கள் சாப்பிடவில்லை என்று அவன் எண்ணினான். மத்தியானச் சாப்பாடு சாப்பிட்ட பின்பு அவளது அறையைக் கடந்து சென்றான். கதவு சிறிதாகத் திறந்து கிடந்தது. பார்வை அவனையும் மீறி அங்கே சென்றது. ஒரு சோமாலியாப் பெண், இரு குழந்தைகள் உடன் விளையாடினாள். அனாகி? அனாகி எங்கே? பரமேசிற்கு மயக்கம் வருவது போல இருந்தது. பக்கத்தில் இருந்த கதிரை ஒன்றில் இருந்து முழங்கால்களுக்குள் முகத்தைப் புதைத்து சிறிது நேரம் அடக்க முடியாத துக்கத்தில் அழுதான். அதன் பின்பு அமைதியாக அசையாது இருந்தான். அவனுக்குத் தான் செய்வது பைத்தியக்காரத்தனம் போல் தோன்றியது. எதிரே நிமலன் வந்தான்.

"என்ன கவலையில இருக்கிறியள் போல?"

"என்ன சொல்லுகிறா?"

"என்னிட்டையே கதைவிட்டுக் கதை புடுங்குவியளா?"

"நான் கவலையில இருக்கிறன் எண்டு உனக்கு என்ன எண்டு தெரியும்?"

"அது ஊரறிஞ்ச விஷயமே..."

"ஓ அப்பிடியா?"

"ம்."

"உனக்கு அனாகி எங்க எண்டு தெரியுமா?"

"அப்ப உங்களுக்கு விஷயம் தெரியாதா? அவை காலமையே வேற இடம் போயிட்டினம். வேற முகாமுக்காம். சில்லி நாட்டுக்காரர் கூட இருக்கிற முகாமுக்காம்."

"எந்த முகாம்?"

"எனக்குத் தெரியாது?"

"எப்ப போனவை?"

"ஒன்பது மணி இருக்கும். அண்ணை நான் ஒரு விஷயம் சொன்னாக் கோவிக்க மாட்டியளே?"

"என்ன?"

"இருக்கிறதை விட்டிட்டு ஏன் பறக்கிறதுக்கு ஆசைப் படுகிறியள்? இரண்டு சைக்கிள் அயல் வீடுகளில இருந்து கடனா வாங்கி இருக்கிறம். போஸ்ற் ஒபீசுக்கும் சந்திக்கும் போகப் போகிறம்... வாறது எண்டாச் சொல்லுங்கோ?"

"ம்... போகேக்க சொல்லுங்கோ..."

"கவலைப் படாதேங்க."

"இப்பிடி நடக்கும் எண்டு நான் எதிர் பார்க்க இல்லை."

பரமேசின் குரல் கண்ணாடியாக அழுகையோடு உடைந்தது. நிமலனுக்கு அது அதிர்ச்சியாக இருந்தது.

"கவலைப் படாதீங்க. எல்லாம் உங்கடை நன்மைக்கே" என்றான் அவன்.

"ஆசை வைச்சு... அது கிடைக்காமல் போகிற வலிய அனுபவிச்சால் தெரியும்." என்றான் பரமேஸ். பின்பு தனது அறையை நோக்கி நடந்தான். காற்றில் நடப்பது போலச் சுயம் இல்லாது அவன் நடந்து போனான். பறந்தது பறந்ததுதான் என்பது அவனுக்கு நடையிலும் வாழ்விலும் விளங்கத் தொடங்கியது.

# 14 மலைதேசத்திற்கு

அன்று காலைச் சாப்பாடு சாப்பிடும் போது "TS" அமர்ந்து இருந்த மேசையில் கோப்பிக் குவளையோடு விடுதி அதிகாரி வந்து அமர்ந்தார். அவர் முகத்தில் இருப்பது கவலையா அல்லது சந்தோஷமா என்பது பிடிபடாது நழுவுவதாய் "TS"சிற்குத் தோன்றியது. இப்போது அந்த அதிகாரியின் ஆழ் கடல் ஒத்த நீலக் கண்கள் வயதை மீறிய காந்த அலைகளை வீசின. தோற்றத்தின் மிடுக்கில் துவள்ச்சி இல்லாத போக்கு இன்னும் தொடர்கிறது. உதட்டிற்கு அதிக சாயம் கொடுத்தாரோ என்கின்ற சந்தேகம். உடம்போடு ஒட்டிய நீல நிறப் பாவாடை சட்டை ஏற்படுத்திய பள்ளம் மேடுகள் சொல்லுகின்ற இயற்கையின் இன்றும் மறையாத இரகசியங்கள். அலுங்காமல், குலுங்காமல் கோப்பிக் குவளையை எடுத்து சத்தம் இல்லாது மிடறுகளை விழுங்கும் நளினம்.

"TS" அவரை என்ன என்பது போலப் பார்த்தார். அதை உணர்ந்து கொண்ட அவர்,

"உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல வேண்டும்." என்று பொதுவாகச் சொன்னார். எல்லோரும் அவரை என்ன என்பது போலப் பார்த்தார்கள்.

"இன்று சிலர் வேறு முகாமிற்குப் போக வேண்டும். இங்கு புதியவர்கள் வருவதால் உங்களிற் சிலரைத் தூர இடம் ஒன்றிற்கு அனுப்பப் போகிறோம். பயந்து விடாதீர்கள். அதிக தூரம் இல்லை. இங்கிருந்து இரண்டரை மணித்தியாலப் பயணத்தில் சென்று விடலாம். அதற்காகப் பேருந்து பத்து மணிக்கு இங்கு வரும். வரவேற்பு அறையில் இருக்கும் பெயர் பட்டியலைப் பார்த்துப் புறப்படுவதற்குத் தயாராக இருக்க வேண்டும். குறிப்பாகப் பத்து மணிக்கு முன்பு தயாராக வேண்டும். தயாராகியவர்கள் உங்கள் கைச் செலவுப் பணத்தை இங்கே கடைசி முறையாக வாங்கிக் கொள்ளலாம். அதைவிட ஏதாவது சந்தேகம் இருந்தால் அங்கு வந்து எங்களைக் கேட்கலாம். அத்தோடு உங்கள் புதிய வாழ்க்கைக்கு எனது வாழ்த்துக்கள்." என்றார். அவரது உரை முடிந்தது போன்று இருந்தது. "TS"சிற்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை. எதற்கும் உற்சாகப் படுத்துவதாய் கையைத் தட்டினார். அவரைத் தொடர்ந்து

அங்கிருந்த அனைவரும் கை தட்டினார்கள். அவர் நன்றி நன்றி என்று கூறிய வண்ணம் சிறிது நேரம் நின்றுவிட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்தார்.

சாப்பிட்டு முடியவும் பலர் அவசரமாகச் சென்று தங்கள் பெயரும் அந்தப் பட்டியலில் இருக்கிறதா என்று பார்த்தார்கள். அனைத்துத் தமிழரின் பெயரும் அந்தப் பட்டியலில் இருந்தது. அதைப் பார்த்த தமிழர்கள் எல்லோரும் பயணத்திற்கு தயார் ஆகுவதற்காக தங்கள் அறைகளுக்கு அவசரமாகச் சென்றார்கள்.

பொன் கம்பிகளால் பூமியைச் சிறை பிடிப்பதாக வெளியே ஆதவனின் கதிர்கள் அன்னை பூமியை அதிகாரம் செய்தது. ஆதவன் பூமாதேவியின் தந்தை. பூமி அவனின் மகள். இரத்தமும் சதையுமாய் பிரிந்து உருவாகிய மகள். சகோதரங்களைக் கொண்ட தந்தையைச் சுற்றி வலம்வரும் குடும்பத்தைச் சார்ந்தவள். தனக்கும் ஒரு செல்லப் பிராணி தேடிக் கொண்டவள். அது அவளைச் சுற்றுகிறது. சுற்றுவது இயக்கம். இயக்கம் நின்றால் எதுவும் இல்லை. மனித இயக்கம் மரணத்தில் முடிகிறது. ஆத்மாவின் சுதந்திரம் அதில் தொடங்குகிறது. இந்தக் குடும்பத்தில் தந்தை மரிக்க முதல் மகள் மரித்து விடுவாள். அது சுற்றும் குடும்பத்திற்குக் கிடைத்த சாப விமோசனம். மகளுக்கும் தந்தைக்கும் இடையேயான தொடுகையில் பாசம் சுரக்க வேண்டும். அன்பும் பாசமும் இணைந்த அவன் அரவணைப்பில் இதம் பிறக்க வேண்டும். அன்றைய ஆதவனின் பிரசன்னத்தில் அவன் அந்த இதத்தைத் தந்தான். மகளைத் தனது கதிர்களால் வருடி வருடிப் பாசம் சொரிந்தான். தந்தையின் பாசத்தில் மகள் பூரித்தாள். மகள் பூரித்ததில் மண்ணுயிர்கள் பூரித்தன.

சந்தோஷமும் கவலையும் ஒன்றாய் கலந்த உணர்வின் ஊடாட்டம். வேறு இடம் போவது பரபரப்பான எதிர்பார்ப்பு. வாழ்ந்த இடத்தை விட்டு நீங்குவது தொப்புள் கொடி அறுப்பதான வேதனை. வேதனையோடே இன்பம் குடும்பம் நடத்துகிறது. இன்பத்தோடே வேதனை வியாபித்து எழுகிறது. அவை ஒன்றின் வேரில் மற்றதாய். யாருக்கு என்ன உணர்வு இருந்தாலும் முடிவுகள் அவர்கள் கையில் இல்லை. அகதியின் வாழ்வு பற்றி அகதி நிர்ணயம் பண்ண முடியாது. அகதிக்கு அடைக்கலம் கொடுப்பவன் அதை நிர்ணயம் பண்ணுவான். எசமானுக்குச் சேவகம் செய்யும் நிலை இல்லை. எடுத்த முடிவுக்குக் கட்டுப்பட வேண்டியது அவசியம் ஆகிறது. தங்கள் உணர்வுகளைத்

தள்ளி வைத்துத் தமிழர்கள் புறப்படுவதில் அக்கறை காட்டினர். புறப்படுவதற்கு முன்பே வரவேற்பு அறைக்கு வந்துவிட வேண்டும் என்று விடுதி அதிகாரி உத்தரவாய்ச் சொல்லி இருந்தார். அதை மீற முடியாது.

பரமேசிற்கு வாழ்க்கையே சிதறிப் போனதான சோகம். அவள் எங்கே சென்றாள் என்பது அவனுக்குத் தெரியாது. அதைப் பற்றி அறிய அவகாசம் கிடைக்க வில்லை. கேட்டாலும் எதற்குக் கேட்கிறாய் என்கின்ற கேள்வி எழலாம் என்கின்ற தயக்கம். அவள் எங்கே போனாள் என்கின்ற மர்மம் தீர்வதற்குள் தான் எங்கே போகிறேன் என்கின்ற மர்மம் வந்ததில் அவன் குழம்பிப் போனான். தன்னால் எதுவும் செய்ய முடியாது. கட்டளைக்குக் கட்டுப்பட்டு மேற் கொண்டு செல்வதே அவன் விதி என்பது விளங்கியது.

"TS"சிற்கு வேறு இடம் போவதில் தயக்கம் இல்லை. இந்த நாட்டின் சில இடங்களைப் பார்ப்பதாக அது இருக்கும் என்கின்ற சந்தோஷம். போகும் இடம் இந்த விடுதி போல் வசதியாக இருக்குமா என்கின்ற கேள்வி அவரிடம் இருந்தது. இவ்வளவு வசதிகள் இல்லாவிட்டாலும் இங்கு வாழ்வதற்குத் தேவையான வசதி இருக்கும் என்பதில் அவருக்கு அபார நம்பிக்கை இருந்தது.

நிமலன் மலைப் பாங்கான நோர்வேயின் மத்திய பகுதிக்குப் போவதால் அங்கு அதிக குளிராக இருக்குமா என்று "TS"சைக் கேட்டான். அவன் குளிருக்குப் பயந்து அஞ்சுவது "TS"சிற்கு விளங்கியது. மத்திய பகுதியில் குளிர் காலத்தில் மிகவும் குளிராகவும் கோடைக் காலத்தில் அதன் தாள் நிலங்களில் வெக்கையாகவும் இருக்கும் என்று "TS" அவனைச் சமாதானம் செய்தார். அதன் பின்பு அவன் அமைதியாகப் புறப்படுவதில் மும்மரம் காட்டினான்.

சிவா அந்தப் புதிய இடத்திற்குச் செல்வதற்காகச் சந்தோசமாய் புறப்பட்டான். புதிய இடம். புதிய வாழ்க்கை. புதுமையான அனுபவங்களைக் கொண்டு வரும் என்பதில் அவனுக்கு நம்பிக்கை இருந்தது. இந்த விடுதியும் அது அமைந்து இருக்கும் இடமும் நன்கு பிடித்துக் கொண்டாலும் இன்னும் ஒரு இடத்திற்குப் போவதில் ஒரு பங்கமும் இல்லை என்று எண்ணினான். அவனுக்கு மனது திருப்தியாக இருந்தது. தானும் நண்பர்களும் நேரான பாதையில் செல்வதான நம்பிக்கை இருந்தது. வழுவினால்

சரி செய்து கொள்வது தன் கடமை என்று எண்ணினான். அதுவே மனிதத்துவம் என்று அவன் நம்பினான்.

நோர்வேயில் அடுத்த மனிதர்களின் பிரச்சனைக்குள் மூக்கை நுழைப்பது அநாகரிகம். மற்றைய மனிதன் சுதந்திரமாகத் தனக்குச் சரியானதைச் செய்யும் உரிமை இங்கு இருக்கிறது. தமிழர்கள் அப்படி அல்ல. நண்பர் என்றால் சரி பிழை கூறி அவர்கள் நல்ல வழியில் போவதற்கு உதவி செய்வார்கள். அது சில வேளைகளில் அதீத உரிமை எடுத்துக் கொண்டதாய் முடியலாம். அப்படி இருந்தும் அது அவர்கள் நன்மைக்கு ஆகத்தானே செய்யப்படுகிறது என்பதைச் சிவா நம்பினான். நாட்டை விட்டு வந்தும் எங்களுக்கு உள் ஆயிரம் பிளவுகள் இருந்தாலும் தமிழருக்கு என்று ஒரு மொழி, கலாச்சாரம், பண்பாடு இருக்கிறது. அதை நாங்கள் காப்பாற்ற வேண்டும். அதைவிட மனிதத்தைக் காக்க வேண்டும். அதற்குப் பங்கம் உண்டு பண்ணுவதை அனுமதிக்க முடியாது என்பது சிவாவின் எண்ணம் ஆகியது.

சண்முகனுக்கு உப்புப் புளிப்பு இல்லாத சாப்பாட்டை இங்கே சாப்பிட்டு அலுத்து விட்டது. போகும் இடத்திலாவது சமைத்துச் சாப்பிடும் வசதி இருந்தால், நல்ல தூள் போட்டுக் காரமாக உப்பு, புளிப்பு உடன் சாப்பிட வேண்டும் என்கின்ற எண்ணம் ஓடியது. மனிதனின் முதற் தேவை உணவு. அதை விரும்பியது போன்று உண்ண முடியாது, யாருடைய சுவைக்கோ சமைத்ததை உண்பதில் திருப்தி இருப்பது இல்லை என்பது அவன் எண்ணம். இவர்கள் சாப்பாடு மிகவும் சத்து நிறைந்த உடலிற்கு நன்மை பயக்கும் சாப்பாடுகள் என்றாலும் நாக்குச் செத்துப் போகும் பச்சைத் தண்ணியாக இருக்கிறது என்பது அவன் அவிப்பிராயம். கையில் பணம் இருந்தால் நல்ல வியரும் வாங்கி, உறைப்பான கறியும் வைத்துச் சாப்பிட வேண்டும் என்பது அவன் பிரதான ஆசை ஆனது. அதற்கான வசதி போகும் இடத்தில் கிடைக்காதா என்கின்ற ஏக்கம் அவனிடம் இருந்தது. இப்படியாகப் பலரும் தங்கள் குறைகள் போகும் இடத்தில் ஆவது நிறை ஆகுமா என்கின்ற எதிர்பார்ப்பில் அந்தப் பயணத்திற்கு தயாராகினர்.

றூபன் புறப்படாது திகைத்துப் போய் இருப்பதாகச் சுபத்திரன் வந்து "TS"சிடம் சொன்னான்.

றுபனின் உடம்பிற்கும், மனதிற்கும் சம்பந்தம் இல்லை. அனேக நேரங்களில் அவனில் எந்தக் குறையையும்

யாரும் கண்டுவிட முடியாது. கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு குறை பலரிடம் ஒளிந்து கிடக்கும். அப்படி ஒன்று அவனிடம் இருக்குமோ என்கின்ற சந்தேகம் "TS"சிற்கு அவனைப் பார்க்கும் போது சில வேளை உண்டாகும். அவர் அதைப் பற்றி அதிகம் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. எல்லாவற்றிற்கும் காலம் மருந்து கொடுக்கும் என்கின்ற நம்பிக்கையில் அதைப் பற்றி அவனோடு இதுவரையும் அவர் கதைத்தது இல்லை. தான் அவனது மனவலியைப் பற்றி அவனிடம் கதைப்பது அடங்கிக் கிடப்பதைக் கிளறுவது போல அமைந்து விடுமோ என்கின்ற பயமும் அவரிடம் இருந்தது. சுதந்திரத்திற்குப் பின்பு இலங்கையில் வாழ்ந்த தமிழர்களின் மனமும் உடலம் பெரும்பான்மைச் சமுகத்தின் வன்முறையால் பாதிக்கப்பட்டு இருக்கிறது. இந்த இரு இனங்களுக்கிடையில் உறவுகள் இருந்தாலும் அந்த உறவுகளை விரிசல்கள் எப்போதோ வென்று விட்டன. அது கலவரங்களாக வெடித்த போது மனிதம் வெட்கித்தது. பல மனங்கள் காயப்பட்டன. அதைத் தொடர்ந்து வெடித்த போராட்டம் மேலும் அதை ஆழமாக்கிக் கோரம் ஆக்கியது. இப்படியாக எண்ணிய "TS"சிற்குத் தான் ஏன் இதை எல்லாம் இப்போது எண்ணுகிறேன் என்கின்ற வியப்பு ஏற்பட்டது.

"TS" அவனைக் கேள்வியோடு பார்த்து விட்டுச் "சரி வா." என்ற வண்ணம் அவனோடு போனார்.

றுபனின் அறை இருட்டாக இருந்தது. அந்த இருட்டைக் கலைக்காது சாளரத்தின் திரைச் சீலையின் ஒரு பக்கத்தில் இருந்த இடைவெளி ஊடாக வெளியே பார்த்த வண்ணம் அவன் நின்றான். "TS"சும் சுபத்திரனும் அறைக்குள் வந்தது பற்றி அவன் அலட்டிக் கொண்டதாய் தெரியவில்லை. அவன் கவனம் எங்கோ எதிலோ இருந்தது. "TS"சிற்கு என்ன கதைப்பது எப்படிக் கதைப்பது என்பதில் தடுமாற்றம். ஏதாவது கதைத்துச் சமாளிக்க வேண்டும் என்பது மட்டும் விளங்கியது.

இங்கு வந்த உடன் மருத்துவப் பரிசோதனை செய்து இருக்க வேண்டும். எதுவும் செய்யவில்லை. மருத்துவரையே "TS" கனவிலும் காணவில்லை. நோர்வே அகதிகளை எடுப்பதின் ஆரம்பக் காலம் ஆதலால் நிறையக் குளறுபடிகள் இருப்பதாய் "TS"சிற்குத் தோன்றியது. யுத்த நாடுகளில் இருந்து வருபவர்களின் மன

நிலையைப் பரிசோதிப்பது உசிதமானது என்பது பொதுவான கருத்து. அபிவிருத்தி கண்ட இந்த நாடுகள்கூட முக்கியமான சில விடயங்களில் கோட்டை விடுவதாக அவருக்குத் தோன்றியது. சிறிய பிரச்சனையாக இருக்கும் போதே தீர்த்து வைக்காமல் முற்றிய பின்பு மருந்து கொடுக்கப் போகிறார்களா என்பது அவருக்கு விளங்கவில்லை.

தாங்கள் வந்ததையே கவனிக்காமல் உறைந்து போய் வெளியே வெறிக்கும் றுபனிடம் என்ன கதைப்பது என்று "TS"சிற்குத் தொடர்ந்தும் குழப்பமாக இருந்தது. எதிலாவது தொடங்க வேண்டும். ஏன் சுற்றி வளைத்துத் தொடங்குவான்? நேரடியாக இன்றைய அலுவலைப் பற்றிக் கேட்போம் என்று "TS" நினைத்தார்.

"பத்து மணியாகப் போகுது. வெளிக்கிட இல்லையா றூபன்?" என்றார் "TS".

அவன் பதில் சொல்லவில்லை. தொடர்ந்தும் சூனியத்தை வெறித்த வண்ணம் நின்றான்.

"நான் கேட்கிறது விளங்குதா? பத்து மணி ஆகுது. நாங்கள் எல்லாரும் வெளிக்கிட்டாச்சு. நீ வெளிக்கிடேல்லையா?"

அவன் பதில் சொல்ல வில்லை. "TS" அவனை நெருங்கினார். அவனது தோழில் உரிமையோடு கையை வைத்து தனது பக்கம் திருப்பினார். அவன் இயந்திர மனிதன் போல் திரும்பினான். விழிகள் எங்கோ வெறித்தன. ஒரு கணம் "TS" அதிர்ந்து போய்விட்டார். விடுதி அதிகாரிக்கு அறிவித்து மருத்துவரை அழைப்போமோ என்று சிந்தித்தார். பின்பு சிறிது முதலில் கதைத்துப் பார்ப்போம் என்று முடிவு செய்தார். அந்த முடிவோடு "றூபன் என்னைப் பார். றூபன் என்னைப் பார்." என்று கன்னத்தில் தட்டினார். அவன் நித்திரையில் இருந்து விழித்தது போல விழித்தான். பின்பு தலையை பிடித்துக் கொண்டு கட்டிலில் இருந்தான்.

"அவங்கள் சுட்டுப் போட்டாங்கள்."

"யார் யாரைச் சுட்டது?" விளங்காது "TS" கேட்டார்.

"ஆமி அண்ணை... என் கண் முன்னால, என்னை, கோணேசை, சுப்பன, மணியத்தை, குமரனை,

தெரிஞ்சவையை, தெரியாதவையை எண்டு எல்லாரையும் சுட்டாங்கள். மனிசற்ற உடம்புகள் நிலத்தில விழுந்து உதறி உதறி துடிப்பு அடங்கிச்சுது. எனக்கு மேல விழுந்து, விழுந்து துடிச்சு துடிச்சு சூடான இரத்தத்தைப் பீய்ச்சிப் பீய்ச்சி மூச்சு அடங்கிச்சுது. அந்த இரத்தம் சூடா என் மேல் எல்லாம் ஊர்ந்து ஓடிச்சுது. வழுவழுப்பா, சூடா, பசையா, வெடுக்கான மணமா, ஐயோ… ஐயோ... ஏன் இந்த அநியாயம் நடந்திச்சுது அண்ணை? அவங்கள் யாருக்கு என்ன கெடுதல் செய்தாங்கள்? எங்களுக்கு அப்ப என்ன தெரியும்?. 'ஓ எல்' பாஸ் பண்ண வேணும் எண்டு ஓடி ஓடிப் படிச்சது தவறா?

அப்பா குளத்தில கால் கடிக்கக் கடிக்க ஊத்தைத் தண்ணிக்க நாள் முழுவதும் நிண்டு பாடுபடுவார். எதுக்காகத் தெரியுமா? நாங்களும் அவரைப் போல கஸ்ரப்படக் கூடாது மட்டும் இல்லை யாரிட்டையும் அடிமைச் சேவகம் செய்யவும் கூடாது எண்டுதான் அப்பிடிப் பாடுபட்டார். அவர் இரவு பகல் பார்க்காமல் மழை வெயில் பார்க்காமல் குளத்துக்க கிடந்தார். நாங்கள் அரசியல் பேசினமா? எங்கடை தொழில், எங்கடை வாழ்க்கை எண்டு தானே இருந்தம். எப்படி அண்ணை ஆமி எந்த வித்தியாசமும் இல்லாமல் எங்களைச் சுடுவான்? எதுக்காக ரீசனுக்குப் போன எங்களை நிப்பாட்ட வேணும்? எதுக்கா வஸ்சில இருந்து எங்களை இறக்க வேணும்? எதுக்கா ஈவிரக்கம் இல்லாமல் சுட்டுக் கொல்ல வேணும்? சொல்லுங்க அண்ணை? எங்களுக்கு என்ன தெரியும்? ஏன் இந்த அநியாயம் எங்களுக்கு நடந்தது?"

"TS"சிற்கு குழப்பம் விளங்கியது. காயாது சீழ் வடியும் மனைந்த புண்ணை நகத்தால் சொறிந்து சுகம் காண்பதற்கு நேரமும் தனிமையும் கிடைத்து இருக்கிறது. சொறிந்து ஆகிற்று. சீழோடு தற்போது இரத்தமும் கலந்து அதில் இருந்து வடிகிறது. சொறிவது இன்பம் தரலாம் என்று நினைத்துப் புண்ணைச் சுரண்டச் சுரண்ட அது இழுத்து இழுத்து வலிக்கும் வேதனைக்குள் தள்ளி விடுகிறது. எப்படி இவனுக்குச் சமாதானம் சொல்வது? இலங்கையில் மனதைப் பார்க்கும் விதத்தில் உள்ள குறைபாடுகள் "TS"சிற்குத் தெரியும். இங்கும் அதற்கான அக்கறை இன்மை கவலையைத் தந்தது. அதைவிட இப்போது இவனை எப்படிச் சமாதானம் செய்வது என்கின்ற கேள்வி பல்லின் ஈற்றில் தங்கிய மாமிசம்

இரத்தம் வழியச் சிரிக்கும் பூதமாகியதாக அவரைப் பயமுறுத்தியது.

"பழசை நினைச்சா ஒருத்தருக்கும் நிம்மதி இருக்காது. அவங்களுக்குத் தமிழர் எண்டது மட்டுமே தெரியும். தமிழருக்குத் தாங்கள் யார் எண்டது முழுமையா விளங்குகிறேல்லை. அது எல்லாம் பழைய கதை. நாங்கள் அந்த அதர்ம ஆட்சியில இருந்து இப்ப தப்பி வந்தாச்சுது தானே? பிறகேன் அதையே நினைச்சுக் கொண்டு இருப்பான். பழசுகளை மூட்டைக் கட்டி வைச்சிட்டு சுருக்கா வெளிக்கிடு."

"என்னுடைய சினேகிதர்களை நினைச்சா செத்துப் போயிடோணும் போல இருக்குது."

"நீ செத்தா அவங்கள் திரும்பி வருவாங்களா றூபன்? ஏதோ அவங்கடை கெட்ட காலம் அப்பிடி போயிட்டுது. பெடியள் அப்பிடிக் குண்டு வைப்பாங்கள்... ஆமி அப்பிடிச் சுடுவாங்கள் எண்டு யாரும் நினைச்சு இருந்தவையா? எல்லாம் கனவு மாதிரி நடந்திச்சுது. அதுக்குப் பிறகு எவ்வளவு பேர் செத்துப் போனாங்கள்? எல்லாருக்கும் உறவுகள் இருக்கும். நட்புகள் இருக்கும். அதுக்காக அவை எல்லாம் வாழாமலா இருக்கினம்? மனதைத் திடப்படுத்திக் கொண்டு வருங் காலத்தைப் பார்க்க வேணும். உம்முடைய அப்பா பட்ட கஸ்ரங்களுக்கு மரியாதை கொடுக்கிறது எண்டா நீ அதைச் செய்ய வேணும்."

"சரி நான் இப்ப வாறன்."

அதன் பின்பு "TS" அங்கு நிற்கவில்லை. அவன் தேறிவிடுவான் என்று அவருக்குத் தோன்றியது.

ஒன்பது நாற்பது போலவே அந்தப் பேருந்து வந்து விட்டது. வெள்ளையும் நீலமும் நோர்வே மக்களுக்கு அதிகம் பிடித்த நிறமாக இருக்க வேண்டும். வெள்ளை நிற அந்தப் பேருந்திற்கு நீல நிறத்தில் இராம பாக்கியம் பெற்ற அணில் போலக் கோடுகள் இழுக்கப்பட்டு இருந்தன. ஆதவனின் கதிர்கள் அதிற்பட்டு வைரக் கதிர்களாய் தெறித்துக் கண்ணைக் குற்றின. அது கறுத்தக் கண்ணாடி அணிவது அழகிற்கு மட்டும் அல்ல என்கின்ற உண்மையை மீண்டும் ஒரு முறை ஞாபகத்தில் நிறுத்தியது. தூரத்தில் சுதேசிகள் நீலக் கடலில் வெள்ளை உருவங்களாக தமது வள்ளங்களில் நிமிர்ந்து

நின்றனர். சிற்றலைகள் ஊந்து ஊர்ந்து மலைத் தீவை நோக்கிச் சென்றன. அந்த மலைத் தீவின் அற்புதம் "TS"சை இன்று மயக்கியது. அது என்றும் தனது கம்பீரத்தால், இயற்கை அழகால், மானிட ஜென்மங்களை மயக்கும் என்பது அவருக்கு அன்றே விளங்கி இருந்தது. தென்றலாக விலாசம் எழுதிய காற்று மெல்ல உடலை வருடிச் சென்றது. அதிகம் வெப்பம் ஆகாது அன்னையைப் பாதுகாப்பதாய் அது சேதி சொல்லிற்று. என்றும் சலிக்காத அலைகள் இன்றும் போராடிக் கரையைத் தொட்டு விளையாடின. தோணிகள் ஓட்டி விளையாடுவோம் என்கின்ற சொல்லில் எத்தனை அர்த்தங்கள், இன்பங்கள்? எத்தனை அழகு சொற்கள் என்கின்ற மலைப்பு "TS"சிற்கு உண்டாகியது. தோணிகள் ஓட்டி விளையாடுவோம் என்று "TS" தனக்குள் முணு முணுத்தார். இத்தினை கொள்ளை அழகை விட்டு இன்னொரு இடமா என்கின்ற எண்ணம் வந்தது. அங்கேயும் அழகு இருக்கும் என்பதும் அதை இரசிப்பதற்கு எங்களிடம் இரசனை மட்டுமே இருக்க வேண்டும் என்பதும் அவருக்கு விளங்கியது. இரசனையில், மற்றவரோடு கதைப்பதில், எழுத்தை, கலையை விளங்கிக் கொள்வதில் தன்னால் மேல் ஸ்தாகிக்குப் போக முடியுமா என்பது அவருக்கு விளங்கவில்லை. எல்லாம் முயற்சியும் பழக்கமும் என்று அவர் மீண்டும் நினைத்துக் கொண்டார்.

புற்றுக்குள் இருந்து ஈசல்கள் புறப்படுவது போல ஒவ்வொருவராக வெளியே வந்தார்கள். சாரதியும் பேருந்தை நிறுத்தி விட்டு விமானியைப் போலக் கீழே இறங்கி வந்தார். அவர் நீலச் சீருடை அணிந்திருந்தார். மேல் அங்கியைக் கழற்றி இருக்கையில் கொழுவிய பின்பு வெள்ளைச் சட்டையோடு வெளியே வந்தார். அவருக்கு இதுவே வெப்பமாகத் தோன்றி இருக்க வேண்டும். தமிழர்களில் பலர் மேலங்கியுடன் நின்றார்கள். சாரதி இறங்கி வருவதைப் பார்த்த விடுதி அதிகாரி பட்டியலுடன் அவசரமாக வெளியே வந்தார். ஒரு முறை ஆட்களை மீண்டும் எண்ணிப் பார்த்துவிட்டுப் பட்டியலைச் சாரதியிடம் கொடுத்தார். சாரதி "மீண்டும் சந்திப்போம். " என்று கூறி விட்டுப் பேருந்தை நோக்கிச் சென்றார்.

சாரதி பேருந்திற்குச் செல்லவும் அனைவரும் முந்தி அடித்து அதில் ஏறினார்கள். எதற்காக என்பது "TS"சிற்கு விளங்கவில்லை. இடம் இல்லாது போய்விடாது என்பது மட்டும் அவருக்கு விளங்கியது. தேங்காய் உடைத்துக் கற்பூரம் கொழுத்த இங்கு யாரும் வராததால் சரியாகப்

பத்து மணிக்குக் கணக்குப் பார்த்து முடிந்ததும் சாரதி பேருந்தை எடுத்தார். பேருந்து நகரத் தொடங்கியதும் ஒலி பெருக்கியை எடுத்து அவர் ஆங்கிலத்தில் முதலில் நல்வரவு கூறிவிட்டு அனைவரும் ஆசனப் பட்டியை போட்டுக் கொள்ள வேண்டும் என்பதையும், அத்தோடு மூன்று மணித்தியாலத்தில் நாங்கள் 'பாக்கர்னஸ்' சென்று விடலாம் என்றும் கூறினார். பின்பு இவர்களுக்குத் தெரிந்த பாதையால் சந்தி வரையும் சென்று நெடுஞ்சாலையில் வாகனத்தை இறக்கினார்.

பேருந்து ஒஸ்லோவிற்குச் செல்லாது எதிர்ப் புறமாய் பயணித்தது. நகரைப் பகலில் பார்க்கலாம் என்று எண்ணியவர்களுக்கு அது பெரும் ஏமாற்றம் ஆகியது. நெடுஞ்சாலை எங்கும் வாகனத்தின் நெருக்கம். அவற்றின் மின்னல் வேகம். அவ்வளவு வாகனங்கள் நெடுஞ்சாலையில் பயணித்தும் வாகனத்தின் இரைச்சலைத் தவிர வேறு எந்தச் சத்தமும் இருக்கவில்லை. "Horn" அடித்தால் மட்டும் வாகனம் ஓடுவதாய் உணர்ந்து பழகியவர்களுக்கு அது ஏதோ ஊமைப் படம் பார்ப்பது போல இருந்தது.

பரந்து கிடந்த வயல்களில் பச்சை இல்லை. பனி இன்னும் முழுமையாகக் கரையாது உப்புக் குவியல்கள் போல வெள்ளைத் திட்டிகளாய் எங்கும். பனியின் அடியில் கிடந்து உயிரே உறைந்து உயிர்ப்பிற்காய் துடிக்கும் பழுப்பு நிறப் புற்கள். மலைகளில் இயற்கையை வெல்லும் இயற்கையாக ஓங்கி நின்ற ஊசி இலை மரங்கள். அவை பனியையும் குளிரையும் வென்று பசுமை காத்த தோற்றம். நோர்வே சுவர்க்கத்தின் அழகைத் தன்னகத்தே கொண்ட நாடு. குளிர் காலத்தில் வெள்ளை அழகும் கோடைக் காலத்தில் பச்சை அழகும், இடைப்பட்ட காலங்களில் பொன் அழகும் பொங்கும் வர்ணம் கொண்ட நாடு. இத்தினை அழகுள்ள அந்த நாடு மலையும், மலை சார்ந்த பகுதியையும் கொண்டது. அதைக் காட்சியாக்கி அவர்கள் பயணம் தொடர்ந்தது. இயற்கையை இரசிப்பவர்கள் தொடர்ந்து இரசித்தார்கள். அலுத்தவர்கள் தங்களுக்குள் கதைத்தார்கள்.

சிவா அருளனோடு இருந்தான். அவர்கள் இருவரும் வெளியே பார்த்துப் பார்த்துக் கதைக்கத் தொடங்கினார்கள். அருளனே முதலில் அதைத் தொடங்கினான்.

"மார்க்சிசத்தை முழுமையாகக் கடைப்பிடித்து மக்கள் புரட்சி செய்திருந்தால் எங்கள் நாட்டிலேயே நாங்கள் சுதந்திரமாய் வாழ்ந்து இருக்கலாம்." என்று அவன் அதைத் தொடங்கினான்.

"அது எப்பிடி நீர் சொல்லுறீர்? உம்மடை கருத்தைப் பார்த்தா மார்க்சிசப் புரட்சி வந்தா இன பாகுபாடே இல்லாமல் போயிடும் எண்டுறீர். அப்பிடித் தானே?" என்றான் சிவா.

"அதிலை எல்லாம் யாருக்கும் சந்தேகம் வருமா? சொவியத்யூனியன் எத்தினை நாடுகள் கொண்டது? எத்தினை இனங்கள் கொண்டது? இப்ப ஒன்று சேர்ந்த, பாகுபாடு அற்ற, சமதர்ம நாடு தானே? இப்ப அங்க இனங்களுக்கு உள்ள பிரச்சனை இருக்குதா?" என்றான் அருளன்.

"இல்லையா?" என்றான் சிவா நம்பிக்கை இல்லாது.

"சிவா எது எதுக்குச் சந்தேகப் படுகிறது எண்டு ஒரு அளவு இருக்க வேணும்." என்றான் அருளன்.

"எனக்குத் தெரியாது. அப்ப அதிசயமாகத்தான் கேட்கலாம். போய் பார்க்கலாம் எண்டா இவங்களை மாதிரி அசூல் குடுக்கிறாங்களே? இல்லையே? ஆனா இவ்வளவு நம்பிக்கை வைச்சிருக்கிற நீர் இங்க வந்ததை விட அங்க போய் அசூல் அடிச்சு இருக்கலாம். முதலாளித்துவ நாடுகளுக்கு வந்த பிறகு நாங்கள் கொமினிசத்தைப் பற்றி அதிகமாக் கதைக்கிறம். ஆனாக் கொமினிச நாடுகளில அதைப் பற்றிக் கதைக்க விரும்புவாங்களோ தெரியாது?"

"நீர் ஒரு குட்டிப் பூர்சுவா. உமக்கு சமதர்மத்தில நம்பிக்கையே கிடையாது. அப்ப உம்மை நம்ப வைக்கிறதும் லேசில்லை." என்றான் அருளன்.

"ஏன் எனக்கு சமதர்மத்தில நம்பிக்கை இல்லை? நான் குட்டிப் பூர்சுவா வர்க்கத்தில இருந்து வரேல்ல. உழைக்கும் வர்கம் நாங்கள். சமத்துவம், சமதர்மம் எண்டுறீர் அந்தப் பெயரில நடக்கிற சர்வாதிகாரம், கொலைகள், தனிமனித வழிபாடுகள் பற்றி உமக்கு என்ன தெரியும்? கடையில பொருட்களுக்கு நாள் போனா அதைத் தூக்கி எறிய வேண்டி வருகுதில்லையா?

அப்பிடித்தான் காலாவதியான, காலத்தோடு ஒத்து ஓடாத, மானிடத்திற்கு நன்மை பயிர்க்காத, வெறும் தத்துவமாய் புத்தகத்தில் மட்டுமே வாழுவதைக் காலமாகியதாய் முத்திரை பதிக்க வேண்டும். கீதை காலாவதியாகாத கருத்து என்பேன். அது தனி மனிதனைப் பற்றியது. இன்றும் அது பொருந்துகிறது. நான் தொழிலாளி வர்கத்தில் பிறந்தேன் என்பதற்கு ஆகத் தொழிலாளிகள் சர்வாதிகாரிகளாய் மாறுவதை ஏற்றுக் கொள்ளப் போவது இல்லை." என்றான் சிவா.

"நீர் பைத்தியம் மாதிரிக் கதைக்கிறீர். காலத்தால் அழியாத கல்வெட்டான உலகப் பாட்டாளிகளின் அசைக்க முடியாத தத்துவம் மார்க்சிசம். அதைக் காலாவதியாகும் என்று இல்லாத இறைவனை, கல்லில் சமைத்த சிலையை மேன்மைப் படுத்திக் கூறிய முதல் மூட மனிதன் நீரே."

"ம்… அண்டமே காலாவதியாகும் என்கிறார்கள். அற்ப மனிதனின் சிவப்பு மட்டைப் புத்தகங்கள் எவ்வளவிற்கு? எல்லாம் அறிந்த மனிதன் என்கிறாயே உனக்கு இறப்பு எப்போது தெரியுமா? அல்லது நீ விரும்பிய இடத்தில் பிறந்தாயா? உன் விருப்பத்திற்குப் பிறக்க முடியமா? அல்லது அப்படியே எங்கள் விருப்பப்படி ஏதும் நடக்குமா? நிரந்தரம் என்பதே நிரந்தரம் அற்ற உண்மையே மட்டும் நிரந்தரம் தெரியுமா?"

"நான் தொழிலாளி வர்க்கம் என்று சொல்லிவிட முடியாது. என்றாலும் மார்க்சிசத்தை முழுமையாக நம்புகிறேன். நீர் தொழிலாளி வர்க்கத்தில் இருந்து வந்தும் அதற்கு விசுவாசமாய் இல்லையே?"

"இப்ப எண்டாலும் விளங்குதா, யாருக்காகவோ யாரோ போராட முடியாது? அப்படிப் போராடவும் கூடாது. அது அவர்கள் மேல் பிரயோகிக்கும் திணிப்பு. அவர்கள் சுயமாக எப்போது போராடுகிறார்களோ அன்றே அது போராட்டமாகும். உங்கள் பாசையில் மக்கள் போராட்டம் ஆகும். எது எப்படி இருந்தாலும் இந்த உலகத்தில் அந்தத் தத்துவங்கள் இனி எடுபடப் போவது இல்லை."

"நாங்கள் இருவரும் வாழும் வரைக்கும் அதைப் பார்க்க முடியும். அதன் பின்பும் போராட்டம் நடக்கும்."

"ம்... பார்ப்போம்." என்றான் சிவா.

எண்ணெய்யாக இருந்தாலும் தண்ணியாக இருந்தாலும் இயற்கை தாராளமாக அள்ளிக் கொடுத்த நாடாக நோர்வே. எங்கே பார்த்தாலும் மலைகளும், மலை அடிவாரங்களும், சிற்ரருவிகளும், பேரருவிகளும், நதிகளும், ஊசியிலை மரங்களும், வயல் வெளிகளும், பண்ணைகளுமாக தன் மீது வனப்பும், செழிப்பும் அணிகலங்களாக அணிந்த அழகு தேசம். பேருந்து அந்தத் தேசத்தின் செழிப்பைக் காட்டிய வண்ணம் வேகமாகத் திரைகளை மாற்றிக் கொண்டு விரைந்தது. இந்த வேகத்தில் இலங்கையில் பேருந்துகள் பயணிக்க முடியாது. பயணித்தால் தரையில் ஓடுவதற்குப் பதிலாக ஆகாயத்தில் பறக்க வேண்டி இருக்கும்.

பரமேஸ் ஒரு இருக்கையில் தனியே சோகமாக இருந்தான். அவன் யாருடனும் கதைக்கவில்லை. அவன் மனது அனாகியை நினைத்துக் குமுறியது. அவள் நினைவு அவனைச் சிலையாக்கி, மனதை எரிமலை ஆக்கியது. குமுறும் இந்த எரிகுளம்பை மூடும் கருமையான மலை போல் அவனின் முகத்தின் இறுக்கம். கை கலப்பாக முடிந்திருக்கும். என்ன நடந்தாலும் அனாகி திரும்பி வரமாட்டாள் என்பது விளங்கியது. முதுகைச் சொறிவதாக எண்ணி அதைப் புண்ணாக்கிக் கொள்ள அவன் விரும்பவில்லை. ஊசிகள் நெரு நெரு என்று ஏறியதாய் இதயம் இடை விடாது வலித்தது. ஒவ்வொரு கணமும் அவள் அசைவுகள் அவன் மனக்கண் முன்னே நின்று கூத்தாடின. அவளைக் கண்ட நாள் தொடக்கம் அண்டசராசரத்தையும் மிஞ்சி விரிந்த கற்பனை அது. அத்தினையும் இதயத்தோடு சேர்ந்து முற்றுமாய் நொறுங்கியதான பரிதவிப்பு. அழ வேண்டும் போல் அடிக்கடி உந்தும் உணர்வை இனி அடக்கச் சக்தி இல்லை என்கின்ற அவதி அணை உடைப்பதாக. யாரோடும் கதைக்கவோ, எதையும் பார்க்கவோ அவனுக்குப் பிடிக்கவில்லை. யாரும் தன்னுடன் கதைக்கக் கூடாது என்கின்ற எண்ணத்தில் கண்ணை மூடி நித்திரை கொள்வதாகப் பாசாங்கு செய்யத் தொடங்கினான். அவன் பாசாங்கிற்கு உள்ளும் அவள் வந்தாள். இமையைப் பிரித்து உள்ளே வந்து விழுந்து விழுந்து குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். அவள் சிரிக்கச் சிரிக்க பரமேசிற்குக் கோபமும் வெறுப்பும் வந்திற்று. ஆயிரம் பொய் சொல்லலாம் என்கிறார்கள். ஒரே ஒரு பொய் சொன்னான். பொய் சொன்னாயா என்று கேட்டுவிட்டு அவள் போய் விட்டாள். அதை எண்ண எண்ண அவன் வலி கூடியது.

வாகனத்தை விட்டு இறங்கி மனிதர்கள் இல்லாத இடத்திற்கு ஓட வேண்டும் போல் இருந்தது. பேருந்து மலைகளில் ஏற ஏற எங்கும் வெள்ளை நுரைப் பாளங்களாக மலைகளில் பனியின் படிவுகள். பேருந்தை விட்டு இறங்கினால் குளிரில் விறைத்துச் சாக வேண்டி வரும் என்கின்ற பயம். அனாகி என்று அவன் முணுகினான். பேருந்து இரைந்த வண்ணம் ஒரு ஏற்றத்தில் ஏறியது.

கடைசியாக அது ஒருவாறு ‘பாக்கர்னஸ்’சை அடைந்தது. அது ஒரு சிறிய மலை நகரம். அப்படி இருந்தும் புகையிரதச் சேவை அந்த நகரத்திற்கு அமைக்கப்பட்டு இருந்தது. அந்த நகரத்தைத் தாண்டிச் சென்றால் பேருந்தை மட்டுமே நம்பி இருக்க வேண்டும். ‘பாக்கர்னஸ்’ நகருக்கு ஊடாக நீலத்தைக் கரைத்து ஊற்றியதான நிறத்தில் சுத்தமான பளிங்கு ஆறு ஒன்று ஓடியது. அதன் கரையில் தொழிற்சாலை ஒன்று கைவிடப்பட்ட நிலையில் அனாதரவாய் கிடந்தது. நகரின் மத்தியில் பல கடைகள், அலுவலகங்கள், கட்டடங்கள், விடுதிகள் என்பன இருந்தன. ‘பாக்கர்னஸ்’சைத் தாண்டிப் போகும் போது சாரதி கனைத்து விட்டு "நாங்கள் வெஸ்திர சிலிடிரில் உள்ள பொசைம் என்கின்ற இடத்திற்குப் போகிறோம்." என்று கூறினார். அதன் பின்பு பேருந்து ஒரு ஏரியின் கரையை ஒட்டிய பாதையில் பயணித்தது. இந்த ஏரியைப் பார்க்க சொரூபனுக்கு வியப்பாக இருந்தது. எவ்வளவு பெரிய ஏரி அது. இப்படி ஒரு ஏரி யாழ்ப்பாணத்தில் இருந்திருந்தால் குடாநாடு முழுவதிற்கும் வருடம் பூராகவும் குடிநீர் தட்டுப்பாடு இல்லாது வழங்கி இருக்கலாம் என்று அவனுக்குத் தோன்றியது. பேருந்து பின்பும் சிறிது நேரம் பயணித்தது. இறுதியாக ஒரு பள்ளப் பாதையில் இறங்கி பெரிய விடுதியின் முன்பு நின்றது.

# 15 விடுதி வாழ்க்கை

அந்த விடுதித் தொடரில் வெள்ளை நிறமான பெரியதொரு கட்டடம் முன்னுக்கு இருந்தது. அங்கே சாப்பாட்டு அறை, வரவேற்பு அறை, சமையல் அறை, களஞ்சியம் போன்றவை இருந்தன. அதைவிடச் சிறு வீடுகள் பின்னே நிரையாக இருந்தன. அவை பெரிய பெரிய நீட்டு மரங்களைக் கோர்த்துச் செய்யப்பட்டவை. "TS" அப்படியான மரத்தால் மட்டும் கட்டப்பட்ட வீட்டை இது வரை பார்த்ததில்லை. அவருக்கு அது வியப்பாகவும் புதுமையாகவும் இருந்தது. அந்தச் சிறு வீடுகளின் ஒரு பக்கம் ஏரிக் கரையைக் கொஞ்சி விளையாடியது. ஏரிக்கு எதிர்க் கரையில் கம்பீரமாக எழுந்து நிற்கும் மலைகள் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை தொடர்ந்து சென்றன.

ஏற்கனவே அவர்களுக்குத் தெரிந்து இருக்க வேண்டும். அவர்கள் வரவேற்பதற்காய், விடுப்புப் பார்ப்பதற்காய் கூடி நின்றார்கள். போகும் இடத்தில் இவ்வளவு தமிழர்கள் இருப்பார்கள் என்று யாரும் எதிர்பார்க்க இல்லை. அந்த வரவேற்பு பலருக்கும் மகிழ்வைத் தந்தது. அந்தச் சிறு வீடுகளாய் தோன்றுவதற்கு உள்ளே தமிழர்கள் வாழ்கிறார்கள் என்பதை "TS" விளங்கிக் கொண்டார்.

அந்த விடுதியின் பொறுப்பாளர் வயதான ஒரு நோர்வேஜியர். வைரம் போன்று மினுமினுத்த நீலக் கண்கள். பஞ்சான தும்பு முடி. பத்து மாதப் பிள்ளையைத் தாங்கும் கர்ப்பிணிக்கான உப்பிய வயிறு. சராசரி உயரம். வாழைத் தண்டான மொத்தமான கையும் காலும். கட்டை வெள்ளைச் சட்டையும் காக்கிக் காற்சட்டையும் அணிந்து இருந்தார். முகத்தில் இம்மிய கணமும் மறையாத மென் சிரிப்பு? இல்லைப் புன்சிரிப்பு.

சாரதி அவரிடம் பட்டியலைக் கொடுத்தார். விடுதிப் பொறுப்பாளர் அதன் பின்பு ஒவ்வொருவராகக் கை குலுக்கி தன்னை அறிமுகம் செய்து கொண்டார். அப்படி அறிமுகம் செய்யும் போது தனது பெயர் மாட்டின் கன்சன் என்றார். அதைப் போல தமிழர்களும் தங்கள் பெயரைச் சொன்னார்கள். தமிழரின் பெயரைத் திருப்பி உச்சரிக்கும் துணிவு அவருக்கு இருந்ததாய் தெரியவில்லை. அவர்

புன்சிரிப்பு மாறாது எல்லோரையும் அறிமுகம் செய்து கொண்டார். அவர் அறிமுகம் செய்து கொண்டு இருக்கும் போதே பேருந்து புறப்பட்டு ஒஸ்லோ நோக்கிச் சென்றது.

விடுதிப் பொறுப்பாளர் புதிதாக வந்த பதினொரு நபர்களையும் அழைத்துக் கொண்டு அந்தச் சிறிய இடைக்கால விடுதிக்குள் சென்றார். முன்னால் இருந்த ஐந்து வீட்டில் ஏற்கனவே தமிழர்கள் குடி இருந்தார்கள். வந்து நின்று விடுப்புப் பார்த்ததில் ஒரு திருமணமான பெண்ணும், ஒரு திருமணமாகாத பெண்ணும் நின்றதைப் பரமேஸ் கவனித்தான். அவனுக்கு அதற்கு மேல் அவர்களைப் பார்க்கப் பிடிக்கவில்லை. தளிரான அனாகி அவனிடம் இருந்து பிரிக்கப்பட்டதில் அவன் வாழ்க்கை வெறுத்துப் போய்விட்டான்.

பொறுப்பாளர் ஆறாவது வீட்டைத் திறந்தார். வெளியே பார்த்ததைவிட உள்ளே அது விலாசமாக ஐந்து நட்சத்திர விடுதிகளின் தரத்திற்கு ஒப்பாக, நவீனமாகவும், வசதியாகவும் இருந்தது. பொன்னால் செய்தது போன்று உள்ளே மரம் வழுவழுப்பாகத் தக தகத்தது. நோர்வேயில் மரம் அதிகமாகக் கிடைக்கும். மரத்தால் செய்யப்படும் வீடுகள் குளிரைத் தாங்கும். அத்தால் இங்கே பரவலாக மரத்தால் வீடு கட்டப்படுவது உண்டு. பல வீடுகள் மரப் பலகையால் கட்டப்படும். சில முழு மரத்தால் கட்டப்படும். இத்தச் சிறு வீடுகளும் அப்படியாக முழு மரத்தால் வடிவமைக்கப்பட்டு இருந்தது. வீட்டிற்கு இரண்டு தளங்கள் இருந்தன. கீழே நான்கு படுக்கைகள், குளியல் அறை, சிறிய சமையல் அறை என்பன இருந்தன. சமையல் அறையில் சிறியதொரு குளிர்சாதனப் பெட்டியும் அடுப்பும் இருந்தது. அத்தோடு கோப்பி தயாரிக்கும் இயந்திரமும், சில சமையல் பாத்திரங்களும் இருந்தன. மேல் தளத்தில் தொலைக்காட்சி, சாப்பாட்டு மேசை, சோபா, இரண்டு படுக்கைகள் இருந்தன. வீட்டிற்குள் வந்து ஆராய்ச்சி கண்களோடு பார்த்துக் கொண்டு நின்றவர்களை நோக்கிய மாட்டின்,

"இந்த வீட்டில் ஆறு நபர்கள் தங்கலாம். அடுத்த வீட்டில் தற்போதைக்கு ஐந்து நபர்கள் தங்கிக் கொள்ளுங்கள். இங்கு யார் யார் தங்கப் போகிறீர்கள் என்று கையை உயர்த்துங்கள் என்று கூறினார்."

அதற்கு **"TS",** சிவா, சோரூபன், அருள், நிமலன், றூபன் என்போர் கையை உயர்த்தினர். சிவாவோடு அதே வீட்டில்

தங்குவது நிமலனுக்குப் பிடிக்கவில்லை. "TS"சோடு தங்கினால் புத்திமதி சொல்வதோடு உதவிகளும் செய்வார் என்பது விளங்கியது. அதை அவன் இளக்க விரும்பவில்லை. அதற்காகச் சிவாவின் கடியை வாங்குவதற்கு அவன் வேறு வழி இன்றி ஒத்துப் போனான். பரமேசிற்கும் முதல் வீட்டில் நிற்பதற்கு விருப்பமே. சிவா அங்கு நிற்கிறான் என்பதைக் கண்ட உடன் அவன் தனது எண்ணத்தை மாற்றிக் கொண்டான். சிவா இருக்கும் வீட்டில் அவனால் இருப்பது பற்றி சிந்திக்க முடியவில்லை.

"சரி நாங்கள் மற்ற வீட்டிற்குப் போவோமா?" என்று கூறிவிட்டுப் பொறுப்பாளர் நகர அவர் பின்னே பரமேஸ், சண்முகன், சுபத்திரன், திருநா, குலம் ஆகியோர் சென்றார்கள். கொஞ்சம் நிம்மதியாக, சுகந்திரமாக இருக்க இவர்கள் சரியெனப் பரமேஸ் நினைத்தான். "TS" வந்திருந்தால் புத்திமதி சொல்லத் தொடங்கிவிடுவார். சிவா வந்தால் கடித்துக் கொண்டே இருப்பான். அல்லது குழப்பிக் கொண்டு இருப்பான். இருவரும் இல்லாதது சுதந்திரமாக இருக்கும். அதே வேளை "TS" இருந்தால் ஆங்கிலத்தில் கதைத்து எதாவது அலுவல்கள் செய்து கொள்ள இலகுவாக இருக்கும் என்பதும் அவனுக்கு விளங்கியது.

அடுத்த வீடும் முன்னைய வீட்டின் பிரதி போலவே இருந்தது. அதைத் திறந்ததும் மீதி ஐந்து பேரும் அதற்குள் சென்றார்கள். மூன்று மணிக்கு மத்தியானச் சாப்பாடு கொடுக்கப்படும் என்று கூறிவிட்டு விடுதிப் பொறுப்பாளர் சென்று விட்டார்.

*

பின்பு குளிப்பவர்கள் குளித்து உடுப்புகளை மாற்றிக் கொண்டு சாப்பிடுவதற்குச் சென்றார்கள். கிட்டத்தட்ட நாற்பது தமிழர்கள் சாப்பாட்டு அறையில் இருந்தார்கள். ஏற்கனவே அவர்கள் இடம் பிடித்து விட்டார்கள். மீதி இடங்களில் பிந்தி வந்த இவர்கள் பரந்து இருக்க வேண்டியது ஆகிற்று. "TS"சின் ஊரைச் சார்ந்த சபேசன் அவரை அடையாளம் கண்டு விட்டு வந்து முதுகில் கைவைத்து "நான் பிறகு வந்து உங்களோடு கதைக்கிறேன்." என்று கூறிவிட்டுச் சென்றார். அருளனையும், நிமலனையும் தெரிந்தவர்களும் வந்து சில

நிமிடம் கதைத்து விட்டுச் சென்றார்கள். சாப்பாடு முடிய அறைக்கு வந்து கதைப்பதாய் கூறிவிட்டுச் சென்றார்கள்.

அன்று ‘சமன்’ மீன் உப்புச் சேர்த்து நீரில் அவித்து, அத்தோடு அவித்த உருளைக்கிழங்கு, மரக்கறி என்பனவற்றுடன் வெண்ணெய்யில் செய்யப்பட்ட கறி ஒன்றுடன் கொடுக்கப்பட்டது. அரிசிக்குப் பதிலாக நோர்வே நாட்டில் அவித்த உருளைக் கிழங்கைத்தான் சாப்பிடுவார்கள். பொதுவாகவே மேற்கு ஐரோப்பியர்களது உணவுப் பழக்கம் அப்படியே இருந்தது. பலராலும் அதைச் சுவைத்துச் சாப்பிட முடியவில்லை. சிலர் உப்பும், மிளகு தூளும், தபாஸ்கோ என்கின்ற மிளகாய் இரசத்தையும் விட்டுச் சாப்பிட்டார்கள். பலருக்கும் இந்த மீனைக் குளம்பாக வைத்துச் சோற்றை சமைத்துப் போட்டு இருந்தால் ஒரு பிடி பிடித்து இருக்கலாம் என்கின்ற எண்ணமே உண்டானது. இந்த உணவைச் சமைக்கும் சமையல்காரர் பொதுவாக ஐரோப்பிய உணவுகளையே சமைத்துப் பழக்கப் பட்டவர்கள். அவர்கள் முறையில் அவர்களுக்குச் சோறு சமைக்கத் தெரியும். தூள் போட்டுக் குளம்பு வைக்கும் ஏவுகணை விஞ்ஞானம் அவர்களுக்குத் தெரியாது.

சாப்பாடு சாப்பிட்டு முடிய ‘சொக்ளேற் பிட்டிங்’கும் மஞ்சள் கூழ் போன்ற ‘வனிலா கிறீமும்’ வழங்கினார்கள். பலருக்கும் அந்தச் சுவை பிடிபடவில்லை. சுவை பிடிபடாதவர்கள் அதிகம் அதைச் சாப்பிடவில்லை. மீனோடு கொடுத்த பிரதான சாப்பாட்டில் பசி தீராதவர்கள் சுவையைப் பற்றி அக்கறைப் படாமல் அதையும் சாப்பிட்டு முடித்தார்கள். பலரும் சாப்பிட்டு முடித்தாலும் யாரும் எழுந்து செல்லவில்லை. புதிதாக வந்தவர்கள் என்ன செய்வது என்று விளங்காது தடுமாறிய போது அந்த ஐம்பது வயது மதிக்கத்தக்கத் தமிழர் எழுந்தார். பின்பு கனைத்து விட்டு,

"என்னுடைய பெயர் புதிசா வந்தவைக்குத் தெரிஞ்சிருக்க நியாயமில்லை. என்னுடைய பெயர் வேலுப்பிள்ளை கந்தசாமி. இங்க என்னைக் கந்தர் எண்டு சொல்லுகினம். நீங்கள் கந்தர் எண்டும் சொல்லலாம் அல்லாட்டி சிலர் சொல்லுற மாதிரிக் கந்தரத்தார் எண்டும் சொல்லலாம். நான் ஊரில சுழிபுரத்தைச் சார்ந்தவன். சுழிபுரம் கந்தர் எண்டோண்ணை சுழிப்பா நினைக்கக் கூடாது. அந்தக் கந்தர் வேறை இந்தக் கந்தர் வேறை. இதில எந்தக் கந்தரும் ஆறுமுகத்தின்ர அடியார் இல்லை. சரி

விஷயத்திற்கு வருவம். இன்னும் கொஞ்ச நேரத்தில் முகாம் பொறுப்பாளர் பெறுமாதப் பிள்ளைத்தாச்சி போல இங்க வருவார். அதுக்கு முன்ன நாங்கள் இந்த நாக்குச் செத்த சாப்பாட்டை விட்டிட்டு எங்களுக்கு எப்பிடியான சாப்பாடு வேணும் எண்டு முடிவு எடுக்கோணும். விளங்குதே எல்லாருக்கும்?"

"ஏன் கந்தர்... நல்ல சாப்பாடு தந்தால் சாப்பிட மாட்டியளே? நத்தையை மெத்தையில வைச்சாலும் அது பத்தையை நோக்கித் தானாம் செல்லும்." என்றார் டிப்போட் சிவராசா. அவர் ஜேர்மெனியில் சில காலம் இருந்து ஏதோ தில்லு முல்லு அங்கே செய்ததால் திருப்பி இலங்கைக்கு அனுப்பப்பட்டு மீண்டும் நோர்வேக்குத் திரும்பி வந்தவர். குறிப்பாக ஏதோ ஒரு இயக்கத்திற்குப் போதைப் பொருள் கடத்திச் சிறையில் இருந்த பின்பு திருப்பி அனுப்பியதாக ஒரு வதந்தி. அது வதந்தியா அல்லது உண்மையா என்பது யாருக்கும் முழுமையாகத் தெரியாது.

"அது பத்தேக்க இருக்கிறதிலையும் சுகம் இருக்குது எண்டுகிறது நத்தைக்கு மட்டுமே தெரியுமாக்கும். எங்களை அவங்கள் நத்தையாகவே வைச்சுக் கொள்ளட்டும். பிறகு எதுக்கு எங்களுக்கு மெத்தையில இருக்கிறவையின்ரை சாப்பாடு. மனிசன்ர முதல் முக்கிய தேவையே சாப்பாடு. அதுக்கே இந்தப் பாடெல்லாம். அது வேற நாக்குச் செத்த சாப்பாடா இருந்தா வாழ்கிறதிலேயே அர்த்தம் இல்லாமல் போயிடும். யாரோ பெடியள் குளம்பும் சோறும் இல்லாட்டி உண்ணா விரதம் இருக்கப் போகிறம் எண்டு சொல்லுறாங்களாம். அப்பிடி எல்லாம் செய்யாதேங்கோ தம்பிமாரே. அந்தளவு தீவிரவாதம் இதில தேவை இல்லை. இந்தப் பிரச்சனையைப் பேசித் தீர்க்கலாம்." என்றார் கந்தர்.

"முதல் உந்த உருளைக்கிழங்கு அவியலை நிற்பாட்டச் சொல்ல வேணும். சிறிமாவின்ர காலத்தில மரவள்ளி கிழங்கைச் சாப்பிட்ட மாதிரி இருக்குது. பிறகு சோறு மத்தியானச் சாப்பாட்டுக்கு வைக்கச் சொல்லிக் கேட்க வேணும். சோத்துக்கு ஏத்த மாதிரி எங்கடை கறியள் ஏதாவது வைக்க வேணும். அவைக்குக் கஷ்டம் எண்டா நாங்கள் உதவி செய்து குடுக்கலாம்." என்றான் கிட்டுபாபு. அவருக்குக் கிட்டுபாபு என்கின்ற பெயர் கிட்டு ஏதோ பிழை செய்ததற்காக யாழ்ப்பாண நகரத்தில்

பெட்டையளுக்கு முன்பாக தூசனத்தால் பேசி அடி போட்டதாகவும், அதனால் வெறுப்புற்று, இயக்கச் சன்னியாசம் பூண்டு, இலங்கையை விட்டு வெளியேறி, சொகுசான அகதி வாழ்க்கை வாழ்வதோடு, கிட்டு அல்லது கிட்டு சம்பந்தப்பட்ட இயக்கம் என்றால் எரிபற்று நிலையை எப்படியும் அடைவார் என்பதும் பலருக்கும் தெரியும். மாற்று இயக்கங்களைத் தியாகம் செய்து அகதிகளாய் தஞ்சம் கோரியவர்களில் பலரும் தற்போது கிட்டுபாவின் அணியில் பகைவனுக்குப் பகைவன் நண்பன் என்று சேர்ந்து விட்டார்களாம்.

"ஓ அது சரி. எங்களுக்குச் சோறு கறி வேணும். அவைக்குச் சமைக்கிறது கஷ்டம் எண்டா நாங்கள் உதவி செய்யலாம். அப்பிடி இல்லை எண்டா நாங்களே சமைச்சுச் சாப்பிடுகிறம் எண்டு சொல்லுவம். உந்தப் பச்சைத் தண்ணிச் சாப்பாட்டை எங்களால தொடர்ந்தும் சாப்பிட ஏலாது. அது ஜெயில்ல இருந்து சாப்பிட்டுப் பழகினவைக்கு வேணும் எண்டா ருசியா இருக்கும்." என்றான் மூர்த்தி.

"ஓ இங்க இருக்கிறவை எல்லாம் கள்ளன்கள்? இவர் ஞானக் கண்ணாலா பார்த்து அவை எல்லாம் ஜெயில்ல இருந்ததைக் கண்டு பிடிச்சு இருக்கிறார்..." என்றான் டிபோட் சிவராசா.

"உங்கடை சண்டையைத் தயவு செய்து இங்க வைச்சுக் கொள்ளாதேங்கோ. எங்களுக்குச் சோறு கறி சாப்பாடா வேணும் எண்டு கேட்பம்." என்றார் கந்தர்.

"எங்களைக் காட்டுச் சனங்கள் எண்டு நினைக்கப் போகிறானவை." என்றான் ருத்திரன்.

"ஏன் அப்பிடிச் சொல்லுறீர் சொல்லும்? சோறு கறி சாப்பிடுகிறவனை நினைக்கக் காட்டான் மாதிரியா இருக்குது? அவையவைக்கு அவையவையின்ரை சாப்பாடு பெரிசு. அவங்களுக்கு நித்தமும் சோறு கறி சாப்பிடுகிறது எண்டா எப்பிடி இருக்கும்? அப்பிடியே எங்களுக்கும் அவிச்ச உருளைக் கிழங்கை நித்தமும் சாப்பிடுகிறது." என்றார் கந்தர்.

"சோறு கறி சமைச்சுத் தந்தா அவைக்கு நட்டமில்லை... எங்களுக்குத்தான் நட்டம். இப்ப அவையின்ரை சாப்பாடு தாறத்துக்குச் சோறு கறி தாறதை விட இரண்டு மடங்கு

செலவாகும் தெரியுமோ? ஒரு காலத்தில இதைப் பற்றி நினைச்சுக் கவலைப்படுவியள்." என்றான் டிப்போட் சிவராசா. அவன் அதைச் சொல்லி முடிக்கும் பொழுது முகாம் பொறுப்பாளரும் வந்துவிட்டார்.

"உங்களுடைய சாப்பாட்டுப் பிரச்சனை பற்றிக் கதைக்க வேண்டும் என்று சொல்லி இருந்தீர்கள். நானும் அதைப் பற்றிக் கொஞ்சம் யோசித்து இருக்கிறேன். எனக்குக் கொஞ்சம் அவசர வேலைகள் இருக்கின்றன. அதனால் இதை விரைவாக முடிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இப்பொழுது உங்களுடைய பிரச்சனையைச் சொல்லலாம்." என்றார்.

எல்லோரும் கந்தரைப் பார்த்தார்கள். கந்தருக்கு அது பிடித்து இருந்தது. மனதிற்குள் பெருமையாக இருந்தது. கனைத்துக் கொண்டு கீழ்க் கண்ணால் பார்த்த வண்ணம் கந்தர் எழுந்தார். பாராளுமன்றத்தில் தமிழருக்காகப் பேசப் போவதான கற்பனை அவரிடம். சாப்பாட்டு அறையில் இருந்தவர்கள் எல்லோரும் வாக்காளர்கள் என்கின்ற கற்பனை மனதில்.

"எங்களுக்கு இந்தச் சாப்பாடு பழக்கம் இல்லாதது. பழகீடும் எண்டு நினைச்சம். சுவை எங்களுக்குப் பிடிபடுகுது இல்லை. இந்தப் பழக்கம் இல்லாத சாப்பாட்டை விட்டிட்டுப் பழக்கமான சோறு, கறி எண்டா எங்களுக்கு அந்தக் கவலை இருக்காது. நீங்கள் எங்களுக்கு தமிழ்ச் சாப்பாட்டை ஒழுங்கு செய்ய வேணும்." என்றார் கந்தர்.

"எனக்கு அதில் எந்த ஆட்சேபனையும் இல்லை. பிரச்சனை என்ன என்றால் உங்களுடைய தமிழ்ச் சாப்பாடு எங்களுடைய சமையல் காரர்களுக்குச் சமைக்கத் தெரியாது."

"அப்படி என்றால் நாங்கள் சுயமாகச் சமைத்துச் சாப்பிட முடியாதா?"

"அது எப்படி இங்கே சாத்தியம் ஆகும்?"

"எங்கள் வீட்டில் இருக்கும் அடுப்பில் நாங்கள் சமைத்துச் சாப்பிடுகிறோம். சாப்பாட்டுப் பொருட்களுக்கான பணத்தைத் தந்தீர்கள் என்றால் சரி."

"அப்படிச் செய்வது எனக்கு வசதியானது. ஆனால் அதில் வேறு பெரிய சிக்கல் ஒன்று இருக்கிறது."

"என்ன அது?"

"அப்படிப் பலர் சமைப்பதால் வீடுகளில் நெருப்புப் பற்றிக் கொள்வதற்கான சந்தர்ப்பம் அதிகரிக்கும். அதை நான் அனுமதிக்க முடியாது."

"அப்படி என்றால் உங்கள் சமையல்காரர்களை அதைச் சமைத்துப் பழகச் சொல்லுங்கள்."

"அதற்கு நீண்ட நாட்கள் பிடிக்கும். நான் வேண்டும் என்றால் உருளைக்கிழங்கை நிறுத்திச் சோறு சமைக்கச் சொல்லுகிறேன்."

"கறி இல்லாது நாங்கள் எப்படிச் சாப்பிடுவது?"

"உங்கள் கறி அவர்களுக்கு சமைக்கத் தெரியாது. ஆனால் கோழி, ஆட்டு இறைச்சி போன்றவற்றில் 'கிறிதா்' எனப்படும் கறி மாதிரியான சாப்பாட்டை அவர்கள் நன்கு செய்வார்கள். அத்தோடு கிழமையில் ஒரு நாளைக்குப் பொரித்த கோழியும் சோறும் வைப்பார்கள். உறைப்புத் தேவையானவர்கள் தபாஸ்கோவைப் பாவியுங்கள். கொஞ்சக் காலம் அதை முயற்சித்துப் பாருங்கள். மேற்கொண்டும் அது பிரச்சனையாக இருந்தால் நாங்கள் மீண்டும் ஒரு முறை கூடிக் கதைப்போம்." என்றார்.

அதற்குக் கந்தரும் சரி என்றார். கூட்டம் கலைந்தது. புதியவர்களைத் தேடி பழையவர்களும், பழையவர்களைத் தேடிப் புதியவர்களுமாக அவர்கள் நட்பு வட்டத்தில் அபிவிருத்தி காணும் படலம் அதை அடுத்துத் தொடரல் ஆகிற்று.

ஒரு நாளைக்கு நான்கு முறை சாப்பிடுவதால் அதன் அளவும் அதற்கு ஏற்பவே இருக்கும். மூன்று முறை அல்லது காலையில் சாப்பிடாது இரண்டு முறை சாப்பிடும் தமிழர்களின் அளவு வேறு ஒரு விதமாக இருக்கும். எல்லோரும் சாப்பிட வேண்டும் என்கின்ற எண்ணம் இல்லாது என்னால் எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவைச் சாப்பிட்டால் சரி என்கின்ற எண்ணம் கொண்ட சுயநலமானவர்களும் உண்டு. அவர்கள் பங்கிட்டுச் சாப்பிடுதல் என்கின்ற மனித ஒழுக்கம் பற்றிச்

சிந்தியார். அதற்குப் பதிலாக தங்கள் வயிறு நிறைந்தால் சரி என்பதே குறிக்கோளாய் இருப்பார்.

*

சனிக் கிழமை படம் பார்த்துக் கொண்டு இருந்ததால் ஞாயிற்றுக் கிழமை ஆறுதலாக "TS", நிமலன், சிவா, அருளன் ஆகியோர் படுத்து இருந்தனர். இரவு சொரூபனும், ரூபனும் கட்டிலில் நேரத்தோடு படுத்து விட்டார்கள். அந்தத் தொலைக்காட்சிச் சத்தத்தில் அவர்களால் நித்திரை கொள்ள முடிந்ததா இல்லையா என்பது மற்றவர்களுக்குத் தெரியாது. அவர்களும் அதைப் பற்றி ஒன்றும் அலுத்துக் கொள்ளவில்லை. எப்போது படுக்கிறார்கள், எப்போது எழுகிறார்கள் என்பதிற்கு எந்தக் கட்டுப்பாடும் இங்கு இல்லை. வேலை செய்யும் சிலரே அதற்கு அவதிப்பட்டார்கள். அந்த நிலையை இங்கு எவரும் இன்னும் அடையவில்லை. சனிக்கிழமை இரவு பிந்திப் படுத்ததால் "TS", நிமலன், சிவா, அருளன் ஆகியோர் பிந்தியே எழுந்தார்கள். பின்பு அவசரமாக முகத்தைக் கழுவி விட்டுப் புறப்பட்டுக் காலைச் சாப்பாடு சாப்பிடுவதற்காய் சென்றார்கள்.

ஞாயிற்றுக் கிழமை காலைச் சாப்பாடு அவித்த முட்டை இல்லாது ஐரோப்பியருக்கு அரங்கேறாது. நாற்பது பேர் என்றால் நாற்பத்து ஐந்து முட்டை அவித்து வைப்பார்கள். ஆளுக்கு ஒன்று அவர்கள் கணக்கு. நோர்வே மக்கள் ஞாயிறு காலைச் சாப்பாட்டிற்கு ஒரு முட்டை மாத்திரம் எடுத்துக் கொள்வார்கள். அதிசயமாகச் சிலர் ஒன்றுக்கு மேலே எடுப்பார்கள். சிலர் எடுக்காமல் விடுவார்கள். வேறு விதமாக முட்டையில் செய்யப்படும் சாப்பாட்டிற்குக் கணக்கு வைக்க முடியாது. அந்தக் கணக்கில் இங்கும் ஒருவருக்கு ஒரு முட்டை என்கின்ற வீதத்தில் சில முட்டைகள் மேலாகவும் அவர்கள் அவித்து வைத்தார்கள்.

முட்டை சாப்பிடுவதற்கு என்றே சனிக் கிழமை நேரத்தோடு படுத்துச் சிலர் ஞாயிறு காலையே விரைவாக எழுந்து சென்று எவ்வளவு முட்டை சாப்பிட முடியுமோ அவ்வளவு முட்டையைக் கசக்கி கோதை உரித்துப் பாம்புகள் போல விழுங்கி விட்டார்கள். முட்டை விரைவாக முடிந்து கூடை வெறுமை ஆனது. அத்தோடு அவர்கள் விடவில்லை. பாணுக்கு மேலே வைத்துச் சாப்பிடும் இறைச்சியையும் மொத்தமாக வைத்துச் சாப்பிட்டு முடித்து விட்டார்கள்.

"Corn flakes" பால் எதுவும் மிச்சமாக இருக்காது பார்த்துக் கொண்டார்கள்.

வந்து பார்த்த "TS"சிற்கும் மற்றவர்களுக்கும் புகைச்சலாக இருந்தது. ஒரு பாண் துண்டுகூட இல்லை. பாண் துண்டு போன்ற "Biscuit" மட்டும் இருந்தது. அதைச் சாப்பிட அவருக்குப் பிடிக்கவில்லை. அவர் சமையல் அறைக்குள் சென்று யாரும் நிற்கிறார்களா என்று எட்டிப் பார்த்தார். அங்கு ஒரு இளம் பெண் நின்றாள். அவள் பார்ப்பதற்கு அழகுச் சிலையாக இல்லா விட்டாலும் காத்திரமான உடலைக் கொண்டவள். சிரித்த முகத்தோடு "TS"சைப் பார்த்து "நான் உங்களுக்கு என்ன உதவி செய்யலாம்?" என்று பணிவாகக் கேட்டாள். "TS" சாப்பாடு முடிந்து விட்டதைப் பற்றிக் கூறினார். அவள் "அப்படியா?" என்று வியப்போடு கேட்ட வண்ணம் வந்து சாப்பாடு வைக்கும் மேசையைப் பார்த்தாள். அவளுக்குச் சற்று வியப்பாகி விட்டது. "TS"சைப் பார்த்து,

"உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"எனக்குக் கோன்பிளெக்ஸ் தாருங்கள்." என்றார்.

"அவர்களுக்கு?" என்று மீண்டும் மற்றவர்களைப் பார்த்துக் கேட்டாள்.

"அவர்களுக்கும் கோன்பிளெக்ஸ் கொண்டு வாருங்கள்." என்று "TS" பதிலளித்தார்.

அவள் இரண்டு வகையான "Corn flakes"சையும் பால் பெட்டிகளையும் கொண்டு வந்து வைத்து விட்டுச் சென்றாள். அவளின் கருணையில் அன்றைய காலைச் சாப்பாட்டை "TS"சும் அவரோடு சென்றவர்களும் சாப்பிட்டு மகிழ்ந்தனர்.

*

மத்தியானச் சாப்பாடு முடிந்த பின்பும் வெயில் ஓயாது பொன் ஊசிகளாய் தரையை மூர்க்கமாகப் பிளந்தது. அதன் வீரியத்தை வெளியே பார்த்த போது கண் குருடாகும் பயம் உண்டாகியது. திருநா கறுத்தக் கண்ணாடி ஒன்று வாங்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணினான். கண்ணைக் கூசினாலும் வெயில் எறிக்கும் போது வெளியே சுற்றித் திரிவது அலாதியானது. அதுவும் பார்ப்பதற்கு, தெரிந்து கொள்வதற்கு நிறைய இடங்கள்

இருந்தன. வந்ததிற்கு வேறு ஒரு இடமும் போகவில்லை. கடதாசி விளையாடுவதிலும், தொலைக்காட்சி பார்ப்பதிலும் நேரம் போய்க்கொண்டு இருந்தது. இன்று வெளியே போவது என்று பரமேஸ், சண்முகன், சுபத்திரன், திருநா, குலம் ஆகியோர் முடிவு செய்தார்கள். முதலில் எந்தப் பக்கம் செல்வது என்று விளங்கவில்லை. பின்பு வடக்குப் பக்கமாய் போய் பார்த்து வருவோம் என்கின்ற முடிவோடு நடக்கத் தொடங்கினார்கள். அப்படி நடந்து போகும் போது,

"கவனிச்சீங்களே? கனபேர் அந்த மூண்டாவது வீட்டை, மாமா, மாமா எண்டு அலைகினம். அவவுக்கு நல்ல கிராக்கி." என்றான் திருநா.

"ஆலை இல்லாத ஊருக்கு இலுப்பம்பூச் சர்க்கரை எண்ட மாதிரி இதுவும்... இங்க..." என்றான் பரமேஸ்.

"சீ அப்பிடிச் சொல்ல ஏலாது. ஆள் வடிவாக இருக்கிறாள். ஆனா, எங்களுக்கு அவள் கொஞ்சம் வயது கூடவா இருக்கும் போல இருக்குது." என்றான் சுபத்திரன்.

"நாங்கள் நினைச்சாலும் அந்தப் பக்கம் நெருங்க ஏலாது. முதல்ல வந்தவங்கள் கனபேர் வொடிக்காட் மாதிரி அவளைச் சுத்தித் திரியுறாங்கள். சாப்பிட வரேக்க நான் அவளைப் பாக்கிறன். அவள் எங்க என்னைப் பார்க்கிறாள்? பத்துப் பதினைஞ்சு பெட்டையள் இருந்திருந்தால் ஏதாவது ஒண்டு ஆப்பிட்டு இருக்கும். இது ஒண்டு மட்டும். எல்லாரும் அதுக்கு அடிபடுகிறாங்கள்." என்று அலுத்துக் கொண்டான் சண்முகன்.

உள் பாதையால் நடந்து வந்தவர்கள் பிரதான வீதியில் ஏறினார்கள். பிரதான வீதியில் கார்கள் மின்னல் வேகத்தில் சென்றன.

"இங்க காருக்குப் பஞ்சமே இருக்காது போல இருக்குது. எங்க பார்த்தாலும் கார் காரா ஓடுது..." என்றான் குலம்.

"சில வீட்டில இரண்டு மூன்று கார் நிக்குமாம். கார் மட்டும் இல்லை எல்லா வாகனங்களும் இங்க நிறையத் நிக்குது. இது பணக்கார நாடு. எங்கடை நாடு மாதிரியா? நாங்கள் இங்க வந்தது எங்கடை அதிர்ஷ்டம். முற்பிறப்பின் புண்ணியம்." என்றான் சண்முகன்.

"கார், வஸ்சின்ரை கதையில அவளை விட்டிட்டம்." என்று சண்முகன் அவளை மீண்டும் நினைவு கூறினான்.

"என்ன பெயராம் அவவுக்கு?" என்று கேட்டான் சுபத்திரன்.

"வினோவாம். வினோதினியாய் இருக்கும். வினோ எண்டு கூப்பிடுகினம்." என்றான் சொரூபன்.

பரமேஸ் சிறிது நேரம் பேசாது வந்தான். அவனுக்கு அனாகியின் நினைவு வந்து விட்டது. அவள் வராததால் இவள் எல்லாம் அழகியாக இவர்களுக்குத் தோன்றுகிறாள் என்று அவனுக்கு எரிச்சலாக இருந்தது. இவளோடு ஒப்பிடும் போது அனாகியிடம் எவ்வளவு இளமை, எவ்வளவ அழகு, எவ்வளவு அறிவு எல்லாம் கொட்டிக் கிடந்தது. அவள் கைக்கு எட்டி விட்டாள் என்று நினைத்த போது எல்லாம் குழம்பிப் போய் விட்டது. கொலை செய்தாலும் தகும் என்று பரமேஸ் ஒரு கணம் எண்ணினான். அவன் கோபத்தில் காலை குத்திக் குத்தி நடந்தான். அவன் அப்படி நடந்ததைத் திருநா விசித்திரமாய் பார்த்தான். பின்பு,

"உந்தக் குத்துக் குத்தினால் காலுக்கும் நோகும். பூமிக்கும் நோகும். யாருக்கு நொந்தாலும் உன்னைத் தவிர அதைப் பற்றி யாரும் கவலைப்பட மாட்டினம்." என்றான் அவனைப் பார்த்து. பரமேசிற்கு அப்போதே தன் நினைவு தன்னிடம் இல்லை என்பது விளங்கியது. அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு பூமிக்கு நோகாது நடக்கத் தொடங்கினான்.

சிறிது தூரத்தில் ஒரு எரிபொருள் நிலையம் வந்தது. அதன் முன்பு இரண்டு எரிபொருள் நிரப்பும் இயந்திரங்கள் இருந்தன. அவற்றில் ஒரு கார் நின்றது. அதற்கு ஒரு சுதேசி எரிபொருள் நிரப்பினார். ஒரு பக்கத்தில் மரத்தால் செய்யப்பட்ட மேசையும் இருக்கைகளும் இருந்தன. அதிற் பல சுதேசிகள் சுற்றி இருந்து இளைப்பாறினார்கள். அவர்கள் கையில் "Cone ice cream" இருந்தது. ஏதோ சிவப்பாக ஒரு பழம் பெட்டியில் வைத்து இருந்தனர். அதை சிலர் சாப்பிட்ட வண்ணம் அவர்களுக்குள் கதைத்தார்கள். அவர்கள் நொஸ்கில் கதைப்பதை இவர்களால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. எரிபொருள் நிலையத்தின் சுவரை ஒட்டிப் பல பொருட்கள் இருந்தன. அவற்றில் நோர்வே மொழியில் எழுதி இருந்தது. அதற்குள் என்ன இருக்கிறது என்பது விளங்கவில்லை.

கல்லா, மண்ணா, கற்கண்டா என்பதைத் திறந்து பார்த்தால் தான் விளங்கும் எனத் தோன்றியது. அப்படித் தங்களால் திறந்து பார்க்க முடியாது என்பதும் விளங்கியது. அந்த எரிபொருள் நிலையத்திற்குள் என்ன விற்கிறார்கள் என்று பார்த்து வரவேண்டும் என்கின்ற ஆசை சண்முகனுக்கு ஏற்பட்டது. அவன் உடனேயே,

"ஒருக்கா உதுக்க என்ன இருக்குது எண்டு பார்த்துக் கொண்டு வருவமே?" என்றான்.

"இப்ப ஆட்களாய் இருக்குது. வரேக்க போய் பார்ப்பம்." என்றான் சுபத்திரன். சரி என்றுவிட்டு மேற் கொண்டு நடந்தார்கள். வீதியால் கார்கள் வேகமாகச் சென்றன. அதில் ஒரு வெள்ளைப் பேருந்து வேகமாகச் சென்றது. சில பாரவூர்திகள் ஒற்றையாகவும், இரட்டையாகவும் சென்றன. அவர்கள் மேற்கொண்டு நடந்தார்கள். எங்கேயோ விளையாடுவது போலச் சத்தம் கேட்டது. எங்கே என்பது விளங்கவில்லை. இன்னும் சிறிது தூரம் நடந்தால் விளங்கிவிடும் என்கின்ற வேட்கையோடு அவர்கள் அவசரமாக நடந்தார்கள். அவர்கள் நினைத்தது சரியாய் இருந்தது. சிறிது தூரத்தில் விளையாட்டு மைதானம் ஒன்று வந்தது. அவர்கள் விளையாடுவதைப் பார்க்க இவர்கள் அருகே சென்றார்கள். அவர்கள் இரு அணிகளாக உதைபந்து விளையாடினார்கள். ஆண்கள், பெண்கள் இரு பகுதியினரும் கலந்தே விளையாடினார்கள். எல்லோரும் நீல நிறக் காற்சட்டையும் சிவப்பு நிற மேற்சட்டையும் அணிந்து இருந்தார்கள். காலில் உதைபந்தாட்டம் விளையாடுவதற்கான பாதணிகள். அந்தப் பாதணிகள் மிகவும் தரமான பாதணிகளாக இருக்க வேண்டும் என்று சுபத்திரன் நினைத்தான்.

அவர்களில் ஒருவன் வந்து இவர்களையும் விளையாட வருமாறு அழைத்தான். இவர்களுக்கு முதலில் தயக்கமாக இருந்தது. பின்பு சண்முகனும், சுபத்திரனும் சென்றார்கள். பரமேசிற்குப் புகுந்து விளையாட விருப்பம்தான். ஊரில் தாச்சி மறித்து விளையாடி இருக்கிறான். உதைபந்து, கரப்பந்து ஆகியவை அவன் விளையாடியது இல்லை.

சண்முகனுக்கும், சுபத்திரனுக்கும் ஓடிக் களைத்தது. ஊரில் ஓடும் பொழுது இப்படிக் களைப்பது இல்லை. உயரமான இடங்களில் காற்றின் அடர்த்தி குறைவாகும். அதில் இருக்கும் பிராண வாயுவின் அளவு குறைவாகும். புதிதாக ஓடும் போது அது பெரும் களைப்பாகும். சிறிது

நேரம் அவர்களோடு ஓடி விளையாடிய பின்பு முதலில் சண்முகன் வெளியே வந்து, பந்தயம் ஓடிய குதிரை போல மூச்சிழுத்தான். பின்பு சுபத்திரனும் வந்துவிட்டான்.

பின்பு விளையாடுபவர்களுக்குப் போய்வருவதாகக் கையை காட்டினர். இவர்களை விளையாட அழைத்தவன் திரும்பி வந்தான். அவன்,

"உங்களுக்கு விருப்பம் இருந்தால் மாலை நேரங்களில் வந்து எங்களுடன் விளையாடலாம்." என்று கூறினான்.

"நாங்கள் நேரம் கிடைத்தால் வருகிறோம்." என்று சுபத்திரன் கூறினான். அதை அடுத்து அவன் விடை பெற்றுச் சென்றுவிட்டான். அவன் போன பின்பு மைதானத்தை விட்டு தெருவிற்கு வந்து சாலையால் தொடர்ந்து நடந்தார்கள். மலையும், மலையை அண்டிய சாலையும் அந்தச் சாலையை அண்டிச் சில வீடுகளுமாய் தொடர்ந்து சென்றது. எல்லோருக்கும் நடந்தது காணும் என்பது ஆகிற்று. அவர்கள் பயணிக்கும் திசையை மாற்றினார்கள்.

மைதானத்தைத் தாண்டும் போது அவர்கள் தொடர்ந்தும் விளையாடும் சத்தம் கேட்டது. கடந்து போகும் வாகனங்களில் "Head light" தவறாது ஒளிர்ந்தது. அது எல்லா வாகனத்திலும் ஒளிர்வதை அவர்கள் இப்போது தான் கவனித்தார்கள். ஏன் என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. இருட்டினாலும் ஒளி இல்லாமல் உருட்டுவதை ஊரில் பார்த்து இருக்கிறார்கள். இங்கு இருட்டு இல்லாத போதே மின் ஒளியோடு போவது விசித்திரமாய் தோன்றியது. அதற்கு ஏதாவது காரணம் இருக்க வேண்டும் என்பது விளங்கியது. அது என்ன காரணம் என்று விளங்கவில்லை. யாரையாவது கேட்டுக் கொள்ள வேண்டும் என்று சுபத்திரன் எண்ணிக் கொண்டான்.

திடீர் என்று "எவ்வளவு நிம்மதியா இருக்குது?" என்றான் திருநா.

"ஏன் அப்பிடிச் சொல்லுகிறா?" என்றான் குலம்.

"பிறகு என்ன? ஆமி, நேவி எண்டு பயந்து பயந்து செத்தது காணாதே? அந்தத் தொல்லை இல்லாததே எவ்வளவு நிம்மதியா இருக்குது. இப்ப இயக்கங்களுக்குக்கூட நிறைய விஷயம் அரங்கத்தில பிடிக்காது. ஊரில அந்தக் காலத்திலேயே பார்த்த

படங்கள் எல்லாம் இப்ப அங்க பார்க்க முடியாது. பிடிபட்டா அவ்வளவுதான்." என்றான் திருநா.

"ஓ நீ எதைச் சொல்லுகிறா எண்டு எனக்கு விளங்குது. சில இடங்கள்ள ஆம்பிளையளும் பெம்பிளையளும் சேர்ந்து இருந்து பாப்பினமாம். உண்மையா?"

"எட நாசம் கெட்டவங்களே... நீங்கள் என்னத்தைப் பற்றிக் கதைக்கிறியளடா?" என்றான் குலம்.

"ம்க்கும்... இவருக்கு ஒண்டும் தெரியாது." என்றான் சண்முகன்.

"உந்த ரீவி வந்தாப் பிறகு நாடு கெட்டுப் போச்சுது. நான் ஒரு முறை பார்த்தன். என்ன கோதாரி எல்லாம் செய்கிறாங்கள்." என்றான் பரமேஸ்.

"அங்க சனம் சாகுதுகள். நாங்கள் இங்க இப்பிடி எல்லாம் கதைக்கிறம்?" என்றான் சுபத்திரன்.

"பிறகேன் இங்க வந்தனி? இங்க வந்தா இவங்கள் போல அனுபவிக்க வேணும். இல்லாட்டி அங்க நிண்டு போராடி இருக்கோணும்." என்றான் சண்முகன்.

"இப்ப என்னத்துக்கு எங்களுக்கு அரசியல்? அதைக் கதைக்காமல் இருப்பம். அது தான் எல்லாருக்கும் நல்லது." என்றான் குலம்.

"நாங்கள் அரசியல் கதைக்காமல் இருக்க முடியாது. மனிசன் ஒரு அரசியல் மிருகமாம். அதை விடுங்க... யார் அரசியல் கதைக்காட்டியும் நாங்கள் அரசியல் கதைக்க வேண்டி இருக்குது. எங்கடை ஒவ்வொருத்தற்றை வாழ்க்கையிலும் அரசியல் பிரிக்க முடியாமல் கலந்து இருக்குது. அதாலதான் எங்கடை ஒவ்வொருத்தற்றை வாழ்க்கையிலும் மாற்றம் வந்து இருக்குது. எங்கடை வாழ்க்கையில அரசியல் புகுந்து இருக்காவிட்டி இந்த மாற்றமும் வந்து இருக்காது. இந்தப் போராட்டமே வந்து இருக்காது. இந்த இடப் பெயர்வும் நடந்து இருக்காது. இத்தினை அவலங்கள், இத்தினை இழப்புகள் நடந்தும் இருக்காது. நாங்கள் அரசியல் பேசாமல் இருக்க முடியுமா? நாங்கள் அரசியல் பேசாமல் எதையும் கதைக்க முடியுமா? இல்லை. அப்ப நாங்கள் அரசியல் கதைக்கக் கூடாது எண்டுறதில எந்த அர்த்தமும் இல்லை. அதை எப்பிடிப் பிரயோசனமாய் கதைக்கிறம் எண்டதிலதான்

விஷயம் இருக்குது. ஈழத்தமிழனின் ஆயுதப் போராட்டத்தை விரிவாக உருவாக்கியதும் இன்று அதை அழிக்கிறதும் இந்திய அரசியல் இல்லையா?"

"ஐயோ சண்முகம் பேசாமல் வாரும்." என்றான் குலம்.

"நீங்கள் ஏன் இப்படிப் பயந்து சாகிறியள்?" என்றான் சண்முகன்.

"பிறகு என்ன? எங்கடை அரசியல் எதாவது ஒரு இயக்கத்தைச் சார்ந்து தான் இருக்கும். அதை தாக்கிப் பேசினா மற்றவைக்கு நெஞ்சில மிதிக்கிற மாதிரி இருக்கும். கோபம் கொழுந்து விட்டு எரியும். தேவையில்லாத மனஸ்தாபம் உண்டாகும். அதைப் பற்றிப் பேசாட்டி எங்களுக்கு உள்ள மனஸ்தாபம் வாரத்துக்குச் சந்தர்ப்பம் குறைவு."

"அப்ப அரசியல் பேசினா மனஸ்தாபம் எண்டுறீர்?" என்றான் சண்முகம்.

"எங்கடை அரசியல் பேசினா அப்படித்தான்." என்றான் குலம்.

"சரி நாங்கள் அப்ப நடப்பம்." என்றான் சண்முகம்.

"கடைக்குள்ள என்ன இருக்குது எண்டு பாப்பம்." என்றான் சுபத்திரன்.

அப்போது தான் தாங்கள் எரிபொருள் நிலையத்தை அண்டி விட்டது எல்லோருக்கும் விளங்கியது. அவர்கள் அதை நோக்கிச் சென்றார்கள். எரிபொருள் நிரப்பும் நிலையம் ஆதலால் வாகனங்களுக்குத் தேவையான பொருட்கள் நிறைய இருந்தன. அதைவிடச் சிறு சாப்பாடுகள் இருந்தன. ‘பொல்சர்’ என்று நோர்வே மொழியில் சொல்லப்படும் அரைத்த இறைச்சியில் செய்யப்பட்ட சாப்பாடு ஆவி குடித்த வண்ணம் இருந்தது. அந்தச் சாப்பாடு இவர்களுக்கு மிகவும் பிடிக்கும். அத்தோடு இனிப்பு வகைகள் ஒரு பகுதியிலும், மறு பகுதியில் சஞ்சிகைகளும், இன்னொரு பகுதியில் காணொளிகளும் இருந்தன. ஒரு ஆணும், ஒரு பெண்ணும் சீருடையுடன் நின்றார்கள். அவர்கள் பொருட்களுக்கு விலை அடித்துப் பணத்தை வாங்கினார்கள். இவர்கள் வந்ததையும் பொருட்கள் பார்ப்பதையும் அவர்கள் பார்த்து விட்டுப் பின்பு தங்களின் கடமையில் மூழ்கி விட்டார்கள். சஞ்சிகைகள் பார்த்துக் கொண்டு நின்ற மூதாட்டி நீங்கள்

என்ன இங்கு வாங்கப் போகிறீர்கள் என்பது போலப் பார்த்தாள். பின்பு இரு சஞ்சிகைகளை எடுத்துக் கொண்டு பணம் செலுத்துவதற்காக அவள் சென்றுவிட்டாள்.

சஞ்சிகைகள் நோர்வேஜி மொழியில் இருந்தன. சில சஞ்சிகையில் அம்மணமான பெண்களின் படங்கள் இருந்தன. இங்கே தணிக்கை கிடையாது என்று பரமேஸ் எண்ணினான். அதை எல்லோருக்கும் எடுத்துப் பார்ப்பதற்கு ஆசையாக இருந்தது. ஆனால் யாரும் அதை எடுத்துப் பார்க்கவில்லை. அதற்கு அவர்கள் தன்மானம் முதலில் இடம் கொடுக்கவில்லை. ஆளையாள் பார்த்துச் சிரித்தார்கள். அதைப் பார்த்து முடியக் காணொளிப் பிரதிகளைப் பார்த்தனர். அதிலும் நீலப்படங்கள் என்று கூறப்படும் புனித தாம்பத்தியத்தைத் தொழிலாக்கி படமாக்கியது இருந்தது. தாம்பத்தியமும் பேசப்படும், பார்க்கப்படும் விடயம் என்பது ஐரோப்பியரின் கலாச்சாரம். தாம்பத்தியம் என்பது பேசப்படாது, புதைக்கப்படுவது தான் புனிதம் என்பது எங்கள் கலாச்சாரம். தணிக்கை இல்லா தாம்பத்தியக் காணொளிகளை கண்டதும் எல்லோரும் அதில் நின்று விட்டார்கள். அவர்களுக்கு அதைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. அதே நேரம் ஊரிலிருந்து கட்டிவந்த வெட்கத்தால் உடல் கோணி நெளிந்தது. சிறிது நேரம் நின்று பல காணொளிப் பிரதிகளின் அட்டைப் படத்தைப் பார்த்த பின்பு,

"ஏதாவது ஒண்டு எடுத்துக் கொண்டு போவமா?" என்றான் குலம்.

"ஆரும் கண்டா ஒரு மாதிரி நினைப்பினம்." என்றான் திருநா.

"ஏன் ஆருக்கும் காட்டுவான்? ஜக்கெற்றுக்க வைச்சுக் கொண்டு போனாப் போச்சுது. உதைப் பார்க்கோணும் எண்டு எனக்கும் நிறைய நாள் ஆசைதான்." என்றான் பரமேஸ்.

"அப்ப ஏதாவது நல்லதா இரண்டு எடுத்துக் கொண்டு போவம்." என்றான் சுபத்திரன்.

"இதில எப்பிடி நல்லது கெட்டது தெரியும். ஏதோ ரெண்டை எடுத்துக் கொண்டு போவம்." என்றான் குலம்.

இரண்டு காணொளியை எடுத்த திருநாவுக்கு அதற்குப் பணம் செலுத்தப் போவதற்கு வெட்கமாகவும்,

தயக்கமாகவும் இருந்தது. அவன் சுணங்குவதைப் பார்த்த பரமேஸ்,

"இஞ்ச தா." என்று அதைப் பிடுங்கிக் கொண்டு அந்தச் சிற்பந்திகளிடம் சென்றான். அவனைப் பெண் சிற்பந்தி தான் வரவேற்றாள். அதைப் பரமேஸ் எதிர்பார்க்க இல்லை. அவளிடம் அதைக் கொடுப்பதற்கு அவன் தயங்கினான். அவள் நோர்வே மொழியில் ஏதோ கேட்டாள். அது அவனுக்கு விளங்கவில்லை. தனது அரைகுறை ஆங்கிலத்தில் அவன் தனக்கு இது வேண்டும் என்று கூறினான். அதன் பின்பு அவள் ஆங்கிலத்தில் கதைக்கத் தொடங்கினாள். அவனது கையில் இருந்த காணொளியை வாங்கித் திருப்பிப் பார்த்துவிட்டு எந்தச் சலனமும் இல்லாது மேசையில் வைத்தாள்.

"அடையாள அட்டை இருக்கிறதா?" என்று அவனைப் பார்த்து மீண்டும் கேட்டாள். பரமேஸ் தனது பச்சை அடையாள அட்டையைத் தூக்கிக் கொடுத்தான். அவள் அதைப் பார்த்துக் கணினியில் ஏதோ பதிந்தாள். என்ன பதிகிறாள் என்பது பரமேசிற்குத் தெரியவில்லை. பதிந்து முடிந்த பின்பு பணத்தை வாங்கிக் கொண்டு காணொளியைக் கொடுத்தாள். பரமேஸ் காணொளியை வாங்கிக் கொண்டான். அதன் பின்பு அங்கு நிற்பதற்கு எல்லோருக்கும் கூச்சமாக இருந்தது. எல்லோரும் உடனடியாக கடையை விட்டு வெளியேறினர்.

பரமேஸ் ஒன்றைத் தனது ஜக்கெற்றுக்குள் வைத்துக் கொண்டான். மற்றையதைக் குலத்திடம் கொடுக்க அவன் அதைத் தனது ஜக்கெற்றுக்குள் வைத்துக் கொண்டான். மனதில் ஆவல் பிறந்ததில் கால்களில் கதி போதையாக ஏறியது. விட்டதைப் பிடிக்கும் அவசரத்தில் அவர்கள் விரைந்தார்கள்.

போன உடனேயே பார்க்க வேண்டும் என்று தான் திருநாவும், குலமும் கேட்டார்கள். சண்முகன் யாராவது திடீரென வருவதற்கு இப்போது சந்தர்ப்பம் அதிகம் எனவும், மாலைச் சாப்பாடு முடிந்த பின்பு யாரும் வரமாட்டார்கள் என்றும் அபிப்பிராயப்பட்டான். அதைச் சுபத்திரனும், பரமேசும் ஆமோதிக்க மாலைச் சாப்பாட்டிற்குப் பின்புதான் பார்ப்பது என்று முடிவு செய்தார்கள்.

*

மாலைச் சாப்பாடு அன்றும் வழமை போல இருந்தாலும் வழமைக்கு மாறாக அன்று சொக்ளேற் சுடுபானம் வைத்து இருந்தார்கள். அது பலருக்கு அன்று தான் அறிமுகமான பானம். கோக்கோத் துளைப் பாலில் கரைத்து அதற்குச் சீனியும் இட்டுக் கொதிக்க வைப்பதே அந்தப் பானம். அது சுவையாக இருந்தது. அதற்குச் சிறிது உப்புச் சேர்த்தால் இன்னும் சுவையாக இருக்கும் என்பது தமிழர்களின் கண்டு பிடிப்பு. சுவையாக இருந்தால் சில தமிழர்கள் கட்டுப்பாடாய் இருப்பது இல்லை என்பதால் அன்று பெண் சமையல்காரி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குவளை பகிர்ந்து கொடுத்தாள். அவளின் அந்தக் கரிசனையால் அந்தப் பானம் எல்லோருக்கும் கிடைத்தது. அது நல்ல பானமாக இருந்தாலும் சிலருக்கு நினைவு எங்கோ இருந்தது. அவர்கள் மிக விரைவாகச் சாப்பிட்டு விட்டுத் தங்களது குடிலுக்குத் திரும்பினார்கள்.

எல்லோரும் வந்ததும் அவசரமாகக் கதவைப் பூட்டி விட்டுக் காணொளியைப் போட்டுப் பார்த்தார்கள். அது நாகரிகமா? அநாகரிகமா? அதீத காம உணர்வா? வக்கிரமா? என்கின்ற அலசல் யாரிடமும் அப்போது இருக்கவில்லை. காமம் ஒரு வகை போதை. வக்கிரம். அந்தப் படம் அதை மேலும் தூண்டியது. போதையில் அவர்கள் தங்களை மறந்த ஒரு நிலையில் சஞ்சரித்தனர். அவர்களின் உணர்வுகளுக்கு ஏற்ற வாயும் முகமும் பல சுளிவுகளை, நெளிவுகளைக் காட்டின. இப்படியாக ஒரு அந்தரமான சஞ்சரிப்பில் அவர்கள் இருக்கும் போதுதான் யாரோ கதவைத் தட்டினார்கள். ஒரு கணம் எல்லோரும் திகைத்துப் போய் விட்டார்கள். பரமேஸ் உடனேயே பாய்ந்து டெக்கிற்குள் இருந்த காணொளிப் பேழையையும் மற்றைய காணொளிப் பேழையையும் எடுத்து மெத்தைக்குக் கீழே ஒளித்து வைத்தான். தொலைக்காட்சியை நோர்வே அலைவரிசை ஒன்றில் ஓட விட்டான். பின்பு எல்லோரும் படுக்கையில் படுத்துக் கொள்ளக் குலம் எழுந்து சென்று கதவைத் திறந்தான்.

"வீட்டுக்க என்ன வித்தியாசமான சத்தம்?" என்ற வண்ணம் சிவா வந்தான். அவன் மூக்கு வியர்த்து விட்டதோ என்கின்ற சந்தேகம் பலருக்கும். சிவா பார்த்தால் பருவாய் இல்லை என்பது பலருக்கும் தெரியும். அவன் விசரன் போலச் சொல்லித் திரிந்தான் என்றால் தேவை இல்லாத சங்கடம். அதைத் தவிர்க்க அவனுக்குத் தெரியாது இருப்பதே உத்தமம் என்பது பலரது எண்ணம்.

"கொஞ்ச நேரம் காட்ஸ் விளையாடுவமே. அங்க மற்றவை எல்லாம் படுக்க ஆயுத்தம் செய்கினம். அதுதான் அலுப்பா இருந்திச்சுது எழும்பி வந்திட்டன்."

பரமேஸ் சிவாவைக் கண்ட உடன் எதுவும் பேசாது போய் படுத்துக் கொண்டான். பரமேசை விளையாட்டிற்கு அழைக்க முடியாது என்பது சிவாவுக்கு விளங்கியது.

"ஆராவது மூண்டுபேர் வந்தால் காட்ஸ் விளையாடலாம்." என்றான் சிவா.

"இங்கையும் நாங்கள் படுத்துத்தான் இருக்கிறம். எங்களுக்கும் வெளியால போய் வந்த அலுப்பு." என்றான் சண்முகன்.

"அப்ப என்ன எழும்பிப் போகச் சொல்லுறியோ?" என்றான் சிவா.

"அப்பிடி எண்டு இல்லை சிவா. உன்னான அலுப்பா இருக்குது. இந்த அலுப்புக்கு ஒரு வியர் அடிச்சிட்டுப் படுக்கோணும். அதுக்கு இப்ப எங்க எங்களிட்டைக் காசு இருக்குது?" என்றான் சண்முகன்.

"இல்லை இப்ப படுத்தாலும் காலமை எழும்பிக் குந்திக் கொண்டு இருக்கோணும்? காலமை எங்களுக்கு என்ன வேலையா? வெட்டியா? உங்க ஊருக்க போனா வேலை கேட்கலாம் எண்டு சொல்லுகினம். அதுக்கு மத்தியான நேரத்தில போனா வசதியா இருக்கும். வேலை செய்து கொண்டு நிக்கேக்க அவைய மடக்கிக் கேட்கலாம்." என்றான் சிவா.

சண்முகன் அதைக் கேட்டு எழுந்து இருந்தான். வேலை கிடைக்குமா? பணம் சம்பாதிக்க முடியுமா? வந்த காசை ஆவது முதலில் மீட்போமா? என்பதாக அவன் மனதில் ஆயிரம் கேள்விகள் இருந்தன.

"உன்னானச் சொல்லுறியளே? நாளைக்கு வேலை கேட்டுப் போகப் போறியளே?" என்றான் சண்முகன் ஆவலாக.

"ஓ அப்படித் தான் "TS" கதைச்சவர். ஆனா எல்லாரும் ஒண்டடியாப் போகாமல் பிரிஞ்சு, பிரிஞ்சு வேற, வேற இடங்கள்ள போய் கேட்டாத்தான் வேலை கிடைக்க வாய்ப்பு இருக்கு எண்டு கதைச்சவர். அவர் சொல்லுகிறது சரியாகத்தான் இருக்கும்." என்றான் சிவா.

"அப்ப எங்களையும் நாளைக்குக் கூட்டிக் கொண்டு போ சிவா." என்றான் சண்முகன்.

"ஓ பால் குடிக்கிற கைக் குழந்தையள். கையைப் பிடிச்சுக் கூட்டிக் கொண்டு போக வேணும். அதுதான் தனித்தனியப் போக வேணும் எண்டு "TS" சொன்னார்." எண்டு சொன்னான். என்னையே காய் வெட்டி விட்டாச்சுது. அவரும் வளர்ப்புப் பிள்ளையும் (நிமலன்) தான் போகிறதா ஐடியா போட்டு இருக்கினம். சரி நீங்கள் காட்சும் விளையாட வராமல் படுத்து இருக்கிறியள். நாளைக்குக் காலமை எழும்பி வேலை தேடப் போங்க. நான் போய் கொஞ்ச நேரம் ரீவி பாத்துட்டுப் படுக்கிறன்."

சிவா வேறு வழி இல்லாமல் எழுந்து சென்று விட்டான். அதன் பின்பு கதவைப் பூட்டிவிட்டு மீண்டும் தொடர்ந்தார்கள். சில கட்டங்கள் மெது ஓட்டத்தில் விட்டுப் பார்க்கப்பட்டது. பார்த்து முடிந்து படுக்கும் போது நான்கு மணி ஆகிவிட்டது.

*

அடுத்த நாள் காலைச் சாப்பாடு சாப்பிட்டு முடியவும் "TS" வந்து பரமேசின் குடிலைப் பார்த்தார். கதவு பூட்டிய வண்ணம் இருந்தது. அவர் இரு முறை கதவில் தட்டிப் பார்த்தார். உள்ளே எந்த அரவமும் இல்லை. திரும்பி "TS" தங்களது குடிலுக்கு வர எண்ணிய போது நான்கு புதிய தமிழர்கள் சைக்கிளில் எங்கிருந்தோ வந்தார்கள். இவர்கள் இந்த முகாமில் வாழவில்லை என்பது "TS"சிற்கு நிச்சயமாகத் தெரியும். அப்படி என்றால் திடீரென இந்தத் தமிழர்கள் எங்கு இருந்து வருகிறார்கள்? பக்கத்தில் வேறு எங்கோ முகாம் இருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. "TS" உடன் ஒப்பிடும் போது அவர்களுக்கு வயது குறைவாகவே இருப்பது அவருக்குத் தெரியும். பதினேழுக்கும் இருபதுக்கும் இடைப்பட்ட வயதுடைய இளைஞர்கள். அவர்களின் துடிப்பிற்கு முகாம்களில் அடங்கிக் கிடப்பது அவஸ்தையாக இருந்து இருக்கும். யாரிடமோ சைக்கிள் கடன் வாங்கிக் கொண்டு வந்து இருக்கிறார்கள்.

அதிற் கறுப்பாகச் சற்றுப் பெரிய பற்களை உடைய இளைஞன் "TS"சிற்கு அருகாக வந்தான்.

"அண்ணை என்ரை பெயர் பாலன். நாங்கள் 'ஒல்கன்' முகாமில இருக்கிறம். ஊரில நாங்கள் மாரீசன்கூடல். உங்க யாரும் எங்கடை ஊர்க்காரர் இருக்கினமே அண்ணை?" என்றான். அவனோடு வந்த மற்றைய இளைஞன் கறுப்பாகக் குள்ளமாகத் தோன்றினான். மற்றைய இருவரும் பொது நிறமாக இருந்தார்கள். நான்கு நபரும் ஊரில் இருந்து புறப்பட்டதில் கிடைத்த சுதந்திரத்தில் தலை முடியைக் கத்தரிக்காத கோலம். ஆண்கள் தலை முடியைப் பெண்கள் போலக் கழுத்திற்கு கீழும் வளர்த்துக் கொள்ளும் புராண காலத்துப் பழக்கம் இங்கு இப்போது ஒரு நவீனமாக இருக்கிறது. நவீனம் என்பதும் பட்டிக்காட்டுத் தனம் என்பதும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல. அவை மாறி மாறி வரும். பாடசாலை, கல்லூரி மாணவர்களில் பலர் அப்படித்தான் நவீனத்தைத் தலைகீழ் நவீனமாக்கிக் கொண்டு திரிகிறார்கள். இவர்களும் அதற்கு அஸ்திவாரம் போடுவதாய் "TS"சிற்குத் தோன்றியது. சைக்கிள்கள் நல்ல பெறுமதியான புதுச் சைக்கிளாய் அவருக்குத் தோன்றின.

"என்னண்ணை யோசிக்கிறியள்? யாரும் இருக்கினமே?"

"இல்லைத் தம்பிமாரே. மாரீசன்கூடல் ஆட்கள் இங்க யாரும் இல்லை. உங்கடை முகாம் கன துாரத்திலேயே இருக்குது?"

"இல்லை அண்ணை... உந்த மலையில இருக்குது." என்று அவன் ஆற்றுக்கு மறு கரையில் இருந்த மலையை "TS"சிற்கு சுட்டிக் காட்டினான். பின்பு,

"நீங்கள் எந்த இடம் அண்ணா?" என்றான் அவன்.

"நான் அளவெட்டி தம்பி. இங்க மாரீசன்கூடல் ஆட்கள் யாரும் இல்லை." என்றார் மீண்டும்.

"ஓ நீங்கள் அளவெட்டி எண்டா உங்களுக்குத் தெரிஞ்சு இருக்கும்."

"அப்பிடி எண்டு இல்லை. நான் இங்க கதைச்ச மட்டில இங்க யாரும் மாரீசன்கூடல் ஆட்கள் இல்லை."

"சரி அண்ணை... நாங்கள் அப்ப வாறம். ஏலும் எண்டா நீங்கள் அந்தப் பக்கம் வாருங்கோ அண்ணை."

"ஓ.. ஓ.. வசதி கிடைச்சா வாறம்."

"வேற ஆட்கள் தங்களுக்குத் தெரிஞ்சவை இங்க இருக்கினம் எண்டு சொன்னவை. அவை சில வேளை வருவினம்."

"வரச்சொல்லுங்கோ. வந்து பார்த்துக் கொண்டு போகட்டும்."

"அப்ப நாங்கள் வாறம் அண்ணை."

"சரி வாங்கோ."

அவர்கள் போன பின்புதான் அவர்களைக் கூட்டி வந்து அவர்களுக்கு ஏதாவது குடிக்கக் கொடுக்காமல் திருப்பி அனுப்பியது உறைத்தது. ஏன் அந்த எண்ணம் வராமல் போனது என்பது அவருக்கு விளங்கவில்லை. யோசனை மூளையைத் தின்பதில் சில வேளை என்ன செய்வது ஏது செய்வது என்பதுகூட "TS"சிற்குத் தெரியாமல் போய்விடுவது போலத் தோன்றியது. எல்லோரும் ஒரு கரைக்கு வந்தால் இந்த யோசனைகள் குறைந்துவிடும் என்று அவர் சமாதானம் சொல்லிக் கொண்டார்.

*

"TS" திரும்பிச் சென்று நிமலனை அழைத்துக் கொண்டு 'பாக்கர்னஸ்' பக்கமாகச் சென்றார். சிவாவும் சொரூபனும் அதற்கு எதிர்த் திசையில் சென்றனர். அருளும், ரூபனும் மரக்காலையைத் தாண்டி வயல் பக்கமாகச் சென்றார்கள். அந்த மரக்காலை விடுதிக்குப் பின்புறமாக மலைப் பக்கமாக இருந்தது.

"TS"சும் நிமலனும் நடந்து செல்லும் போது பல வாகனங்கள் அவர்களை விலத்திக் கொண்டு சென்றன. மலை அடிவாரத்தைத் தேடிப் பிடித்து பாதை தொடர்ந்தது. சில இடங்களில் சிறு சமதரைகளும் விடுதிகளும் இருந்தன. மறுபக்கம் ஒரு வயல் வந்தது. நீண்ட பிரதேசத்திற்கு அந்த வயல் தொடர்ந்து சென்றது. எத்தினை ஏக்கர் வரும் என்பது நிமலனுக்கு விளங்கவில்லை. மேடும் பள்ளமுமான வயல். அந்த வயலில் ஒரு சுதேசி உழவு இயந்திரத்தால் உழுதார். அந்தத் தேசம் உழுது புரட்டியதில் கறுப்பாக இருந்தது.

"மண்ணைப் பாருங்க... கறுப்பா இருக்குது." என்றான் நிமலன்.

"கறுத்த மண்தான் வீரியமான மண்ணாம்."

"அவரிட்டப் போய் வேலை கேட்பமா அண்ணை?" என்றான் நிமலன்.

"இறங்கீட்டம். இனி விடக் கூடாது. பத்துப் பேரிட்ட கேட்டாத்தான் ஒரு ஆளிட்ட வேலை கிடைக்கும்." என்றார் "TS".

இருவருமாகப் பாதையை விட்டு இறங்கி வயலுக்குள் நடக்கத் தொடங்கினார்கள். மண்ணை உழவு இயந்திரம் பிரட்டிப் போட்டிருந்ததில் மண் பொசு பொசு வென்று கால்படும் இடங்களில் பதிந்தது. இவர்கள் இருவரும் வருவதை அந்தச் சுதேசி கவனித்து விட்டார். அவர் இவர்களை நோக்கி உழவு இயந்திரத்தைச் செலுத்திக் கொண்டு வந்தார். இவர்களுக்குச் சிறிது தூரம் இருக்கும் போது உழவு இயந்திரத்தை நிறுத்திவிட்டு அதன் கண்ணாடிக் கதவைத் திறந்தார். பின்பு இவர்களைப் பார்த்து,

"உங்களுக்கு எதாவது உதவி வேண்டுமா?" என்று கேட்டார்.

"வேலை ஏதும் கிடைக்குமா?" என்று "TS" அவரைப் பார்த்துக் கேட்டார். அவர் உழவு இயந்திரத்தில் இருந்து இறங்கி இவர்களுக்கு அருகே வந்தார்.

"இங்க வேலை இல்லை. நானே இந்த உழவு இயந்திரத்தால் எனது வயலை உழுவேன். அருவி வெட்டுவதற்கும் இயந்திரம் வரும். இங்கே நீங்கள் செய்வதற்கு வேலை எதுவும் இல்லை. ஏதாவது வேலை இருந்தால் நீங்கள் வசிக்கின்ற விடுதி எனக்குத் தெரியும். அங்கு வந்து உங்களைக் கூப்பிடுகிறேன்." என்று கூறினார்.

"நன்றி. நாங்கள் வருகிறோம்." என்று கூறிவிட்டு "TS" நடக்க நிமலனும் அவரோடு நடந்தான். சிறிது நேரமாக ஒஸ்லோ போகும் பக்கமாக இருவரும் நடந்து வந்தார்கள். வாகனங்கள் இறுமிக் கொண்டு சென்றன. அந்த வாகனங்களுக்கு கையைக் காட்டி நிறுத்தி எங்காவது செல்ல வேண்டும் போல் நிமலனுக்கு இருந்தது. வாகனத்திற்குக் கையை காட்டினால் நிறுத்தி ஏற்றிச் செல்வார்கள் என்று முகாமில் பலர் கதைத்ததை நிமலன் கேட்டிருக்கிறான். "TS" என்ன சொல்லுவாரோ என்கின்ற எண்ணத்தில் பேசாது வந்தான். தொடர்ந்தும் சிறிது தூரம்

நடந்து செல்லும் போது இரு நபர்கள் ஒரு புதிய வீடு கட்டுவதில் மும்மரமாக ஈடுபட்டனர். பஞ்சு மெத்தை போன்ற பொருள் அடுக்கி வைக்கப்பட்டு இருந்தது. அதை ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டு அந்த வீட்டிற்குள் செல்வதும் திரும்பி வந்து அதை எடுப்பதுமாக வேலையில் அக்கறை காட்டினர். "TS" அவர்களைப் பார்த்துவிட்டு,

"வா... போய் வேலை கேட்ப்பம்." என்றார்.

"வீடு கட்டுகிற வேலை எனக்குத் தெரியாது அண்ணை. நான் என்ன வேலை செய்கிறது?" என்றான் நிமலன்.

"நான் என்ன ஊரில மேசன் வேலையே செய்தனான்? எனக்கு மாத்திரம் வீடு கட்டத் தெரியுமே? பேசாமல் வா. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். ஏதாவது இயலக்கூடிய உதவி செய்து கொடுப்பம்." என்றார்.

இருவருமாக அந்தப் புதிய வீட்டை நெருங்கினார்கள். அந்த வீடு முழுமை பெறவில்லை. அஸ்திவாரம் போட்டுக் கூரையும் போட்டு ஆகிற்று. மிகுதி தசையில்லாத மனித எலும்புக் கூடு போல இருந்தது. அதற்கு ஒத்தாசை கொடுக்கும் வேலையில் புறப் பக்கம் பலகை அடித்துக் கொண்டு வருகிறார்கள். அப்படிப் பலகை அடித்த பகுதிக்கு உள் பக்கமாக அந்த மெத்தை போன்ற பஞ்சை அடைய வேண்டும். பின்பு அதற்கு மேல் பலகை அடித்தார்கள். அப்படிப் பஞ்சு அடைவதால் குளிர்காலத்தில் குளிரைத் தாக்குப் பிடிக்கக் கூடியதாக இருக்கும். இவர்கள் இருவரும் வருவதை அவதானித்த அவர்கள் இவர்களை நோக்கி வந்து,

"வேலை வேண்டுமா?" என்று கேட்டார்கள்.

"அதையே தேடி வந்தோம்." என்றார் "TS".

இருவரையும் கூட்டிச் சென்று எப்படி அந்தப் பஞ்சை அடைவது என்று காட்டிக் கொடுத்தார்கள். அதை வெட்டித் துண்டுகளாய் அடைவதற்கு ஒரு கூரிய கத்தியும் கொடுத்தார்கள். இவர்கள் அடையத் தொடங்கியதும் அவர்கள் பலகை அடிப்பதில் மும்மரம் காட்டினர்.

"TS"சிற்கும், நிமலனுக்கும் வேலை பிடித்துக் கொண்டது. பஞ்சு மேலில் படும் போது சாதுவாகச் சுணைப்பது போல இருந்தது. அது சிறிது அசௌகரியம் என்றாலும் பெரும் பிரச்சனையாக இருக்கவில்லை. இளைப்பாறும் போது

வணிசும் கோப்பியும் கொடுத்தார்கள். வணிசைச் சாப்பிட்டாலும் கோப்பியை நிமலனால் முழுமையாகக் குடிக்க முடியவில்லை. அது கசந்தது. ஐந்து மணித்தியால வேலை முடிந்ததும் ஆளுக்கு இருநூறு குரோணர்கள் கொடுத்தார்கள். நாளையும் இருவரையும் வேலைக்கு வருமாறு அவர்கள் கூறினார்கள். நிமலனுக்கும் "TS"சிற்கும் சந்தோசமாய் இருந்தது. நிமலன் தனக்குக் கிடைத்த பணத்தை இலங்கை பணத்திற்குப் பெருக்கிப் பார்த்தான். ஒரு மாதம் வேலை செய்தால் வந்த கடனை அடைத்து விடலாம் என்கின்ற கற்பனையில் அவன் மிதந்தான். அடுத்த நாள் வேலையோடு அவர்களுக்கு அங்கு வேலை இருக்கவில்லை.

*

வேலை தேவை என்பது எல்லோருக்கும் விளங்கியது. அதை எப்படிப் பெற்றுக் கொள்வது என்பதில் ஏகப்பட்ட குழப்பம் இருந்தது. அன்று காலை சாப்பிடும் போது வேலை தேவை ஆனவர்களைப் பாக்கர்னசில் இருக்கும் வேலை வாய்ப்பு அலுவலகத்திற்குச் சென்று பதியுமாறு விடுதிப் பொறுப்பாளர் புத்திமதி கூறினார். அவருக்கு விடுதிக்குப் புது ஆட்கள் வரத் தயாராக இருக்கிறார்கள் என்கின்ற தகவலில் பிறந்த தாராளம். அது இவர்களுக்குத் தெரியாது. அத்தால் மனிதன் உதவி செய்கிறார் என்கின்ற மகிழ்ச்சி. எப்படிப் பாக்கர்னஸ் போவது என்பது பெரும் பிரச்சனை ஆனது. சிலர் புறப்பட்டுப் போய் தெருவில் நின்று கையைக் காட்டி வந்த கார்களில் ஏறிச் சென்றார்கள். "TS" அதற்குப் புறப்படவில்லை.

"நாங்களும் போவமே?" என்று நிமலன் அவரைக் கேட்டான்.

"நீ வேணும் எண்டால் போ. நான் வரேல்லை. எனக்கு ஒரு பிறண்ஸ் ஒஸ்லோவில இருக்கிறான். அவன் உல்லவோல் கொஸ்பிற்றல்ல வேலை செய்கிறான். அங்க வந்தா உதவி செய்கிறன் எண்டு சொன்னான். உம்மையும் கூட்டிக் கொண்டு போகத்தான் விருப்பம். ஒரேதா இரண்டு பெரும் போய் நிக்கேலாது. அது அவனுக்குப் பெரிய சங்கடமாய் இருக்கும். நீ இங்க முயற்சி செய்து பார். அப்படி ஏதும் அகப்படாட்டி நான் எனக்கு வேலை கிடைச்ச உடன போன் பண்ணுகிறன்." என்றார்.

நிமலன் எதுவும் பேசவில்லை. அவன் திகைப்போடு சோகத்தில் வாடுவதை அவன் முகம் கண்ணாடி போல் காட்டிக் கொடுத்தது. "TS"சிற்கு அவனைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. அவனை அவர் தொடர்ந்தும் சமாதானப் படுத்தினார்.

"பயப்பிடாதை... எனக்கு வேலை கிடைச்ச உடன நிச்சயமா நான் உதவி செய்வன்."

"நான் தனிய… எனக்கு இங்கிலீசும் சரியாகத் தெரியாது." என்று கலங்கினான் நிமலன். "TS"சிற்குப் பரிதாபமாய் இருந்தது. அவனையும் கூட்டிக் கொண்டு போவோமோ என்று மனம் தளும்பியது. ஒஸ்லோவின் நிலைமை தெரியாது. கூட்டிச் சென்றுவிட்டு இவனையும் தெருவில் படுக்க விட முடியாது என்பதும் விளங்கியது. அப்படி அலைவதற்கான வயது அவனுக்கு வரவில்லை. எனக்கு ஒரு மகன் பிறந்து இருந்தால் இந்த வயதில்தான் இருந்து இருப்பான். அவனை நான் அலைய விடுவேனா என்று எண்ணிய அவர் தனது அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டார்.

"உனக்குத் தெரிகிற ஆங்கிலம் போதும். உன்னைவிட ஆங்கிலம் தெரியாத சனங்கள் நிறைய இங்க இருக்கினம். கவலைப்படாமல் துணிவா இருக்கோணும். இப்ப வேணும் எண்டா வெளிக்கிட்டுப் பாக்கர்னஸ் போயிட்டு வா."

"நீங்கள் எப்ப போவியள்?"

"நான் நாளைக்குக் காலமைச் சாப்பாடு முடிய வெளிக்கிடுவன். ஒரு அளவான விலை குறைவான வாய்க்கு ஒண்டு பாக்கர்னஸ்சில பார்த்து வாங்கிக் கொண்டு வா. இல்லாட்டிக் கறுத்த வாய்க்கைத் தான் தூக்கிக் கொண்டு போக வேணும்."

அவன் "TS" சொன்னதிற்காய் மனம் இல்லாது அவர் கொடுத்த பணத்தையும் வாங்கிக் கொண்டு புறப்பட்டுச் சென்றான். அவன் செல்வதையே பார்த்த வண்ணம் நின்றுவிட்டுத் திரும்பிய போது றூபன் அங்கே வந்தான்.

"நீ பாக்கர்னஸ் போக இல்லையா?" என்று "TS" அவனைப் பார்த்துக் கேட்டார்.

அவன் அதற்கு "மணக்குது." என்றான்.

"என்ன மணக்குது? எனக்கு ஒண்டும் மணக்க இல்லையே?" என்ற வண்ணம் அவனைக் கவனித்துப் பார்த்தார். அவன் முகம் இருண்டு போய் கிடந்தது. சாதுவான கோபத்தோடு பல்லைக் கடிப்பதும் ஆகாயத்தைப் பார்ப்பதுமாக யோசனையில் மூழ்கினான். "TS"சிற்கு அவனைப் பார்க்கக் கவலையாக இருந்தது.

முகாம் பொறுப்பாளரிடம் ஒஸ்லோ போவதற்கு முதல் இதைப் பற்றிக் கூறிவிட்டுப் போக வேண்டும் என்று எண்ணினார். இவன் வாழ்க்கை எப்படிப் போகும் என்கின்ற கவலை அவரை அரித்தது.

"இரத்த வெடுக்கா மணக்குது. அவங்கள் சுட்டுப் போட்டுப் போனாங்கள். நான் திரும்பத் தெருவுக்குப் போனாச் சுட்டுப் போடுவாங்கள்." என்றான் றூபன்.

"நாங்கள் இப்ப பாதுகாப்பான நோர்வேயில இருக்கிறம். இங்க ஒரு ஆபத்தும் வராது றூபன்."

"நீங்கள் பொய் சொல்லுகிறியள். இங்கையும் இரைஞ்சு இரைஞ்சு றோட்டால போகுது. அவங்கள் குண்டு வைச்சா என்ன நடக்குமோ? நான் உந்த ஆத்தைக் கடந்து மலைப் பக்கம் போய் ஒளிச்சிருக்கப் போகிறன்."

"அது காரும் வஸ்சும் போகிற சத்தம் றூபன். இங்க ஆமியோ அவங்கடை ஜீப், றக்கோ இல்லை." என்றார் "TS".

"உண்மையாவா. நீங்கள் சொன்னா சில வேளை உண்மையா இருக்கும்." என்று அவன் திடீரென அப்போது சமாதானம் அடைந்தான்.

"TS"சிற்கு ஐயோ என்று கத்தி அழ வேண்டும் போல் இருந்தது. எங்களுக்கு ஏன் இப்படி நடக்கிறது என்கின்ற கேள்வி அவருள் எழுந்தது. அவர் தன்னைச் சமாளித்துக் கொண்டு ஒரு கண்ணாடிக் குவளையில் குளிர் நீர் கொண்டு வந்து அவனுக்குக் குடிக்கக் கொடுத்தார். அவனும் அதை வாங்கி மடமட என்று குடித்து முடித்தான். அவனைக் கூட்டிச் சென்று படுக்க வைத்தார். அவன் படுத்தான். "TS" விடுதிப் பொறுப்பாளரைப் பார்க்கச் சென்றார்.

*

வழமையாகப் பிந்தி எழும்பும் பரமேஸ், சண்முகன், சுபத்திரன், திருநா, குலம் ஆகியோர் பாக்கர்னஸ்சிற்கு அன்று முதலிற் சென்றார்கள். அதிரடிப்படை அமைதியான கிராமத்திற்குள் தாக்குதல் செய்தது போல அவர்கள் செயற்பாடு அன்று எதிர்பாராத தாக்குதலாக இருந்தது. அதற்கு அவர்களுக்கு நல்ல பயனும் கிடைத்தது.

அன்று அவர்கள் வேலை தேடும் அலுவலகத்திற்குப் போகும் போது அங்கு அதிக ஆட்கள் இருக்கவில்லை. இரு சுதேசிகள் மட்டுமே இருந்தனர். அவர்களின் அலுவலை முடித்துக் கொண்டு அந்த அதிகாரி இவர்களை விசாரித்தார். அவருடைய பெயர் யோன். ஆறடி உயரமான மெல்லிய மனிதர். கறுப்பாகக் கட்டையான தூரி போன்ற அடர்ந்த தலை முடி. கண்களும் கிட்டத்தட்ட இலங்கையரைப் போலவே முட்டைக்குக் கறுத்தப் பொட்டு வைத்த கணக்காய் இருந்தது. நோர்வேயில் ஒவ்வொரு மனிதரும் ஒவ்வொரு விதமான நிறத்திலும், தோற்றத்திலும் இருக்கிறார்கள் என்று பரமேஸ் அவரைப் பார்த்து நினைத்தான்.

சுபத்திரன் எல்லோரையும்விட நன்கு ஆங்கிலம் கதைப்பான் என்பதால் அவனை அந்த அதிகாரியோடு கதைப்பதற்கு தங்கள் பிரதிநிதியாக நியமித்தார்கள். சுபத்திரன் காட்லிக் கல்லூரியில் படித்தவன். அந்தப் பள்ளிக்கூடத்தில் படித்தது என்பதே பலருக்கும் பெருமையான விடயம். சுபத்திரனுக்கும் அது கொம்பு முளைத்ததான பெருமை. அவன் பெருமையை மட்டும் வைத்துக் கொண்டு வண்டில் ஓட்டவில்லை. அவனிடம் ஆங்கிலமும் கொஞ்சம் வஞ்சகம் இல்லாது வாயில் புகுந்து ஸ்களோடு வெளியே வந்தது. இதை வைத்து இங்கு வண்டில் ஓட்டலாம் என்பதை அவன் கற்றுக் கொண்டான். படிக்காமல் உழைத்துப் பணக்காரன் ஆக வேண்டும் என்பது அவன் ஆசை. பணம் இருந்தால் நிறையவே சாதிக்கலாம் என்பது அவன் கொள்கை. நோர்வேயில் வேலை கிடைத்தால் அதைச் செய்வது எனவும் படிப்பதைப் பற்றி ஆறுதலாகச் சிந்திக்கலாம் எனவும் அவன் எண்ணினான்.

"உங்களுக்கு நான் எப்படி உதவி செய்யலாம்?" என்று கேட்டார் அந்த அதிகாரி.

"எங்களுக்கு வேலை வேண்டும்." என்றான் சுபத்திரன்.

"உங்கள் பெயர் விபரங்கள், நீங்கள் என்ன படித்து இருக்கிறீர்கள், என்ன வேலை தெரியும் போன்ற எல்லா விபரங்களும் கேட்கும் இந்தப் பத்திரத்தை நிரப்பித் தாருங்கள். முதலில் உங்களைப் பதிவு செய்கிறேன். பின்பு உங்களுக்கு ஏற்ற வேலை இருக்கிறதா என்று தேடிப் பார்க்கிறேன்." என்று அந்த அதிகாரி கூறிவிட்டு ஒரு படிவத்தை எடுத்து அதில் உள்ள நோஸ்க்கிற்குப் பதிலான ஆங்கிலச் சொற்களை செருகி அதைச் சுபத்திரனிடம் கொடுத்து,

"இதை வைத்துக் கொண்டு எல்லோரும் தங்கள் படிவங்களை நிரப்ப உதவி செய்யுங்கள்." என்று கூறிவிட்டு அவர் தனது கணினியில் ஏதாவது வேலை இருக்கிறதா என்று தேடிப் பார்த்தார்.

சுபத்திரனின் உதவியோடும் மற்றவர்களுக்கு இருந்த சிறிய ஆங்கில அறிவோடும் பத்திரங்கள் நிரப்பும் வேலை முடிய, அந்த அதிகாரி அதை வாங்கிப் பதிந்தார். பின்பு சுபத்திரனைப் பார்த்து,

"அனேகமான வேலைகளுக்கு நோர்வே மொழி தெரிந்து இருப்பது அவசியம். அத்தோடு உங்களுக்கு அந்த வேலை செய்து அனுபவமும் இருக்க வேண்டும். உங்கள் அனுபவத்திற்கு ஏற்ப வேலைகள் இப்போது இல்லை. அப்படி இருந்தும் ஒரு இடத்தில் வேலைக்கு ஐந்து நபர்கள் வேவைப் படுகிறார்கள். அவர்கள் மொழியைப் பற்றியோ அல்லது வேலை அனுபவம் பற்றியோ கேட்கவில்லை. அந்த நிறுவனத்தின் அதிகாரியோடு கதைக்கலாம். அப்படி அவர் சம்மதித்தால் உங்களுக்கு விமானப் பயணச்சீட்டு தந்து உங்களை நான் அங்கு அனுப்பி வைப்பேன். அந்த இடம் மிகவும் வடக்கே ரஷ்யாவுக்குப் பக்கத்தில் இருக்கும் ஒரு சிறிய தீவு. உங்களுக்கு அங்கே போக விருப்பமா?"

"ஆம். எங்களுக்கு வேலை தான் முக்கியம். இடத்தைப் பற்றி எங்களுக்குக் கவலை இல்லை." என்றான் சுபத்திரன்.

"மற்றவர்களையும் தயவு செய்து கேட்டுச் சொல்லுங்கள்." என்றார் அந்த அதிகாரி. அதை அடுத்து சுபத்திரனும் மற்றவர்களும் குசுகுசுத்து விட்டு,

"எல்லோருக்கும் சம்மதமே." என்று அவன் அறிவித்தான்.

தமிழரின் மனநிலை அந்த அதிகாரிக்கு வியப்பைத் தந்தது. தமிழர்களுக்கு வேலை கிடைத்தது பெரியதொரு அதிஸ்ரலாபச் சீட்டு விழுந்த மாதிரியாக இருந்தது. பித்துப் பிடித்த அவர்கள் தலைக்குப் பனி நீர் ஊற்றினாலும் அது தெளியுமா என்கின்ற நிலை. அந்த அதிகாரியோ இவர்கள் குளிரைப் பற்றி விளங்கிக் கொள்ளாமல் சம்மதம் தெரிவிக்கிறார்களா என்கின்ற தடுமாற்றத்தில் மனச்சாட்சி உறுத்த மீண்டும் அந்த இடத்தைப் பற்றி விவரிக்கத் தொடங்கினார்.

"எல்லோரும் நான் சொல்வதைக் கொஞ்சம் அவதானமாகக் கேளுங்கள். பின்பு இதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. அந்த இடத்தில் வேலை இருப்பது தெரிந்தும் எங்கள் இளைஞர்களே வேலை செய்ய அங்கே போவது இல்லை. அதற்குக் குளிர், பலமான காற்று, கோடைக் காலத்தில் இருபத்தி நான்கு மணித்தியாலமும் வெளிச்சம், குளிர் காலத்தில் இருபத்தி நான்கு மணி நேரமும் இருட்டாக இருப்பது, இப்படியாகப் பல அசௌவ்கரியங்கள் அங்கு உண்டு. உங்களுக்கு அவை ஒரு பொருட்டாக இல்லை என்றால் நீங்கள் அங்கே போகலாம்." என்றார் அந்த அதிகாரி. அவர் முகத்தில் பெடியளிடம் இல்லாத கவலை தடிப்பாக அப்பி இருந்தது.

"நாங்கள் அங்கே போகிறோம். எங்களுக்கு வேலைதான் மிகவும் முக்கியமானது. மற்றயவை அதன் பின்புதான்." என்றான் சுபத்திரன்.

"சரி காத்திருங்கள்... நான் அந்த நிறுவனத்தின் சொந்தக்காரருடன் கதைத்து விட்டு உங்களை அழைக்கிறேன்." என்று கூறினார் அந்த அதிகாரி.

தமிழர்கள் காத்திருந்தனர். அந்த அதிகாரி தொலைபேசியில், அதுவும் நொஸ்கில் பதினைந்து நிமிடங்கள் கதைத்தார். பின்பு எல்லோரையும் அழைத்து,

"வாழ்த்துக்கள். உங்களுக்கு வேலை கிடைத்து விட்டது. நாளைப் பத்தரை மணிக்கு பாக்கர்னஸ்சில் இருந்து விமானத்தில் நீங்கள் புறப்படுவதற்குத் தயாராக இங்கே ஒன்பதரை மணிக்கு வந்துவிட வேண்டும். விமானம் ஒஸ்லோ போய் அங்கிருந்து ‘சிர்க்னஸ்’ என்கின்ற இடத்திற்குச் சென்று, பின்பு அது ‘வார்டோ’ என்னும் நீங்கள் செல்ல வேண்டிய தீவிற்குச் செல்லும்... புரிந்ததா? நாளைக்கு ஒன்பதரைக்கு நீங்கள் இங்கே கட்டாயம்

வந்துவிட வேண்டும். நான் விமானப் பயணச்சீட்டை அப்போது தருவேன்." என்றார் அந்த அதிகாரி.

"நன்றி. நன்றி" என்ற வண்ணம் சந்தோஷ மிகுதியால் அவர் கையைப் பிடித்து சுபத்திரன் விடாது குலுக்கினான். அவரும் அந்தத் தாண்டவத்தைப் பொறுத்து தனது கையை மெதுவாக விடுவித்துக் கொண்டார். பின்பு,

"நீங்கள் இன்று போய் நாளைக் காலை வாருங்கள்." என்றார் எம் புராண இலக்கியத்தை ஞாபகப்படுத்துவது போல.

தமிழர்கள் மீண்டும் நன்றி கூறிவிட்டு புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களால் தங்களுக்கு அடித்த அதிஸ்ரத்தை அப்போதும் நம்ப முடியவில்லை. நம்பு என்பதற்கான நடைமுறை ஆதாரம் இருப்பதையும் மீற முடியவில்லை. திரும்பி விடுதிக்குப் போக முன்பு தங்களுக்குத் தேவையான "Suitcase" பெட்டிகள், வேறு தேவையான பொருட்கள் பாக்கர்னஸ்சில் வாங்க வேண்டிய யதார்த்தத்தை உணர்ந்தார்கள். அந்த அலுவல்களை முடித்துக் கொண்டு ஆனந்த வெறியில் அவர்கள் விடுதிக்குச் சென்றார்கள். அவர்கள் சென்றவுடனேயே விடயம் காட்டுத் தீயாக முகாமில் பரவியது. பலரும் வந்து விசாரித்தார்கள். பலருக்குத் தங்களுக்கு வேலை கிடைக்க இல்லையே என்கின்ற ஏக்கம். சிலருக்கு இவர்களால் எங்களுக்கும் வேலை கிடைக்கலாம் என்கின்ற நம்பிக்கை. சிவா, சோரூபன், அருள், நிமலன் ஆகியோர் தாங்களும் போய் இருக்கலாமே என்று வருத்தப்பட்டார்கள். றூபன் எதைப் பற்றியும் கவலைப் படும் நிலையில் இல்லை. அவன் நிம்மதிக்கு ஒரு வழி கண்டு விட்டதாய் தூங்கினான். அவன் அப்படி அமைதியாக உலக ஆக்கினையில் இருந்து விடுபட்டுத் தூங்குவதற்கு மருத்துவர் மாத்திரை கொடுத்து இருந்தார்.

படுக்கப் போகும் வரைக்கும் தாங்கள் வேலைக்குப் பதிவு செய்யும் அலுவலகத்திற்குச் சென்றது, கதைத்தது, வேலை கிடைத்தது பற்றி ஏவுகணை விஞ்ஞானத்தையும் மீறி இட்டுக்கட்டிப் பரமேசின் குழு அளந்து தள்ளியது. "TS"சும் புறப்படப் போவதை எண்ணி நிமலனும் சிவாவும் சோர்ந்து போனார்கள். சிவா விரைவாகவே தானும் தனிவழி தேடிக் கொள்ள வேண்டும் என்று திட்டம் தீட்டினான்.

# 16 பிரியாவிடை

அன்று பின்னேரச் சாப்பாட்டின் போதே தாங்கள் நாளை பயணிக்கப் போவதால் தங்களுக்குக் காலைச் சாப்பாட்டை நேரத்தோடு தரவேண்டும் என்று பரமேஸ், சண்முகன், சுபத்திரன், திருநா, குலம் ஆகியோர் சமையல் காரர்களிடம் கேட்டார்கள். அதற்கு அவர்கள் தாங்கள் அப்படி அதிகாலை வருவதற்கு வசதிப்படாது என்று மறுத்து விட்டார்கள். பின்பு அவர்கள் காலை சாப்பிடுவதற்குப் பாண், வெண்ணெய், ஜாம், தக்காளி இரசத்தில் ஊறிய ‘மக்கிறல்’ மீன், குடிப்பதற்குப் பால் பெட்டிகள் ஆகியவற்றைக் கொடுத்தார்கள். அது ஒரு வகையில் அவர்களுக்கு வசதியாகிற்று. காலை எழுந்து சாப்பாட்டிற்கு ஓடவேண்டிய கவலை தீர்ந்திற்று. எட்டு மணிக்கு அவர்கள் புறப்பட்டு விட்டார்கள். விடுதியில் வாழ்ந்தவர்கள் வந்து பிரியாவிடை கூறினார்கள். "TS", சிவா, சொரூபன், அருள், நிமலன் ஆகியோர் கட்டிப்பிடித்து பிரிய முடியாது பிரிந்தனர். சிவா கட்டிப்பிடிக்கப் போனபோது சிவாவைக் கட்டிப் பிடிப்பதற்கு பரமேஸ் மறுத்து விட்டான். சிவா "நான் நல்லதைத்தான் நினைச்சன், நல்லதைத்தான் செய்தன்." என்று கூறிக் கொண்டு விலகிவிட்டான். "TS"சிற்கு அவர்களைப் பிரிவது கவலை என்றாலும் அவர்களுக்கு வேலை கிடைத்தது சந்தோஷமாய் இருந்தது. வேலை என்பது பணம் சம்பாதிப்பது மட்டமல்ல என்பது அவருக்குத் தெரியும். அது பல பிரச்சனைகளுக்குக் கடவுளே மனிதனுக்குக் கொடுத்த முதல் மருந்து என்பது அவர் எண்ணம். அதை அவர் நம்பினார். இந்த இளைஞர்களின் வாழ்வில் இனிமேல் பல பிரச்சனைகள் தீரலாம் என்று நினைத்தார். காலம்தான் அதற்கான சரியான பதிலைச் சொல்லும் என்றும் அவர் எண்ணினார்.

நிமலன் கட்டிப் பிடித்துப் பிரியாவிடை கொடுத்த பின்பு துக்கம் தாங்க முடியாது அழுதான். சிவாவும் "TS"சும் அணைத்து அவனுக்கு ஆறுதல் கூறினார்கள். சிவா நேரடியாகக் கதைத்தாலும் இல்லைக் கடித்தாலும் எவ்வளவு நல்ல உள்ளம் கொண்டவன் என்பது அவனுக்கு அப்போது விளங்கியது. அதை எண்ணவும் அவனுக்குக் கவலை இன்னும் அதிகம் விக்கலாக வெளியே வந்தது.

றூபன் எழுந்து அங்கே பிரியாவிடை சொல்ல வரவில்லை. தொடர்ந்தும் உயிர் அற்றவன் போல் படுத்துக் கிடந்தான். நித்திரை முறிய முறிய மருந்தைப் போட்டுப் போட்டுத் தூங்கினான். மருத்துவரின் ஒரு நாளைக்கு ஐந்து மாத்திரைகள் என்கின்ற கட்டுப்பாட்டை எட்டிக் காலால் மிதித்தான்.

எட்டரை மணிக்கு அவர்கள் பேருந்தில் ஏறினார்கள். உடனேயே தானும் புறப்பட்டால் நிமலன் இன்னும் கலங்கிப் போவான் என்பதால் அவர் தனது பயணத்தைச் சிறிது தள்ளி வைத்துவிட்டு அவனைத் தனியே அழைத்துச் சென்று புத்திமதி கூறினார். அவன் அவரது புத்திமதியைக் கேட்டாலும் அவனாற் கவலையைத் தாங்க முடியவில்லை. "TS" தனக்கு வேலை கிடைத்ததும் மீதம் உள்ளவர்களைத் தான் ஒஸ்லோவிற்கு எடுப்பேன் என்ற வாக்கைக் கொடுத்தார். அதன் பின்பு நிமலன் சற்று அமைதி ஆனான். அவனுக்கு வேலை கிடைக்கவில்லை என்பதைவிட "TS"சைப் பிரிய வேண்டும் என்பதைத் தாங்க முடியவில்லை.

பத்துமணி போல "TS" தனது இரு பைகளோடும் காசு என்னும் கடவுளை அடையப் பொருளாதார யாத்திரை புறப்பட்டார். நிமலன் அவரது கைப் பையைப் பார்த்தான். இன்று வரை அவன் அதை அத்துமீறித் திறந்து பார்க்கவில்லை. ஆரம்பத்தில் அவனுக்கு அதற்குள் என்ன இருக்கிறது என்று பார்க்க வேண்டும் என்கின்ற அடக்க முடியாத ஆசை இருந்தது. "TS" உடன் பழகிய பின்பு எதற்காகவும் அவரது நட்பை முறித்துக் கொள்ள அவன் துணியவில்லை.

பத்து மணிக்கு அவர் புறப்படும் போது மீண்டும் அதே கூட்டம் பிரியாவிடை கொடுத்தது. சிவா, சொரூபன், அருள், நிமலன் ஆகியோர் கண் கலங்கினர். நிமலன் முகத்தைச் சிறிது நேரம் மறு கரைக்குத் திருப்பிக் கொண்டான். சிவாவும் தடுமாறினான். மற்றாஸ் விமான நிலையத்தில் தொடங்கிய நட்பு இத்தோடு முடிந்து விடுமோ என்கின்ற அந்தரம் அவனைப் பற்றிக் கொண்டது. "TS" இறுதியாகவும் அவர்கள் முதுகில் தடவிச் சமாதானம் செய்துவிட்டுப் புறப்பட்டார். அவரோடு தெருவுக்குச் சிவா, சொரூபன், அருள், நிமலன் ஆகியோர் சென்று எதிரே வரும் கார்களை மறித்தார்கள். முதலாவது கார் பாக்கர்னஸ் போகவில்லை. அதில் "TS" ஏறவில்லை. இரண்டாவது கார் பாக்கர்னஸ் போவதாய் கூறினார்கள். அதில் இடமும்

இருந்தது. அதை ஒரு பெண்ணே ஓட்டி வந்தாள். அவள் "TS"சை இன்முகத்தோடு நோக்கி ஏறி இருக்குமாறு கூறினாள். "TS" ஏறியிருக்கவும் வாகனம் புறப்பட்டது.

*

சிவா, சொரூபன், அருள், நிமலன் ஆகியோர் ஒரு வீட்டிற்கு வண்ணம் பூசச் சென்றார்கள். முகில்கள் வானத்திற்குக் கொடுத்த சுதந்திரத்தில் சூரிய பகவான் பகல் முழுவதும் வாட்ட வாட்ட வேலை செய்தார்கள். வீட்டுக்காரருக்கு அறுபத்து ஐந்து வயது இருக்கும். வெளிறிய பழுப்புக் கண்கள். மெல்லிய, சிறிய உருவம். அதில் நிறைந்து பெருகும் கனிவான பார்வை. மிகவும் இரக்கத் தோடு நடந்து கொள்ளும் இயற்கை சுபாவம். பூச்சு அடிக்கத் தொடங்கியது தொடக்கம் பல முறை பழரசம் கேட்டுக் கேட்டு வழங்கினார். பன்னிரண்டு மணி போல் பொல்சர், உருளைக்கிழங்கு ஆகியவை பொரித்துத் தக்காளி இரசம் விட்டுக் கொடுத்தார். நான்கு மணி போல் களைத்து விட்டீர்கள் போய்விட்டு நாளைக்கு வாருங்கள் என்று கூறி அனுப்பி வைத்தார். அவர் அப்படிக் கூறியது எல்லோருக்கும் சந்தோஷமாய் இருந்தது. காலும் கையும் உழைவு எடுக்கத் தொடங்கிவிட்டது. கண் மண்ணெண்ணெய் நாற்றத்தில் எரிந்தது. நிமலனுக்கு மண்ணெண்ணெய்யின் சுவை நாக்கில் நிற்பதான அருவருப்பு உண்டானது. அந்தக் கிழவர் போகச் சொல்லியது அதற்கு எல்லாம் சற்று விடுதலை தந்தது போல் அவர்களுக்கு இருந்தது.

வேலை முடித்து வரும் போது மைதானத்தில் விளையாடும் சத்தம் கேட்டது. யாருக்கும் அங்கே போகும் மனநிலை இருக்க இல்லை. இந்தக் களைப்பிற்கு சாப்பிட்ட பின்பு காலைக் கையை நீட்டிப் படுத்துக் கொள்ள வேண்டும் என்கின்ற ஆவலோடு எட்டி நடந்தார்கள். தாங்கள் பிந்தி வர நேரிடும் என்றும் தங்களுக்குச் சாப்பாடு எடுத்து வைக்குமாறும் கேட்டு இருந்தார்கள். சாப்பாடு இருந்தால் சாப்பிட்டு விட்டுப் படுக்க வேண்டும் என்பதே அவர்கள் ஒரே குறிக்கோள் ஆகியது.

விடுதிக்கு வரும் போது அங்கே அதீதமான அமைதியாக இருந்தது. அது ஏதோ இழவு விழுந்ததான பயங்கரத்தை அவர்களுக்குத் தந்தது. வீட்டிற்குள் சென்ற போது றூபனைக் காணவில்லை. கும்பகர்ண நித்திரை முடித்து

எங்கோ போய்விட்டான் என்று நிமலன் எண்ணினான். சாப்பாடு எடுப்பதற்கு அருளனும் நிமலனும் சென்றனர். நிமலன் கதவைத் தட்டினான். இராமசந்திரன் வந்து கதவைத் திறந்தான். அவனைப் பார்த்த நிமலன்,

"அண்ணை பசிக்குது." என்றான்.

"சரி உள்ள வந்து சாப்பிடுங்க. நான் சாப்பாடு எடுத்து வந்து இருக்கிறன்."

"இல்லை நாங்கள் எங்கடை றுமுக்குக் கொண்டு போகிறம்."

"இல்லை கொஞ்ச நாளைக்கு அதுக்க வைச்சு எல்லாம் சாப்பிடாதேங்கோ."

"ஏன் எங்கடை றுமுக்க வைச்சுச் சாப்பிடுகிறதுக்கு என்ன அண்ணை?"

"அட கோதாரி... உங்களுக்கு இன்னும் விஷயம் தெரியாதே?"

"என்ன அண்ணை?"

"அட றூபன் எல்லே ஆத்துக்க குதிச்சிட்டான். அதைக் கண்ட நொஸ்க் பிள்ளையள் போய் மரக்காலையில சொல்ல அவங்கள் பொலீசுக்குச் அறிவிக்க ஆட்கள் வந்து குதிச்சு தேடி இழுத்துக் கொண்டு வந்தாங்கள். பிறகு தங்களுக்குத் தெரிஞ்ச முதலுதவியும் செய்து பார்த்தாங்கள். ஆள் பிழைக்க இல்லை. அம்புலன்சில வொடிய ஏத்திக் கொண்டு போயிட்டினம். அப்ப... உங்களுக்கு ஒண்டும் தெரியாதே?"

"இல்லையே அண்ணை. நாங்கள் போகேக்க அவன் நல்ல நித்திரை அண்ணை. நான் இனி அந்த அறைக்குப் போகமாட்டன்." என்றான் நிமலன்.

"பருவாய் இல்லை. நீ இங்கயே இருக்கலாம்."

"நான் போய் சிவாவையும், சொரூபனையும் கூட்டிக் கொண்டு வாறன்." என்று கூறிவிட்டு அருளன் சென்றான்.

எல்லோரும் இராமசந்திரனின் அறைக்கு வந்தார்கள்.

"எனக்குப் பசிக்க இல்லை அண்ணை. ரீ ஒண்டு தந்தீங்கள் எண்டா நல்லா இருக்கும். விழுந்து படுக்க

வேணும் போல இருக்குது. சீ என்ன அநியாயம்?" என்றான். சிவா முதல் முறை தன்னிலை தடுமாறி, உறுதி இழந்து சோகத்தில் தள்ளாடினான். றூபன் இப்படி முடிவு செய்வான் என்பதை யாரும் விளங்கிக் கொள்ளவில்லை. அவன் வருத்தம் அவனது அப்பாவை எண்ணுகிற போதாவது தூர ஒடிப் போய்விடும் என்று எண்ணினார்கள். அது பொய்த்து விட்டது. அவன் தன்னையும் ஏமாற்றி மற்றவர்களையும் ஏமாற்றி விட்டான் என்கின்ற சோகத்தில் அனைவரும் சொல் இழந்தனர்.

தொடரும்...